


# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

**(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)**

**தொலைநிலைக் கல்வி**



# பி.லிட்., (தமிழ்)

## மூன்றாம் ஆண்டு

**தாள் - 1**

# பண்டை இலக்கியம்

**DEC** அங்கீகாரம் பெற்றது

www.mkudde.org

**S2812**

**அன்புள்ள மாணவச் செல்வங்களே,**

வணக்கம்!

பி.லிட். மூன்றாம் ஆண்டில் சேர்ந்து தமிழ் இலக்கியம் பயில வந்துள்ள உங்களை மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் தொலைநிலைக் கல்வித் தமிழ்த்துறை அன்போடு வரவேற்கிறது. இந்த ஆண்டு நீங்கள் ஏழு தாள்கள் படிப்பீர்கள். மூன்றாமாண்டில் 'சுற்றுச்சூழலியல்' என்னும் பாடம் அனைத்துப் பட்ட வகுப்பு மாணவர்களுக்கும் பொதுவான பாடமாகும்.

இந்த ஆண்டில் நீங்கள் படிக்க வேண்டிய பாடங்கள் ஏழு. அவை பின்வருமாறு :

தாள் 1 : பண்டை இலக்கியம்

தாள் 2 : நீதி இலக்கியம்

தாள் 3 : இலக்கணம் 5 : தொல்காப்பியம் – எழுத்ததிகாரம்

தாள் 4 : இலக்கணம் 6 : தொல்காப்பியம் – சொல்லதிகாரம்

தாள் 5 : இலக்கணம் 7 : தொல்காப்பியம் – பொருளதிகாரம்

தாள் 6 : மொழிபெயர்ப்பியல்

தாள் 7 : சுற்றுச்சூழலியல்

உங்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள பாடங்களை நன்கு படியுங்கள். நீங்கள் தானாகவே படித்துப் புரிந்து கொள்ளும் வகையிலேயே பாடங்கள் எளிமையாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. பாடங்களில் உள்ள தன்மதிப்பீட்டு வினாக்களுக்கும், பயிற்சி வினாக்களுக்கும் விடை எழுதிப் பயிலுங்கள். படிக்கும்போது ஐயங்கள் தோன்றின் ஐயத்தைத் தொடர்பு வகுப்புகளில் உங்களுக்குப் பாடம் நடத்தவரும் ஆசிரியரிடம் கேட்டுத் தெளிவு பெறலாம். நன்கு படித்துத் தேர்வில் வெற்றி பெற வாழ்த்துகிறோம். தொடர்பு வகுப்புகளுக்குத் தவறாது வந்து படித்துப் பயன்பெறுக.

பி.லிட். (தமிழ்) மூன்றாமாண்டு

தாள் - 1

# பண்டை இலக்கியம்

## பாடத்திட்டம்

| | | |
|---|---|---|
| கூறு | 1 | ஐங்குறுநூறு – ஒவ்வொரு திணையிலும் பத்துப் பாடல்கள் (மொத்தம் 50 பாடல்கள்) |
| கூறு | 2 | குறுந்தொகை – முதல் 20 பாடல்கள் |
| கூறு | 3 | அகநானூறு – முதல் 5 பாடல்கள் |
| | | நற்றிணை – முதல் 5 பாடல்கள் |
| கூறு | 4 | புறநானூறு – முதல் 20 பாடல்கள் |
| | | பதிற்றுப்பத்து – எட்டாம் பத்தனுள் முதல் இரண்டு பாடல்கள் |
| கூறு | 5 | பத்துப்பாட்டு – நெடுநல்வாடை |

# பண்டை இலக்கியம்

## உள்ளடக்கம்

அலகு - 1

# 1. ஐங்குறுநூறு

குறிப்பு எழுத இடம்

**முன்னுரை**

எட்டுத்தொகை நூல்களின் ஒன்றான ஐங்குறுநூறு திணைக்கு நூறு பாடல்களைக் கொண்டது. மூன்றடிச் சிற்றெல்லையும் ஆறடிப் பேரெல்லையும் கொண்ட பாடல்களைக் கொண்ட நூல் ஆகும். ஐந்து திணைகளில் மருதம், நெய்தல் திணைப் பாடல்களை இவ்வியலில் காண்போம்.

**நோக்கம்**

ஐங்குறுநூறு பாடல்களில் மக்களின் அக வாழ்க்கையைப் பற்றியும், ஐந்திணைகளின் முதல், கரு, உரிப் பொருட்களைப் பற்றி மாணவர்கள் அறிந்து கொள்ளுதலை நோக்கமாக கொண்டுள்ளது.

**அலகு பாட அமைப்பு**

1.1. ஐங்குறுநூறு விளக்கம்
- 1.1.1. ஆசிரியர் குறிப்பு
- 1.1.2. திணை விளக்கம்
- 1.1.3. கருப்பொருள்
- 1.1.4. உரிப்பொருள்

1.2. மருத திணை பாடல்கள் வைப்பு முறை
- 1.2.1. நனைய காஞ்சி சினைய சிறுமீன்
- 1.2.2. பல் இதழ் நீலமொடு நெய்தல் நிகர்க்கும்
- 1.2.3. வித்திய, உழவர் நெல்லோடு பெயரும்
- 1.2.4. பூத்த கரும்பின், காய்த்த நெல்லின
- 1.2.5. முதலைப் போத்து முழுமின் ஆளும்
- 1.2.6. மலர்ந்த பொய்கை முகைந்த தாமரை
- 1.2.7. உளைப்பூ மருதத்துக் கிளைக்குருகு இருக்கும்
- 1.2.8. அலங்கு சினை மா அத்து அணிமயில் இருக்கும்
- 1.2.9. கயல் ஆர் நாரை போர்வில் சேக்கும்
- 1.2.10. பூத்த மா அத்து, புலாஅம் சிறுமின்

1.3. நெய்தல் திணை
- 1.3.1. தாய்க்குரைத்த பத்து
- 1.3.2. நோய்க்கு மருந்து ஆகிய கொண்கன் தேரே
- 1.3.3. இன்புற இசைக்கும் அவர் தேர்மணிக் குரலே
- 1.3.4. தனக்கு அமைந்தன்று இவள் மாமமைக் கவினே

குறிப்பு எழுத இடம்

1.3.5. செல்வக் கொண்கன் செல்வன் அஃது ஊரே

1.3.6. அம்கவிழ் ஆகம் கண்டிசின் நினைத்தே

1.3.7. பொன்னினும் சிவந்தன்று கண்டிசின் நுதலே

1.3.8. துஞ்சாள ஆகுதல் நோகோ யானே

1.3.9. எவன் கொல் மற்று அவன் நயந்த தோளே

1.3.10. பல் நாள் வரும் அவன் அளித்த பொழுதே

1.3.11. ஆங்கும் ஆக்குமோ! வாழிய பாலே ?

1.4. தொகுப்புரை

1.5. தன் மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

1.6. பயிற்சி வினா

பாடம் 1

# ஐங்குறுநூறு

குறிப்பு எழுத இடம்

## 1.1. ஐங்குறுநூறு விளக்கம்

சங்க இலக்கியம் என்பது எட்டுத்தொகை பத்துப்பாட்டு ஆகும். அதில் ஐங்குறுநூறு எட்டுத் தொகையில் ஒன்றாகும் எட்டு தொகை நூல்களாவன.

நற்றிணை, நல்ல குறுந்தொகை, ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து, லுங்கு பரிபாடல்,
கற்றறிந்தார் ஏந்தும் கலியொடு அகம்புறம் என
இத்திறத்த எட்டுத் தொகையாகும்

இதில் ஐங்குறுநுறைப் பற்றி காண்பதே இவ்வியலின் நோக்கம் ஆகும்.

அவற்றுள் அகப்பொருள் குறித்த நூல்கள் ஐந்தனுள் நடுவணதாய்த் திகழ்வது ஐங்குறுநூறு. இந்நூல்கள் ஐந்தனுள் ஐந்திணைப் பாகுபாட்டைத் தனித்தனியாகக் கொண்டு விளங்கும் நூல்கள் ஐங்குறுநூறும் கலித்தொகையுமேயாகும். ஏனைய மூன்று நூல்களிலும் ஐந்திணைகளும் விரவிக் கோக்கப்பட்டுள்ளன. ஐங்குறுநூற்றின் வைப்புமுறை மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை எனப்படும் கலித்தொகையின் வைப்புமுறை பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் எனப்படும்.

இவ்வைந்தனுள் நனிமிகச் சுருங்கிய அடிகளைக் கொண்டது. ஐங்குறு நூறாகும். இதனுள் பாடல்கள் மூன்றடிச் சிற்றெல்லையையும் ஆறடிப் பேறெல்லையையும் உடையன. அகவல் யாப்பிற்குச் சிற்றெல்லை மூன்றடியேயாகும்.

இந்நூலுள் அமையும் பாடல்களைப் பாடியோர் வருமாறு

"மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலன் – கருதிய
பாலையோத லாந்தை பனி முல்லை பேயனே
நூலையோ தைங்குறுநூறு"

இத்தொகை நூலைத் தொகுத்த ஆசிரியர் சங்கப் புலவராகிய புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்பார் தொகுப்பித்தோன் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறை என்னும் சேர வேந்தன்.

ஒவ்வொரு திணைப் பாடல்களும் பத்துப்பத்துப் பாடல்களாகப் பகுத்துப் பாடப் பெற்றுள்ளன. வேட்கை பத்து, வேழப்பத்து, இடைச்சுரப் பத்து, கேடில் பத்து, கிள்ளைப்பத்து, கிழத்தி கூற்றுப் பத்து, செவிலி கூற்றுப் பத்து, தோழி கூற்றுப்பத்து இவ்வாறு பல நிலைகளில் அமைகின்றன.

ஐங்குறுநூற்றுப் பாடல்களை நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் தொல்காப்பிய உரைக்கண் பல இடங்களிலே மேற்கோள் காட்டி விளக்கியுள்ளார்கள். இதனால் இந்நூலின் பெருமை புலனாகும். ஐங்குறுநூற்றிற்கு உரை வேந்தர் ஔவை அ.துரைசாமிப்பிள்ளை உரை வழங்கியுள்ளார். மேலும் கழக வெளியீடாகப் பெருமழைப் புலவர் பொ.வே.சோமசுந்தரனார் உரையும் வெளிவந்துள்ளது.

**தன் மதிப்பீட்டு வினா**

1. ஐங்குறுநூறு விளக்கம் தருக.

ஒவ்வொரு திணையிலும் உள்ள பத்துப் பாடல்கள் நமக்குப் பாடப்பகுதியாகும். ஆக மொத்தம் ஐம்பது பாடல்களை முதற்கண் கற்றுத் தெளிவோம்.

குறிப்பு எழுத இடம்

ஐங்குறு நூற்றுப் பாடல்கள் அகத்துறையைச் சார்ந்தவை ஆகும்.

அகம் : என்பது ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் தம்முட் கூடுகின்ற காலத்துப் பிறந்து அக்கட்டிதின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தந்தமக்குப் புலனாக இவ்வாறிந்ததெனக் கூறப்படாததாய் எஞ்ஞான்றம் உள்ளத்துணர்வாலே நுகரப்படும் இன்பமாகும். இன்பம் பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கத்தைத்தான் அகம் எனக் கூறினார் தொல்லாசிரியர்.

### 1.1.1. ஆசிரியர் குறிப்பு :

ஐங்குறுநூறு பாடிய புலவர்கள்

1) ஓரம்போகியார்
2) அம்மூவனார்
3) கபிலர்
4) ஓதலாந்தையார்
5) பேயனார்

### 1. ஓரம் போகியார் - மருதம்

ஐங்குறுநூற்றில் முதல் நூறாகிய மருதத் திணைப் பாடல்களைப் பாடிய புலவர் ஓரம்போகியார். இவர் பாடிய பாடல்களாக ஐங்குறுநூற்றின் முதல் நூறு பாடல்களும், அகநானூற்றில் 286; 316, ஆகிய இரு மருதத் திணைப் பாடல்களும், குறுந்தொகையில் 10, 70, 122, 127, 384 ஆகிய ஐந்து பாடல்களும், அவற்றில் 10, 127, 384 ஆகிய மூன்று பாடல்களும் மருதத்திணை பற்றியவை நற்றிணையில் 20, 360 ஆகிய இரு பாடல்களையும் பாடி உள்ளார். இரண்டு பாடல்களும் மருதத்திணை பற்றியவை.

புறநானூற்றில் 284ஆம் பாடலைப் பாடியுள்ளார். இவர் பாடிய 110 பாடல்களில் 109 பாடல்கள் அகம் பற்றியவை. ஒரு பாடல் புறம் பற்றிய பாடல். அகம் பற்றிய 109 பாடல்களில் மருதம் பற்றியவை 107 பாடல்கள். ஐங்குறுநூற்றில் 100, அகநானூற்றில் 2, குறுந்தொகையில் 3, நற்றிணையில் 2.

**தன் மதிப்பீட்டு வினா**

2. ஓரம்போகியார் பற்றி குறிப்பு வரைக.

குறுந்தொகையில் ஒரு பாடல் குறிஞ்சி 70, ஒரு பாடல் நெய்தல் 122.

ஓரம்போகியார் என்ற பெயர் ஓரம்போகியர் என்றும், ஓரேர் போகியார் என்றும் சிலபிரதிகளில் உள்ளது. (உ.வே.சா., புறநானூற்று பதிப்பு தமிழ் பல்கலைக் கழகம் 1985, பக்.30), மருதத் திணைப் பாடல்கள் மிகுதியாகப் பாடியவர். தமிழ் நாட்டு அரசர் மூவராலும் பிற புலவர்களாலும் நன்கு மதிக்கப் பெற்றவவர். இவரால் பாடப் பெற்றோர், சேர அரசன் ஆதவன் அவினி, சோழன் அரசன் கடுமான் கிள்ளை, பாண்டியன் மத்தி, வீராஅன், இவர் பாடல்களின் வந்துள்ள ஊர்கள், ஆமூர், இருப்பை, கழார் தேனூர், என்பன நதிகள், காவிரி, வையை என்பன. இந்திர விழா பற்றிப் பாடியுள்ளார். தை நீராட்டல் பற்றிய குறிப்பு இவர் பாடலில் உள்ளது.

இவரால் குறிக்கப் பெற்ற முடிமன்னர் மூவர் 1. சேர அரசர்களில் ஆதவன் அவின என்பவன் (முதற்பத்து), 2. வெல் வோர்ச் சோழன் கடுமான் கிள்ளை (56, 78), 3. பாண்டியன் (54) புரவலர் இருவர் – 1, விரா அன் (58) 4. மத்தி (61).

குறிப்பு எழுத இடம்

## 2) அம்மூவனார் - நெய்தல்

இவர் இயற்பெயர் மூவன் என்றும் சிறப்பு ஆர் விகுதியோடு மூவனார் எனவும், அம் என்ற முன்னொட்டையும், இணைத்து அம்மூவனார் என்று அழைக்கப் பெறுகிறார்.

இவர் பாடியனவாக ஐங்குறுநூற்றில் உள்ள நூறு பாடல்கள் போக அகநானூற்றில் 10, 35, 140, 280, 370, 390 ஆகிய ஆறு பாடல்களும், கறந்தொகையில் 49, 125, 163, 303, 306, 308, 327, 340, 351, 397, 401 ஆகப் பதினொரு பாடல்களும், நற்றிணையில் 4, 35, 76, 138, 275, 307, 315, 327, 395, 397. ஆகப் பத்துப்பாடல்களும் மொத்தம் 127 அகப்பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுள் பாலைப் பாடல்களாக, அகம் 35, நற். 76, 397 இம்மூன்று பாடல்களைத் தவிர அனைத்தும் நெய்தல் பாடல்களே, நெய்தல் பாடுவதில் இவர் வல்லவர் என்பது இதிலிருந்து தெரிகிறது. அதோடு இவர் ஊர் கடற்கரையைச் சார்ந்து இருக்க வேண்டும் என்றும் உணருகிறோம்.

இவற்றுள் இவர் பாடிய தொண்டிப்பத்து அந்தாதி அமைப்பில் உள்ளது.

## 3. கபிலர் - குறிஞ்சி

சங்கத் தொகை நூல்களில் மிகுதியான பாடல்களைப் பாடியவர். குறிஞ்சிக்கு கபிலர் என்ற வழக்கு உண்டு. பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டைப் பாடியவர் கபிலர். அவர் பாடிய பாடல்களில் மிகுதியானவை, குறிஞ்சித் திணை பற்றிய பாடல்கள் கலித்தொகையில் குறிஞ்சிக் கலியைப் பாடியவர்.

கபிலர் பற்றிய கதைகள் மிகுதியாக உள்ளன. அவ்வையார் முதலிய எழுவருடன் பிறந்தவர் ஒருவர் கபிலர். ஆதிபகவானே இவர் தாய் தந்தையர் என்று கூறும் கதைகள் எற்கத்தகுந்தன அல்ல. கபிலர்கள் பலர் இருந்து உள்ளனர். பிற்காலத்தில் தோன்றிய, அகவல் எழுதிய கபிலர் வேறு, திருவிளையாடற்புராணம், பாண்டியன் நாட்டில் திருவாதவூரில் பிறந்தவர் கபிலர் என்றும் கூறுவர். சோழமண்டல சதகம் இவர் சோழ நாட்டில் பிறந்தவர் என்று கூறுகிறது சங்ககாலக் கபிலர் சிற்றரசனாகிய வேள்பாரியின் மிக நெருங்கிய நண்பர். பாரி காலமான பின்பு பாரி மகளிரை அழைத்துக் கொண்டு அவர்களுக்குத் திருமணம் செய்ய பல சிற்றரசர்களைப் பார்த்தார் என்பது அவர் பாடல் வழி தெரிகிறது.

செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ் கபிலன் (புறம் 53–11–12)

என்று பொருந்தில் இளங்கீரனாரும்,

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

3. அம்மூவனார் குறிப்பு வரைக ?
4. கபிலர் குறிப்பு வரைக

குறிப்பு எழுத இடம்

"புலனழுக்கற்ற அந்தணாளன் (புறம்–126, 11)
பொய்யா நாவிற் கபிலன் (புறம் – 174, 10)

என்று மாறோக்கத்து நப்பசலை யாரும்.

"உலகுடன் திரிதரும் பலர் புகழ் நல்லிசை
வாய் மொழிக் கபிலன்" (அகம்–78, 15–16)

என நக்கீரரும்

நல்லிசைக் கபிலன் (பதிற்று 85)

என்று பெருங்குன்றூர் கிழாரும், சங்க காலப் புலவர்கள் பலர் கபிலரைப் பாடியுள்ளனர்.

"யானே பரிசிலன் மன்னும் அந்தணன் (புறம் 2007–13)

"அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே (புறம் 201–7)

என தம்மைப் பற்றி கபிலரே குறிப்பிடுகிறார். அதனால் அவர் அந்தணர் குலத்தைச் சார்ந்தவர் என்பது தெளிவாகிறது.

### 4. ஓதலாந்தையார் - பாலை

இந்நூலின் நான்காவது நூறாகிய பாலை திணை பாடிய புலவர் ஓதலாந்தையார். இவர் பாடியனவாக ஐங்குறு நூற்றில் 100 பாடல்கள் போக குறுந்தொகையில் 12, 21, 329 ஆகிய மூன்று பாடல்களும் காணப் பெறுகின்றன. இதில் குறுந்தொகை 21 ஆம் பாடல் முல்லைத் திணை பற்றியது. ஏனைய அனைத்தும் பாலைப் பற்றியன. ஆதன் தந்தை ஆந்தையென்று மருவிவரும் என்பது பழைய உரையாசிரியர்களில், கொள்கை. ஓதல் ஓதுவித்தல் என்பன கற்றல் கற்பித்தல் என்ற பொருளில் அமையும். கற்பதில் வல்லவராக ஓதலாந்தையார் இருந்திருக்கலாம்.

### 5. பேயனார் - முல்லை

ஐங்குறுநூற்றில் முல்லைத் திணைப் பாடல்கள் 100 போக அகநானூற்றில் 234ஆம் பாடலையும், குறுந்தொகையில் 233, 339, 359, 400 ஆகிய 4 பாடல்களையும் பாடியுள்ளார். அவற்றுள் குறு 339. குறிஞ்சித்திணைப் பாடல்கள். குறு–359, மருதத்திணைப் பாடல், ஏனைய அனைத்தும் முல்லைத்திணைப் பாடல்களே.

### 1.1.2. திணை விளக்கம்

மருதத் திணைக்கு, முதற் பொருள், வேந்தன் மேய தீம்புனல் உலகம் எனப்படும் நீரும் நீர்சார்ந்த வைப்புமாகிய மருதநிலமும், அறுவகைப் பெரும் பொழுதுகளும் வைகறை என்னும் சிறு பொழுதும் ஆகிய காலங்களுமாம்.

### 1.1.3. மருதக் கருப்பொருள்கள்

உணா–செந்நெல்லும், வெண்ணெல்லும், மா–எருமையும் நீர் நாயும், மரம்–வஞ்சியும் காஞ்சியும் மருதமும், புள்–தாராவும், நீர்க்கோழியும், பறை–மணமுழவமும் நெல்லரி கிணையும்; செய்தி–நடுதலுங் களைகட்டலும், அரிதலும் கடாவிடுதலும், யாழ்–மருதயாழ், பூ–தாமரை கழுநீர் முதலியன; நீர்–யாற்று நீரும் மனைக்கிணறும் பொய்கையும் முதலியன ஊர்–ஊர்கள் என்பவை.

குறிப்பு எழுத இடம்

### 1.1.4. மருதத்திணை உரிப்பொருள்

ஊடலும் ஊடனிமித்தமுமாம். இனி இவற்றுள், செய்யுட்குத் திணை ஆராய்ந்து கொள்ளுங்கால், முதல், கரு, உரி, என்னும் மூன்றம் வந்துழி முதற் பொருளானும், முதற் பொருளின்றிக் கருவும் உரியும் வரின் கருப்பொருளானும் அவ்விரண்டு மன்றி உரிப்பொருளன்றே வரி அதனானம் திணைகண்டு கொள்ளல் வேண்டும். இவற்றுள் ஒரு நிலத்தில் ஏனை நிலத்துக்குரிய கருவும் உரியும் வருதலும் உண்டு. ஆனால் நிலம் மட்டும் விரவி வ்ருதல் இல்லை என்றுணர்தல் வேண்டும்.

வேட்கைப்பத்து என்பது வேட்கையைப் பற்றி கூறிய பத்து என விரியும் இதில் தலைவனுக்குத் தனது வேட்கையையும், தலைவியின் வேட்கையையும் கூறுகின்றாள். ஆதலின் இப்பெயர் பெற்று நின்றது.

வேட்கைப் பத்திலுள்ள பாக்கள் எல்லாம் தோழி கூற்றாகவே தோன்றுகின்றன என்றாலும், முன் ஐந்து பாக்களின் துறை வேறாகவும் ப்ின் ஐந்துபாக்களின் திறை வேறாகவும் அமைந்திருக்க காண்கிறோம்.

முதல் ஐந்து பாட்டுக்கள் கற்பினும் ஏனைய ஐந்து பாட்டுகள் களவினும் நிகழ்ந்தனவாகும். வேட்கையாவது பொருள்களின் மேல் செல்லுகின்ற பற்றுள்ளம். இங்கு அஃது அப்பற்றுள்ளத்தினால் நிகழ்ந்த ஒழுக்கத்தின் மேற்று.

### 1.2.1. நனைய காஞ்சி சினைய சிறுமீன்

கூற்று : தோழி தலைவனுக்கு கூறியது.

திணை : மருதம்.

துறை : புறத்தொழுக்கத்திலே நெடுநாள் ஒழுகி, 'இது தகாது' எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு, தலைவியோடு கூடி ஒழுகா நின்ற தலைமகன் தோழியோடு சொல்லாடி, யான் அவ்வாறொழுக, நீயீர் நினைத்த திறம் யாது ? என்றாற்கு அவள் சொல்லியது,

"வாழி அதன், வாழி அவினி!
நெல்பல பொலிக! பொன்பெரிது சிறக்க!
என வேட் ட்டாளே! யாயே; யாமே,
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்!
யாணர் ஊரன் வாழ்க!
பாணனும் வாழ்க" எனவேட் டேமே.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

5. மருதத்திணையின் முதல் பொருள் யாது ?
6. நனையகாஞ்சி சினைய சிறுமின் விளக்குக ?

குறிப்பு எழுத இடம்

தாயின் விருப்பத்தையும் – தோழி, தலைவியர் விருப்பத்தையும் கூறுவதால் வேட்கைப் பத்தாயிற்று.

(அ–ள்) ஆதன்–சேரர் கூடிப்பெயர், அவினி–இயற்பெயர், ஆதன் ஆவினி சேர அரசர்களுள் ஒருவன் வேட்டல்–விரும்புதல், யாய்–தாய், காஞ்சி–ஆற்றுப் பூவரச, நனை–அரும்புகள், நனை+அ–நனைய, அ–ஆறாம் வேற்றுமைப் பன்மை உருபு சினை – முட்டைகள், யாணர் – புது வருவாய், ஊரன்–மருத நிலத்தலைவன்.

**கருத்துரை**

எங்கள் தாய் சேர அரசன் சிறப்பாக வாழ்க அவன் நாட்டில் நெல் மிகுதியாக விளையாட்டும் பொன் மிகுதியாகக் கிடைக்கட்டும் என்று விரும்பினாள் – நாங்கள் தலைவனும் பாணனும் சிறப்பாக வாழட்டும் என்று வேண்டினோம். மிகுதியான அரும்புகளை உடைய ஆற்றுப் பூவரசு மரத்தினையும் மிகுதியான முட்டைகளையுடைய மீன் வளத்தினையும் புதிய வருவாயினையும் உடைய எங்கள் தலைவன் பாணனுடன் சிறப்பாக வாழ்க என்று விரும்பினோம். யாய்–என்பதைத் தாய் என்று கொள்வதே பொருந்தும் தலைவி என்று பொருள் கூறுதல் சிறப்பாகத் தோன்றவில்லை – யாம் என்பது தோழியையும் தலைவியையும் உட்படுத்திய பன்மைச் சொல்.

### 1.2.2. பல் இதழ் நிலமொடு நெய்தல் நிகர்க்கும்

கூற்று : தோழி கூற்று திணை : மருதம்

துறை : புறத்தொழுக்கத்திலே நெடுநாள் ஒழுகி, இது தகாது எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு, தலைவியோடு கூடி ஒழுகா நின்ற தலைவன் தோழியோடு சொல்லாடி – யான் அவ்வாறொழுக, நீயீர் நினைத்த திறம் யாது ? என்றாற்கு அவள் சொல்லியது.

வாழி ஆதன், வாழி அவினி!
விளைக வயலே! வருக இரவலர்!
எனவேட் டோளே; யாயே; யாமே
**'பல் இதழ் நீலமொடு நெய்தல் நிகர்க்கும்**
தண்டுறை ஊரன் கேண்மை
வழிவழிச் சிறக்க' என வேட் டேமே

**தன் மதிப்பீட்டு வினா**

7. புறவொழுக்கத்தில் நெடுநாள் நின்ற தலைவிக்கு தோழி கூறியது ?

(அள்) இரவலர் – பொருள் பெறுவோர், கேண்மை–காதல் உறவு.

**கருத்துரை**

எங்கள் தாய் சேரமன்னனாகிய ஆதன் அவினி நீண்ட நாள் சிறப்பாக வாழ்க. எங்கள் நாட்டில் வயல்கள் மிகுதியாக விளைவைத் தரட்டும், பொருள்களைப் பெற்றுக் கொள்வதற்கு இரவலர் வரட்டும் என்று விரும்பினாள். எங்கள் குளிர்ச்சி பொருந்திய நீர்த்துறைகளையுடைய மருத நிலத் தலைவன் காதல் உறவு பல பிறவிகளிலும் தொடரட்டும் என்று விரும்பினாள். மருத நிலத்தில் நீலமலர்கள் மிகுதியாக மலர்ந்துள்ளன. அவை நெய்தல் மலர்களை ஒக்கும்.

### 1.2.3. வித்திய உழவர் நெல்லோடு பெயரும்

கூற்று : தோழி கூற்று மருதம் : திணை

துறை : புறவொழுக்கதிலே நெடுநாள் நின்ற தலைவனுக்கு தோழி கூறியது.

குறிப்பு எழுத இடம்

வாழி ஆதன், வாழி அவினி,
பால் பல ஊறுக! பகடு பல சிறக்க!
என வேட் டோளே; யாயே; யாமே,
வித்திய, உழவர் நெல்லோடு பெயரும்
பூக்கஞல் ஊரன் தன் மனை
வாழ்க்கை பொலிக எனவேட் டேமே'

(அ–ள்) பகடு–எருது, எருமைக்கடா, கஞல்–மிகுதி, வித்திய–விதைத்த.

**கருத்துரை**

எங்கள் சேர அரசன் ஆதன் ஆவினி சிறப்பாக வாழ்க. நாட்டில் பால்வளம் மிகுதியாகட்டும், உழவுக்குரிய காளை, எருமைக்கடாக்கள் சிறக்கட்டும் என்று விரும்பினாள் தாய், நாங்கள் விதைத்த உழவர்கள் நெல்லூடன் வீட்டிற்கத் திரும்புவர். மருத நிலத்தில் மலர்கள் மிகுதியாகப் பூக்கின்றன. எங்கள் தலைவன் இல்லற வாழ்க்கை சிறப்பாகப் பொலியட்டும் என நாங்கள் விரும்புகிறோம்.

### 1.2.4. பூத்த கரும்பின், காய்த்த நெல்லன்

கூற்று : தோழி திணை : மருதம்

துறை : புறத்தொழுக்கத்திலே நெடுநாள் ஒழுகி நின்ற தலைவனுக்கு தோழி சொல்லியது.

வாழி ஆதன், வாழி அவினி!
பகைவர்புல் ஆர்க! பார்ப்பார் ஓதுக!
என வேட் டோளே; யாயே; யாமே,
பூத்த கரும்பின், காய்த்த நெல்லின்
கழனி ஊரன் மார்பு
பழனம் ஆகற்க; என வேட்டேமே.

(அள்) ஆர்க–உண்ணுக, கழனி–வயல், பழனம்–ஊர்ப் பொது நிலம்.

**தன் மதிப்பீட்டு வினா**

8. பூத்த கரும்பின் காய்ந்த நெல்லின பாடல் விளக்குக.

**கருத்துரை**

எங்கள் மன்னன் ஆதன் ஆவினி சிறப்பாக வாழ்க. அவன் பகைவர் புல் உணவை உண்ணுக. அந்தணர் வேதம் ஓதுவார்களாக என்று தாய் விரும்பினாள். தலைவன் நாட்டில் கரும்பும் நெல்லும் மிகுதியாக விளைந்தன. அவன் மார்பு பொது நிலம் ஆகக் கூடாது என்று நாங்கள் விரும்பினோம்.

குறிப்பு எழுத இடம்

### 1.2.5. முதலைப் போத்து முழுமீன் ஆளும்

கூற்று : தோழி கூற்று. திணை : மருதம்

துறை : புறத்தொழுக்கத்திலே நெடுநாள் ஒழுகி 'இது தகாது' எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியோடு கூடி ஒழுகா நின்ற தலைமகன் தோழியோடு சொல்லாடியான் அவ்வாறொழுக, நீயிர் நினைத்த திறம் யாது? என்றாற்கு அவள் சொல்லியது

"வாழி ஆதன், வாழி அவினி!
பசிஇல் ஆகுக! பிணிசேண் நீங்குக!
எனவேட் டோளே, யாயே; யாமே,
' முதலைப் போத்து முழுமீன் ஆளும்
தண்துறை ஊரன் தேர் எம்
முன்கடை நிற்க' என வேட் டேமே.

(அ–ள்) ஆரும் – உண்ணும், பிணி–நோய், சேண்–தொலைவு முன்கடை–முற்றம்.

#### கருத்துரை

மன்னன் ஆதன் அவினி வாழ்க, இந்நாட்டில் பசி இல்லாதிருக்க நோய்கள் அகலுக எனத்தாய் விரும்பினாள். ஆண் முதலை நன்கு வளர்ந்த முழுமீனை உண்ணும் மிகுந்த வளமுடைய எங்கள் தலைவன் தேர் எம் வீட்டு முற்றத்தில் நிற்கட்டும் என நாங்கள் விரும்பினோம்.

### 1.2.6. மலர்ந்த பொய்கை முகைந்த தாமரை

கூற்று : தோழி திணை : மருதம்

துறை : களவினிற் பலநாளொழுகி வந்து வரைந்து கொண்ட தலைமகன் தோழியோடு சொல்லாடி யான் வரையாது ஒழுகுகின்ற நாள் நீயிர் இங்கு இழைத்திருந்த திறம் யாது என்றாற்க அவள் சொல்லியது.

'வழி ஆதன், வாழி அவனி!
வேந்து பகை தணிக! ஆண்டுபல நந்துக!
எனவேட் டோளே, யாயே : யாமே,
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்துறை, உரன் வரைக!
எந்தையும் கொடுக்க, என வேட் டேமே.

(அ–ள்) எந்தையும் கொடுக்க! என வேட் டேனே நந்துதல் – வளர்தல், முகைதல்–மலர்தல், வரைக–மணம் முடிக்க.

#### கருத்துரை

மன்னன் ஆதன் அவினி சிறப்பாக வாழ்க. அவனது பகையுணர்வு தணியட்டும். அவன் வாழும் ஆண்டுகள் மிகக என்ற தாய் விரும்பினாள். மலர்ந்த தாமரைப் பொய்கையுடைய துறைவன் மணந்து கொள்ளட்டும். எந்தையும் திருமணம் செய்து கொடுக்கட்டும்.

### 1.2.7. உளைப்பூ மருதத்துக் கிளைக்குருகு இருக்கும்

கூற்று : தோழி மருதம் : திணை

துறை : களவினிற் பலநாளொழுகி வந்து வரைந்து கொண்ட தலைமகன் தோழியோடு சொல்லாடி நின்றது.

குறிப்பு எழுத இடம்

'வாழி ஆதன், வாழி, அவினி,
அறம் நனி சிறக்க அல்லது கெடுக!'
என வேட் டோளே, யாயே! யாமே,
உளைப்பூ மருதத்துக் கிளைக்குருகு இருக்கும்
தண்துறை ஊரன் தன் ஊர்க்
கொண்டனன் செல்க! என வேட் டேமே.

(அ–ள்) நனி–மிகுதி, அல்லது தீமையானது, உளை–பூவின் உள்ளிருக்கும் மகரந்த இழைகள், கிளை–சுற்றம், குருகு–நாரை.

**கருத்துரை**

மன்னன் ஆதன் அவினி சிறப்பாக வாழ்க. அறம் செழிக்கட்டும் தீவினை நீங்கட்டும் எனத் தாய் விரும்பினாள். மருத மரத்தில் சுற்றத்துடன் இருக்கும் நாரைகளையுடைய எங்கள் தலைவன் ஊருக்குத் தலைவியைக் கொண்டு சென்று சிறப்பாக வாழ்க என நாங்கள் விரும்பினோம்.

### 1.2.8. அலங்கு சினை மா அத்து அணி மயில் இருக்கும்

கூற்று : தோழி திணை : மருதம்

துறை : களவினிற் பல நாளொழுகி வந்து வரைந்து கொண்ட தலைமகன் தோழியோடு சொல்லாடி நின்றது

'வாழி ஆதன் வாழி அவினி
அரசுமுறை செய்க! களவு இல் ஆகுக!
என வேட் டாளே, யாயே; யாமே
'அலங்கு சினை மா அத்து அணி மயில் இருக்கும்
பூக்கஞல் ஊரன் சூள் இவண்
வாய்ப்பதாக!' என வேட் டேமே

(அ–ள்) அலங்கு–அசைதல், அலங்கு சினை–அசைகின்ற தளிர், பூக்கஞல்–பூக்கள் நிரம்பிய, மா அத்து–மா மரத்தின் மீது, அணிமயில்–அழகான மயில், சூள்–உறுதி மொழி, சபதம்.

**கருத்துரை**

மன்னன் ஆதன் அவினி சிறப்பாக வாழ்க நீதி முறை செய்யட்டும், களவில்லாமல் சத்தியமாக ஆகுக எனத் தாய் விரும்பினாள். பூக்கள் நிரம்பிய மாமரத்தின் மீது அழகான மயில்கள் வாழும் தலைவனின் சூளுரை மெய்யாகட்டும் என நாங்கள் விரும்பினோம்.

குறிப்பு எழுத இடம்

### 1.2.9. கயல் ஆர் நாரை போர்வில் சேக்கும்

கூற்று : தோழி திணை : மருதம்

துறை : களவினிற் பலநாளொழுகி வந்து நின்ற தலைமகனிடம் தோழி சொல்லியது.

வாழி ஆதன், வாழி அவனி!
நன்று பெரிது சிறக்க! தீது இல்லாகுக!
என வேட் டோளே, யாமே; யாமே,
'கயல் ஆர் நாரை போர்வில் சேக்கும்
தண்துறை ஊரன் கேண்மை
அம்பல் ஆகற்க!' என வேட் டேமே

(அ–ள்) கயல்–மீன், ஆர்தல்–உண்ணுதல், போர்வில்–வைக்கோல் போர், சேக்கும்–தங்கும், கேண்மை–நட்பு, அம்பல்–பழிச் சொல்.

**கருத்துரை**

மன்னன் ஆதன் அவினி சிறப்பாக வாழ்க. நன்மை பெரிதும் வளரட்டும் தீமை அகலட்டும் என்ற தாய் விரும்பினாள், கயல்மீனை உண்டு வைக்கோல் போரில் தங்கும் நாரையையுடைய மருத நிலத் தலைவனின் நட்பு பிறர் பழிச்சொல் கூறாத வகையில் அமையட்டும் என நாங்கள் விரும்பினோம்.

### 1.2.10. பூத்த மா அத்து, புலால் அம், சிறுமீன்

கூற்று : தோழி மருதம் : திணை

துறை : களவொழுக்கத்தில் ஈடுபட்டு மீண்டு வந்த தலைமகனிடம் தோழி சொல்லாடியது.

வாழி ஆதன், வாழி ஆவினி!
மாரி வாய்க்க வளம் நனி சிறக்க!
என வேட் டோளே, யாயே; யாமே,
'பூத்த மா அத்து, புலாஅம் சிறுமீன்
தண்துறை ஊரன் தன்னொடு
கொண்டனள் செல்க' என வேட்டேமே

(அ–ள்) மாரி–மழை, புலால்–நாற்றம்

**கருத்துரை**

மன்னன் ஆதன் அவினி சிறப்பாக வாழ்க மழை பொழிக வளம் மிகுதியாக சிறக்கட்டும் என்று தாய் விரும்பினாள். பூக்களுடைய மாமர மணமுடைய குளிர்ந்த நீர்த் துறையுடைய தலைவனுடன் புலால் நாற்றமுடைய ஊரனுடன் தலைவியை மணந்து மகிழ்க என்று விரும்பினோம்.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

9. களவினிற் பலநாளொழுகி வந்து நின்ற தலைமகனுக்கு தோழி கூறியது யாது?
10. களவொழுக்கத்தில் ஈடுபட்டு மீண்டு வந்த தலைமகளின் தோழி கூறியது யாது?

## 1.3. நெய்தல் திணை

திணை விளக்கம் : நெற்தற்றிணைக்கு உரிய உரிப்பொருள், இரங்குதல் என்னும் ஒழுக்கமாகும். அதன் நிமித்தங்களும் அதன்பாற்படும். எனவே இரங்கலும் இரங்குதல் நிமித்தமும் நெய்தல் என்க.

குறிப்பு எழுத இடம்

இத்திணைக்கு முதற்பொருள், கடலும் கடல் சார்ந்த இடமும் ஆகிய நிலமும், காலம் அறுவகைப் பெரும் பொழுதும் மாலை என்னும் சிறு பொழுதும்மாம். இனி, சிறு பொழுதினை ஏற்பாடு என்று ஆசிரியர் தொல்காப்பியனார் குறியீடு செய்துள்ளார். ஏற்பாடு என்னுமீச் சொற்குக் கதிர் மறையும் மாலை எனச் சிலரும் கதிர் தோன்றும் காலை எனச் சிலரும் பொருள் கூறுவாராயினர். மாலை என்பதே பெரு வழக்கம்.

இனி நெய்தற்குக் கருப்பொருள் வருமாறு தெய்வம், வருணன், உணவு, மீன் விலையும், உப்பு விலையும், மா–உமண் பகடு போல்வன, மரம், புன்னையும் ஞாழலுங் கண்டலும், புள் அன்னமும், அன்றிலும் முதலியன பறை – மீன் கோட்பறை செய்தி மீன்படுத்தலும் உப்பு விளைத்தலும் அவை விற்றலும், யாழ் நெய்தல் யாழி, பூ, கைதையும், நெய்தலும் நீர்–மணற் கிணறும் உவர்க்குழியும் ஊர் பட்டினமும் பாக்கமும்.

### நெய்தல் பாடல்கள்

### 1.3.1. தாய்க்குரைத்த பத்து

அஃதாவது தோழி தன் தாயாகிய செவிலித்தாய்க்கு அறத்தொடு நிலை வகையாற் கூறிய பத்துச் செய்யுள்களின் தொகுதி என்றவாறு, ஈண்டுத்தாய் என்றது செவிலித் தாயை என்னை ?

"ஆய்பெருஞ் சிறப்பி னறாமறை கிளத்தலின்
தாயெனப் படுவோர் செவிலி யாகும்" (தொல். கள:33)

என்ப தோத்தாகலின் என்க. இதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர். "தாய்த்தாய்க் கொண்டு உயிர் ஒன்றாய் வருகின்றா ரென்ற ஆராய்ந்து துணியப்பட்ட பெருஞ்சிறப்பு காரணமாக, கூறுதற்கரிய மறைப்பொருளெல்லாங் குறிப்பானன்றிக் கூற்றாற் கூறத்தக்காளாதலின் தாயெனச் சிறப்பித்துச் சொல்லப்படுவாள் செவிலியேயாம் என்றவாறு" என்றும், எனவே ஈன்ற தர்யினும் களவின்கட் சிறந்தாள் இவள் என்றாள். கற்பிற்கு இருவரும் ஒப்பாயிற்று. செவிலி சிறந்தமை சான்றோர் செய்யுளுட் பலருங் கூறியவாறு காண்க", என்று உணர்த்திய நல்லுரையும் நோக்குக.

**தன் மதிப்பீட்டு வினா**

11. நெய்தல் திணை விளக்கம் தருக. தாய்க்குரைத்த பத்து விளக்குக.

### 1.3.2. நோய்கு மருந்து ஆகிய கொண்கன் தேரே

கூற்று : தோழி திணை : நெய்தல்

துறை : அறத்தொடு நின்ற பின்னர் வரைதற் பொருட்டுப் பிரிந்த தலைமகன் வரைவோடு புகுந்த வழி, அதனைத் தோழி செவிலிக்குக் காட்டிச் சொல்லியது

குறிப்பு எழுத இடம்

"அன்னை வாழி வேண்டு அன்னை! உதுக்காண்
ஏர் கொடிப் பாசகும்பு பரிய ஊர்பு இழிபு
நெய்தல் மயக்கி வந்தன்று, நின்மகள்
பூப்போல் உண்கண் மரீஇய
நோய்கு மருந்து ஆகிய கொண்கன் தேரே"

தோழி செவிலித்தாய்க்கு உரைத்த பத்துப் பாடல்கள் அன்னை என்றதால் செவிலித் தாயைக் குறிக்கும்.

(அ–ள்) உதுக்கண்–அது, இது என்பதற்கிடைப்பட்ட சுட்டு ஏர் கொடிப் பாசடும்பு–நீண்டு வளரும் நெய்தல் நில பசிய அடப்பங்கொடி, உர்பு இழிபு–ஊர்ந்து எறிஇறங்கி, சொண்கண்–மணந்து கொள்ளும் நெய்தல் நிலத் தலைவன்.

**கருத்துரை**

அன்னாய் வாழிவேண்டு அன்னை எல்லாப் பாடல்களிலும் அழைக்கும் தொடராக அமையும் அன்னையே வாழ்க நான் சொல்வதை விரும்பிக் கேட்பாயாக உன் மகளின் மையுண்ட கண்கள் நெய்தல் மலர் போன்றவை. அவள் கண்களில் படர்ந்துள்ளன. பசலை நோய்க்கு மருந்து நெய்தல் தலைவனாகிய கொண்கனின் தேர். அத்தேர் அழகிய பசிய அடும்பஞ்கொடியை அறுத்து மேலேறி வளர்ந்து வருவதைப் பார்.

## 1.3.3. இன்புற இசைக்கும் அவர் தேர்மணிக் குரலே

கூற்று : தோழி திணை : நெய்தல்

துறை : இதுவுமது

"அன்னை வாழி! வேண்டு அன்னை! நம் ஊர்
நீல்நிறப் பெருங்கடல் புள்ளின் ஆனாது
துன்புறு துயரம் நீங்க,
இன்புற இசைக்கும் அவர் தேர்மணிக் குரலே

(அ–ள்) புள்–பறவை, ஆனாது–இடைவிடாது

**கருத்துரை**

அன்னையே வாழ்க! நான் சொல்வதைக் கேள் நானும் நீயும் உன் மகளும் வருந்தும் துயரம் நீங்குமாறு தலைவன் ஊர்ந்து வரும் தேரின் மணிகளின் இனிய ஒலி நம் ஊர்க்கடற்பறவைகளின் இடைவிடாத ஒலி போல இடைவிடாது ஒலிக்கின்றது.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

12. பாசலை நோய்க்கு மருந்தாக கூறுவது யாது ?
13. தேரின் மணியை எவற்றோடு ஒப்பிடுகிறாள் ?

## 1.3.4. தனக்கு அமைந் தன்று இவள் மாமமைக் கலினே

கூற்று : தோழி திணை : நெய்தல்

துறை : அறத்தோடு நின்ற தோழி வதுவைவிழா நிகழா நின்றுழித் தாய்க் காட்டி உவந்து சொல்லியது

"அன்னை வாழி! வேண்டு அன்னை! புன்னை யொடு
ஞாழல் பூக்கும் தண்ணம் துறைவன்
இவட்டு அமைந் தன்னால் தானே
தனக்கு அமைந் தன்று இவள் மாமமைக் கலினே"

(அ–ள்) ஞாழல் – நெய்தல் நிலமரம், புலி நகக் கொன்றை மாமை – மாந்தளிர் போன்ற கவின் – அழகு.

**கருத்துரை**

அன்னையே வாழ்க! நான் சொல்வதை விரும்பிக்கேள், புன்னையும் ஞாழலும் பூக்கின்ற குளிர்ந்த அழகிய நெய்தல் நிலத்தலைவன் அவன் நம் துறைவன் அவன் இவளுக்காக அமைந்ததனால் இவளது அழகும் மாந்தளிர் போன்ற மேனியும் அவனுக்காகவே அமைந்துள்ளது.

### 1.3.5. செல்வக் கொண்கன் செல்வன் அஃது ஊரே

கூற்று : தோழி திணை : நெய்தல்

துறை : புதல்வற் பெற்றுழித் தலைமகன் மனைக்கட் சென்ற செவிலிக்கு முன்பு அறத்தோடு நின்ற வதுவை காட்டிய தோழி அவன் ஊர் நன்மை காட்டிச் சொல்லியது.

"அன்னை, வாழி! வேண்டு அன்னை! நம் ஊர்ப்
பலர்மடி பொழுதின் நலம்மிகச் சாஅய்
நள்ளென வந்த இயல்தேர்ச்
செல்வக் கொண்கன் செல்வன் அஃது ஊரே"

(அ–ள்) மடி–உறங்குதல், சா–அய்–மிகவும் மெலிவுற்று, நள்ளென–ஓசைகுறித்தது, செறிவு, கொண்கன்–நெய்தல் நிலத்தலைவன்.

**கருத்துரை**

அன்னையே நீ வாழ்க, நான் கூறுவதைக் கேள் களவுக் காலத்தில் நம் ஊரில் எல்லோரும் ஆழ்ந்து உறங்கும் சாமத்தில் மிகவும் மெலிவுற்ற விரைவில் தன் தேரில் வந்தான். செல்வமிக்க கொண்கனின் ஊர் அது.

### 1.3.6. பொன்னினும் சிவந்தன்று; கண்டிசின் நுதலே

கூற்று : தோழி திணை : நெய்தல்

துறை : அறத்தோடு நின்றபின் வேண்டுவன தளுதற்குப் பிரிந்த தலைமகன் வரைவொடு வந்துழி, தலைமகள் நுதற்கண் முன்புள்ள பசப்பு நீங்கும் வண்ணம் தோன்றிய கதிர்ப்புக் காட்டிய செவிலிக்குத் தோழி சொல்லியது.

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

14. வதுவை விழா நிகழா நின்றுமிழ் தாய்க்கு தோழி கூறியது யாது ?
15. பொன்னைவிட சிறந்தது எது என்று தோழி கூறியது யாது ?

"அன்னை வாழி வேண்டு அன்னை! முழங்கு கடல்
திரைதரு முத்தம் வெண்மணல் இமைக்கும்
தண்ணம் துறைவன் வந்தெனப்
பொன்னினும் சிவந்தன்று; கண்டிசின் நுதலே

குறிப்பு எழுத இடம்

(அ–ள்) அன்னையே நீ வாழ்க. நான் கூறுவதைக் கேட்பாயாக ஒலிக்கின்ற கடல் அலைகள் திரைகளத்துக் கொண்டு வந்த முத்துகள் வெண்மணலில் ஒளிரும், குளிர்ச்சி பொருந்திய துறைவனாகிய நம் தலைவன் வந்ததால் பசலைநிறம் மாறி நம் தலைவியின் நெற்றி பொன்னைவிடச் சிறந்ததைக் காண்பாயாக.

### 1.3.7. துஞ்சாள் ஆகுதல் நோகோ யானே

கூற்று : தோழி திணை : நெய்தல்

துறை : இஃது தோழி செவிலிக்கு அறத்தொடு நின்ற நிலை குறித்துக் கூறியது.

அன்னை, வாழி! வேண்டு அன்னை! என் தோழி
சுடர் நுதல் பசப்பச் சாஅய், படர் மெலிந்து,
தண்கடல் படுதிரை கேட்டொறும்,
துஞ்சாள் ஆகுதல் நோகோ யானே

(அ–ள்) சாஅய் – இளைத்து, படர்–நினைத்து, துஞ்சாள்– தூங்க மாட்டான் நோகோ – வருந்துகிறேன்.

### கருத்துரை

அன்னையே நீ வாழ்க! நான் கூறுவதைக் கேட்பாயாக, தோழி தலைவியின் தன் ஒளி பொருந்திய நெற்றி பசந்து அழகு குறைந்து உடல் இளைத்துத் தலைவன் நினைவால் மெலிந்துள்ளாள். குளிர்ச்சி பொருந்திய கடலலலை யோசை இடையறாது கேட்கும் போதெல்லாம் தன் தலைவன் தேரேரெலியோ என்று கருதித் தூங்காதிருக்கின்றாள். வருத்தம் கண்டு நானும் வருந்துகிறேன்.

### 1.3.8. எவன் கொல் மற்று அவன் நயந்த தோயே

**தன் மதிப்பீட்டு வினா**

16. அறத்தொடு நின்ற தோழி செவிலிக்கு வற்புறுத்தி சொல்லியது யாது?

கூற்று : தோழி திணை : நெய்தல்

அன்னை, வாழி! வேண்டு அன்னை! கழிய
முண்டகம் மலரும் தண்கடற் சேர்ப்பன்
எம்தோள் துறந்தனன் ஆயின்,
எவன் கொல் மற்று அவன் நயந்த தோளே

துறை : அறத்தொடு நிலை பிறந்த பின்னும் வரைவு நீடிற்றாக, 'மற்றொரு குல மகளை வரையுங் கொல்? என்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்த தோழி அவட்டுச் சொல்லியது.

(அ–ள்) கழிய–உப்பங்கழியில் உள்ள, முண்டகம்–நீர் முள்ளிச் செடி, சேர்ப்பன்–நெய்தல் நிலத் தலைவன், நயந்த–விரும்பிய.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

அன்னையே வாழ்வாயாக, நான் கூறுவதைக் கேட்பாயாக, உப்பங்கழிகளில் உள்ள நீர்முள்ளிச் செடிகளில் மலரும் குளிர்ச்சி பொருந்திய கடற்கரைத் தலைவன் எம் தலைவியின் தோளைத் தழுவுதலைத் தளிர்ந்தானாயின் அவனால் விரும்பப்பட்ட தோள்களின் நிலைமை என்ன ஆகும்.

### 1.3.9. பல் நாள் வரும் அவன் அளித்த பொழுதே

கூற்று : தோழி கூற்று திணை : நெய்தல்

துறை : அறத்தொடு நின்ற பின்பு வரைவான் பிரிந்த தலமகன் கடிலின் வாராத வழி ஐயுற்ற செலின 'அவன்' நும்மைத் துறந்தான் போலும்; நுங்கட்கு அவன் கூறிய திறம் யாது ? என்றாட்குத் தோழி சொல்லியது

அன்னை, வாழி! வேண்டு அன்னை! நெய்தல்
நீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவன்
எம் தோள் துறந்த காலை எவன் கொல்
பல் நாள் வரும் அவன் அளித்த பொழுதே ?

(அ–ள்) தூம்பு உள்ளே குழாய் போன்ற அமைப்புடைய கொடி.

**கருத்துரை**

அன்னையே நீ வாழ்க! நான் சொல்கின்ற வார்த்தைகள் கேள் நீரில் வாழும் உள் துளைகள் உடைய நெய்தல் மலர்கள் நெருங்கி வளர்ந்துள்ள நீர்த் துறைவனான என் காதலன் என்னுடன் மகிழ்ந்து பிரியும் போது திருமணம் செய்து கொள்வதெனக் கூறிய வாக்குறுதிகள் எம் நினைவில் மீண்டும் மீண்டும் வருகின்றன.

### 1.3.10. ஆங்கும் ஆக்குமோ, வாழிய பாலே?

கூற்று : தோழி திணை : நெய்தல்

துறை : நொதுமலர் வரைவின்கண், தோழி, செவிலிக்கு அறத்தொடு நிற்றல்.

அன்னை வாழி வேண்டு அன்னை! புன்னை
பொன் நிறம் விரியும் பூக்கெழு துறைவனை
'என்னை' என்றும், யாமே; இவ் ஊர்
பிறிது ஒன்றாகக் கூறும்;
ஆங்கும் ஆக்குமோ, வாழிய பாலே ?

(அ–ள்) என்னை–என்+ஐ–என் தலைவன், பால்–ஊழ், முறைமை நியதி.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

அன்னையே நீ வாழ்க! நான் கூறுவதைக் கேள், புன்னையின் பொன் என் கணவன் என்றேன் புன்னையின் பொன் நிறப் பூக்கள் எங்கும் பாவிப்படர்ந்து பொலியும் பூந்துறையானை என் தலைவன், அவனே என் தலைவன் என நாங்கள் கூறுகிறோம். ஆனால் இவ்வூரார் வேறுவிதமாக கூறுகின்றனர். அந்நிலையில் ஆகிவிடுமோ ? நல்லூழ் வாழ்க.

## 1.4. தொகுப்புரை

ஐங்குறுநூறு பாடல்களில் மருதம், நெய்தல் பாடல்கள் பத்து பத்தாக இருபது பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இப்பாடல்கள் அனைத்தும், முதல், கரு, உரிப்பொருட்கள் மூலம் பின்னப்பட்டு அவற்றில் கூற்று, துறைகளின் மூலம் விளக்கப்பட்டு சங்ககால மக்களின் அகஉணர்வுகளின் நிலைப்பாடுகளை நமக்கு தெளிவாக காட்டுகின்றது.

## 1.5. தன்மதிப்பிட்டு வினாக்குரிய விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1) 1.1 | 2) 1.2 | 3) 1.2 | 4) 1.2 |
| 5) 1.2 | 6) 1.2.2 | 7) 1.2.3 | 8) 1.2.8 |
| 9) 1.2.9 | 10) 1.3 | 11) 1.3.1 | 12) 1.3.2 |
| 13) 1.3.3 | 14) 1.3.6 | 15) 1.3.7 | |

## 1.6. பயிற்சி வினா

1) மருத்திணை பாடல்களின் முதல் பொருள், கருபொருள் உரிப்பொருள் பற்றி குறிப்பு வரைக ?

2) நெய்தல் திணை பாடல்களை விளக்குக ?

3) ஐங்குறுநூறு ஆசிரியர் குறிப்பு தருக ?

4) தாய்க்குரைத்தபத்தை விளக்குக ?

அலகு - 2

# ஐங்குறுநூறு

குறிப்பு எழுத இடம்

## முன்னுரை

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வழங்கும் அகனைந்திணைகளாகவும், நூறுபாடல்கள் வீதம் ஐந்நூறு பாடல்களைக் கொண்டு மூன்றடி சிற்றெல்லையாகவும் ஆறாடி பேரெல்லையாகவும் ஐங்குறுநூறு தொகுக்கப்பட்டுள்ளது. இதில் குறிஞ்சி, பாலை போன்றவை இவ்வியலில் அமைந்துள்ளது.

## நோக்கம்

குறிஞ்சித் திணையில் உள்ள அன்னாய் வாழிப்பத்து பாலைத் திணையின் செலவழுங்குவித்த பத்து என்ற இரண்டு பகுதிகளையும் இயலில் விளக்கமாக காண்பதை நோக்கமாக கொண்டுள்ளது.

## பாட அமைப்பு

2.1. குறிஞ்சித் திணை விளக்கம்

- 2.1.1. குறிஞ்சிக் கருப்பொருள்
- 2.1.2. அன்னாய் வாழிப்பத்து
- 2.1.3. பொன்வீமணி அரும் பினவே
- 2.1.4. பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
- 2.1.5. மான் உண்டு எஞ்சிய கலிழி நிரே
- 2.1.6. வரையர மகளிரின் நிரையுடன் குழிஇ
- 2.1.7. நனி நாண் உடையள், நின்னும் அஞ்சும்
- 2.1.8. தூவலின் நனைந்த தொடலை ஒள்வாள்
- 2.1.9. உணங்குவ கொல்லோ, நின்தினையே! உவக்காண்
- 2.1.10. அறைமலர் நெடுங்கண் ஆர்ந்தன பனியே
- 2.1.11. கொண்டல் அவரைப் பூவின் அன்ன
- 2.1.12. தணிதற்கும் உரித்து அவள் உற்ற நோயே

2.2. பாலைத் திணை

- 2.2.1. பாலைத் திணை விளக்கம்
- 2.2.2. முதற்பொருள்
- 2.2.3. கருப்பொருள்

2.3. செலவழுங்குவித்த பத்து

- 2.3.1. மைவரை நாட! வருந்துவள் பெரிதே
- 2.3.2. பெருந்தோள் அரிவை தகைதற்கும் உரியள்

2.3.3. போகில் தனைத் தடுக்கும் வேனில் அருஞ்சுரம்

2.3.4. கல் அதர்க் கவலை செல்லின் மெல்லியல்

2.3.5. எனைப் பயம் செய்யுமோ விடலை நின் செலவே ?

குறிப்பு எழுத இடம்

2.3.6. விழவு ஒலி உந்தல் மாஅ யோளே

2.3.7. பாவை அன்னநின் துணைப்பிரிந்து வருமே

2.3.8. முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே

2.3.9. இறுவரை நாட நீ இறந்து செய் பொருளே ?

2.3.10. அரிதே விடலை! இவள் ஆய்நுதல் கவினே

2.4. முல்லைத் திணை விளக்கம்

2.4.1. கருப்பொருள்

2.4.2. உரிப்பொருள்

2.4.3. செவிலி சுற்றுப் பத்து

2.4.4. மறிஇடைப் யடுத்த மான்பிணை போல

2.4.5. இனிதால் அம்ம! பண்புமார் உடைத்தே

2.4.6. சிறுதேர் உருட்டும் தளர்நடை கண்டே

2.4.7. தானவள் சிறுபுறம் சுவையினன் நன்றும்

2.4.8. மனைக்கு விளக்கு ஆயினுள் மன்ற

2.4.9. காதலித் தழீஇ இனிதுஇருந் தனனே

2.4.10. நயந்த காதலித் தழீஇப் பாணர்

2.4.11. துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு பொலிந்தே

2.4.12. புதல்வன் தாயோ இருவரும் கவை இயினள்

2.4.13. மார்பின் ஊரும் மகிழ்நகை இன்பம்

2.5. தொகுப்புரை

2.6. தன்மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

2.7. பயிற்சி வினா

## 2.1. குறிஞ்சித் திணை விளக்கம்

குறிஞ்சித்திணையாவது – புணர்தலும் புணர்தனிமித்தமுமாம் குறிஞ்சி முதற் பொருள்

நிலம், மலையும் மலை சார்ந்த இடமும், பொழுது பெரும் பொழுது கதிரும், முன்பனியும், சிறுபொழுது யாமம்.

**தன் மதிப்பீட்டு வினா**

1. குறிஞ்சித் திணையின் கருப்பொருள் யாது ?

### 2.1.1. குறிஞ்சிக் கருப்பொருள்

உணவு – ஐவன நெல்லும், திணையும் மூங்கிலரிசியும்

மா – புலியும், யானையும், பன்றியும் கரடியும்

மரம் – அகிலும், ஆரமும், தேக்கும், திமிசும், வேங்கையும்

புள் – கிளியும் மயிலும்

பாறை – முருகியம், தொண்டகம்

தொழில் – தேனழித்தலும், கிழங்ககழ்தலும், தினை விளைத்தலும், கிளிகடிதலும்

யாழ் – குறிஞ்சி யாழ்

பூ – காந்தளும், வேங்கையும், சுனைக் குளையும்

நீர் – அருவியும் சுனையும்

ஊர் – சிறுகுடியும் குறிஞ்சியும்

மாக்கள் – குறவர் குறத்தியர், எயினர் எயிற்றியர்

தலைமக்கள் – வெற்பன், சிலம்பன், கொடிச்சி

இனி புணர்தல் என்பது, ஒத்ததன்மையுடைய தலைவனும் தலைவியும், கொடுப்பாரும் அடுப்பாரு மின்றித் தனியே ஒரு பொழில் ஊழான். தம்முள் ஒருவரை யொருவர் தலைப்பட்டு அன்பாலே கூடும் கூட்டம் என்க. இவ்விளக்கத்தின் துணை கொண்டு இக்குறிஞ்சிப் பாடல்கள் அனைத்தும் இத்திணையின் பாற்படுதல் ஆராய்ந்துணர்க.

ஒரு செய்யுளை ஆராய்ங்கால் அதன்கண், குறிஞ்சி முதற்பொருள் இரண்டும் வாராத பொழுது உரிப்பொருளானும் திணையறிதல் மரபு இவ்வாற்றாற் றிணை நாடிக் கொள்க.

### 2.1.2. அன்னாய் வாழிப்பத்து

குறிஞ்சித் திணைப் பாக்களைப் பாடியவர் கபிலர், குறிஞ்சித் திணையில் அமைந்துள்ள முதற் பத்துப் செய்யுட்களுக்கு 'அன்னாய் வாழிப் பத்து' எனப் பெயரிட்டுள்ளனர். இப்பகுதிக்கண் வரும் ஒவ்வொரு பாட்டும் அன்னாய் வாழி, என்ற தொடராலே தொடங்கும் சிறப்புப் பற்றி இப்பெயர் பெறுவதாயிற்று.

### 2.1.3. பொன்வீமணி அரும் பினவே

கூற்று : தலைவி திணை : குறிஞ்சி

துறை : நொதுமலர் வரைவின்கண் செவிலி கேட்குமாற்றால் தலைமகள், தோழிக்கு அறத்தொடு நிலை குறித்து உரைத்தது.

"அன்னாய் வாழி வேண்டு அன்னை! என்னை,
தானும் மலைந்தான்; எமக்கும் தழை ஆயின;
பொன்வீ மணி அரும் பினவே
என்ன மரங் கொல், அவர்சார லவ்வே!"

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

2. அன்னாய் வாழிப் பத்து விளக்குக ?

3. தோழி அறத்தொடு நின்ற நிலை குறித்து விளக்குக ?

(அ–ள்) மலைந்தான் – அணிந்தான், தழை–தழையாடை பொன்வீ–பொன் போன்ற மலர், சாரல்–மலைச்சாரல்.

குறிப்ப எழுத இடம்

**கருத்துரை**

அன்னையே! வாழ்! நான் கூறுவதனை விரும்பிக் கேட்பாயாக. மரத்திலிருந்து தழைகளைப் பெற்றுத் தானும் தழை ஆடை அணிந்தான் எங்களுக்கும் அவை தழை ஆடை ஆயின. அந்த மரம் பொன் போன்ற பூக்களையும் மணிபோன்ற அரும்புகளையும் உடையன. அவை அம் மலைச் சாரலில் உள்ளன. அவை என்ன மரங்கள்?

### 2.1.4. பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்

கூற்று : தோழி திணை : குறிஞ்சி

துறை : தலைமகன் வரைதல் வேண்டித் தானே வருகின்றமை கண்ட தோழி, உவந்த உள்ளத்தாளாய்த் தலைமகட்குக் காட்டிச் சொல்லியது.

அன்னாய் வாழி! வேண்டு அன்னை! நம் ஊர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே

(அ–ள்) குறுமக – இளம் சிறார், மா–குதிரை

**கருத்துரை**

அன்னையே வாழ்க! யான் சொல்வதனை விரும்பிக் கேட்பாயாக, நெடுமலை நாட்டு நம் தலைவன் ஊர்ந்து வருகின்ற தேரை இழுத்து வரும் குதிரைகள் நம் ஊர் அந்தணச் சிறுவரைப் போன்று தாமும் குடுமித் தலையை உடைய ஆயின.

### 2.1.5. மான் உண்டு எஞ்சிய கலிழ் நீரே

கூற்று : தலைவி திணை : குறிஞ்சி

துறை : உடன் போய் மீண்ட தலைமகள் ‘நீ சென்ற நாட்டு நீர் இனிய வல்ல; நீ எங்ஙனம் நுகர்ந்தாய்? எனக் கேட்ட தோழிக்குச் சொல்லியது

அன்னாய் வாழி! வேண்டு அன்னை! நம்படப்பைத்
தேன் மயங்க பாலினும் இனிய அவர் நாட்டு
உவலைக் கூவல் கீழ்
மான் உண்டு எஞ்சிய கலிழி நீரே"

(அ–ள்) படப்பை–தோட்டம் உவலை–தழை கூவல்–கிணறு, கலிழி–கலங்கிய, நீர் எஞ்சிய–மிஞ்சி நின்ற.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

4. அந்தணர் குடுமிபோல் எவை இருந்தது?
5. மான் உண்டு எஞ்சிய கலிழ் நீரே விளக்குக.

**கருத்துரை**

அன்னையே வாழ்க! யான் கூறுவதை விரும்பிக் கேட்பாயாக நம் காதலர் நாட்டில் உள்ள உதிர்ந்த தழைகளால் மூடம் பெற்ற கிணறுகளின்

அடியில் விலங்குகளால் உண்ணப்பட்டு எஞ்சி நிற்கும் கலங்கிய நீரும் நம் வீட்டின் புறத்தே உள்ள தோட்டத்தில் கிடைக்கும் இனிய தேனுடன் கலந்த பாலினைவிட இனியதாகும்.

குறிப்பு எழுத இடம்

### 2.1.6. வரையர மகளிரின் நிரையுடன் குழீஇ

கூற்று : தலைவி திணை : குறிஞ்சி

துறை : வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத் தானாகத் தலைமகள், தோழிக்குச் சொல்லியது.

அன்னாய், வாழி! வேண்டு அன்னை! அஃது எவன் கொல்?
வரையர மகளிரின் நிரையுடன் குழீஇ,
பெயர்வுழிப் பெயர்வுழித் தவிராது நோக்கி,
நல்லள் நல்லள் என்ப;
தீயேன் தில்ல, மலை கீழ வோற்கே!

(அ–ள்) வரையற மகளிர் – தெய்வ மகளிர், கழீஇ – குழுமிகூடி நிரை – கூட்டம்

**கருத்துரை**

அன்னையே வாழ்க! நான் கூறுவதை விரும்பிக் கேட்பாயாக, மலையில் சூரரவாழும் மகளிர் போல ஊர் மகளிர் பலரும் கூடி நின்று நாம் இயங்கும் இடமெல்லாம் என்னையே நோக்கி இவள் நல்லள் நல்லன் என்று கூறுவர். ஆனால் நம் காதலனாகிய மலைத் தலைவனுக்கு மட்டும் நான் தீயோன் ஆகினேன். அதற்கு என்ன? காரணம்.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

6. வரையாது வந்தொழுகும் தலைமகனுக்கு தலைவி கூறியது யாது?
7. செவிலி தோழிக்கு அறத்தோடு நின்றது குறித்து விளக்குக?

### 2.1.7. நனி நாண் உடையள்; நின்னும் அஞ்சும்

கூற்று : தோழி திணை : குறிஞ்சி

துறை : நொதுமலர் வரைவு வேண்டி விட்டுழித் தலை மகட்கு உளதாகிய வருத்தம் நோக்கி, இவள், இவ்வாறாதற்குக் காரணம் என்னை? என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தோடு நின்றது.

அன்னாய் வாழி! வேண்டு அன்னை! என் தோழி!
நனி நாண் உடையள்; நின்னும் அஞ்சும்;
ஒலி வெள் அருவி ஒங்கு மலை நாடன்
மலர்ந்த மார்பின் பாயல்
தவ நனி வெய்யள்; நோகோ, யானே

(அ–ள்) அஞ்சும்–பயப்படும், வெள்அருவி–வெண்மையான அருவி நனி–மிகுதி, நாண்–வெட்கம், பாயல்–உறக்கம் (தூக்கம்), வெய்யள்–கோபத்தால் வெப்பம் பொருந்தியவள், நோகோ–துன்புறுகின்ற.

**கருத்துரை**

அன்னையே! வாழ்க! யான் கூறுவதைக் கேட்பாயாக ஒலிக்கின்ற வெண்மையான அருவியை உடைய மலைநாட்டுத் தலைவனின் மார்பில்

உறங்குவதை நினைத்துப் பிரிவினால் மிகவும் உடல் வெப்பமுற்றுச் சினம் உறும் தன்மையுடைய தலைவி மிகுந்த நாணம் உடையவள். உன்னைவிடவும் பழிச் சொல்லுக்கு அஞ்சும் தன்மையுடையவள் அதை எண்ணித் துன்புறுகிறேன்.

குறிப்பு எழுத இடம்

### 2.1.8. தூவலின் நனைந்த தொடலை ஒள்வாள்

கூற்று : தோழி　　　　திணை : குறிஞ்சி

துறை : இரவுக் குறிக்கண் தலைமகன் வந்து குறியிடத்து நின்றமை அறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

அன்னாய், வாழி, வேண்டு அன்னை! உவக்காண்
மாரிக் குன்றத்துக் காப்பாள் அன்னன்;
தூவலின் நனைந்த தொடலை ஒள்வாள்,
பாசி சூழ்ந்த பெருங்கழல்,
தண்பனி வைகிய வரிக்கச் சினனே!

(அ-ள்) உவக்காண்-உவ்விடத்தே, காண்பாயாக, மாரி-மழை, காப்பாள்-காக்கின்ற ஆள், தொடலை-தொடங்குகின்ற, தூவலின்-மழைத்துளி பெருங்கழல்-காலின் அணி.

**கருத்துரை**

அன்னையே வாழ்க! நான் கூறுவதை கேட்பாயாக மழைத் துளியில் நனைந்த தோளில் தொங்குகின்ற வாளையும் நீர்பாசியால் சுற்றப் பெற்றமையால் பசிய வண்ணமுடைய கழலையும் குளிர்ந்த நீர்த்துளி தங்கியதும் வரிந்து கட்டப் பெற்றதுமான கச்சையையும் உடையவனாய் மழைக் காலத்தில் குன்றத்தைக் காத்து நிற்கும் காவலாளி போல் வானை உவ்விடத்தே காண்பாய்.

### 2.1.9. உணங்குவ கொல்லோ, நின் தினையே! உவக்காண்

கூற்று : தோழி　　　　திணை : குறிஞ்சி

துறை : மழையின்மையால் தினை உணங்கும், விளையமாட்டா, புனங்காப்பச் சென்று அவரை எதிர்ப்படலாமென்று எண்ணியிருந்த இது கூடாதாயிற்று, என வெறுத்திருந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.

அன்னாய், வாழி வேண்டு அன்னை! நன்றும்
உணங்குவ கொல்லோ, நின் தினையே! உவக்காண்
நிணம் பொகி வழுக்கின் தோன்றும்,
மழைதலை வைத்து, அவர் மணி நெடுங் குன்றே."

(அ-ள்) உணங்குதல்-உலர்தல், நிணம்-கொழுப்பு.

**கருத்துரை**

அன்னையே வாழ்க! நான் சொல்வதைக் கேட்பாயாக தலைவனது மலை உயரமான நீலமணி போன்றது. அதன் உச்சியில் மழை மேகங்கள் படிந்துள்ளன. அக்காட்சி கொழுப்பு மிக்க இறைச்சித் துண்டின் மேல் படிந்து மூடிக்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

8. இரவுக் குறிக்கண் தலைமகன் வந்ததை அறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது யாது?
9. கொழுப்பு மிக்க இறைச்சித் துண்டு போல் காணப்படுவது எது?

கொண்டிருக்கும் வழுக்குப் போன்று தோன்றும் அதனால் விதைந்திருக்கும் உங்கள் தினைப்புனம் காயாது.

### 2.1.10. அறைமலர் நெடுங்கண் ஆர்ந்தன பனியே

குறிப்பு எழுத இடம்

கூற்று : தோழி திணை : குறிஞ்சி

துறை : செவிலிக்கு அறத்தொடு நின்ற தோழி அவளால் வரைவு மாட்சிமைப் பெற்ற பின்பு 'இவள் இவ்வாறு பெற்ற வருத்தமெல்லாம் நின்னிற் றீர்ந்து' என்பது குறிப்பிற் தோன்ற அவட்குச் சொல்லியது.

அன்னாய், வாழி, வேண்டு அன்னை! கானவர்
கிழங்கு அகழ் நெடுஞ்குழி மல்க வேங்கைப்
பொன்மலை புதுவீத் தாஅம் அவர்நாட்டு
மணிநிற மால்வரை மறைதொறு, இவள்
அறைமலர் நெடுங்கண் ஆர்ந்தன பனியே

(அ–ள்) கானவர்–குறிஞ்சி நிலத்தோர், மல்க–நிறைய புதுவீ–புதுமலர், தாஅம்–பரந்துபடியும், மால்–பெருமை, வளமை, வரை–மலை, ஆர்ந்தன–நிறைந்தன.

### கருத்துரை

அன்னையே வாழ்க! நான் கூறுவதைக் கேட்பாயாக குறிஞ்சி நிலமக்கள், நிலத்தைத் தோண்டி கிழங்கு எடுத்தனர். அக்குழிகளில் பொன் போன்ற வேங்கை மலர்கள் நிரம்பின. தலைவன் நாட்டு நீல நிறம் பொருந்திய பெரிய மலை இவர் கண்ணிலிருந்து மறையும் போது அழகிய நீண்ட மலர் போன்ற கண்கள் கண்ணீரால் நிறைகின்றன.

### 2.1.11. கொண்டல் அவரைப் பூவின் அன்ன

கூற்று : தோழி திணை : குறிஞ்சி

துறை : வரைவிடை வைத்துப் பிரிவின்கண் அவனை நினைவு விடாது ஆற்றாளகிய வழி சிறிது மறந்து ஆற்ற வேண்டும் என்ற தோழிக்கு தலைமகள் கூறியது.

அன்னாய், வாழி! வேண்டு அன்னை! நீமற்று
யான் அவர் மறத்தல் வேண்டுதி ஆயின்,
கொண்டல் அவரைப் பூவின் அன்ன,
வெண்தலை மாமழை சூடித்
தோன்றல் ஆனாது, அவர் மணிநெடுங்குன்றே

(அ–ள்) கொண்டல்–கிழக்கிலிருந்து வீசும் காற்று வெண்தலை–வெண்நிற முகில், தோன்றல்–காட்சி தருவது.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

10. 'இவள் இவ்வாறு பெற்ற வருத்தமெல்லாம் நின்னிற் நீர்ந்தது யாது ?

11. கொண்டல் அவரைப் பூவைப் போல் காணப்படுவது எது ?

**கருத்துரை**

அன்னையே! வாழ்வாயாக! நான் கூறுவதைக் கேட்பாயாக, நீ தலைவனை மறுத்தல் வேண்டும் என்று கூறுகிறாய், அவருடைய பெரிய மலை நீலமணி போன்றது, அதன் உச்சியில் கீழ்க்காற்றால் மலரும் அவரைப் பூப் போன்ற உச்சியினை உடைய அவருடைய மலை என் கண்ணைவிட்டு மறையாது எப்போதும் நிற்கின்றது. நான் எவ்வாறு அவரை மறப்பது.

குறிப்பு எழுத இடம்

### 2.1.12. தணிதற்கும் உரித்து, அவள் உற்ற நோயே

கூற்று : தோழி　　　　திணை : குறிஞ்சி

துறை : காப்பு மிகுதிக்கண் தலைமகள் மெலிவு கண்டு, தெய்வத்தினானாயிற்று, என்று வெறி எகுப்புழித் தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றது.

அன்னாய் வாழி! வேண்டு அன்னை! நம் படப்பைப்
புலவுச்சேர் துறுகல் ஏறி, அவர் நாட்டுப்
பூக்கெழு குன்றம் நோக்கி நின்று,
மணிபுரை வயங்கிழை நிலை பெறத்
தணிதற்கும் உரித்து, அவள் உள்ள நோயே

(அ-ள்) படப்பை-தோட்டம், துறுகல்-புலால் மணமுள்ள தோட்டத்தில் உள்ள குண்டுக்கல்.

**கருத்துரை**

அன்னையே வாழ்க! நான் கூறுவதைக் கேட்பாயாக! நம் தோட்டத்தில் உள்ள புலால் மணம் நாறும் குண்டுக்கல்லில் ஏறி நின்று தலைவன் நாட்டில் உள்ள பூக்கள் நிறைந்த குன்றினை நோக்கும் நிலையை நீலமணி போன்று விளங்கும் அணிகலன்களை அணிந்த தலைவி பெறுவாள் என்றாள் அவள் அடைந்திருக்கும் நோயை அம்மலை தணிப்பதற்குரியதாகும்.

## 2.2. பாலைத் திணை

செல்வமுங்குவித்த பத்து

**தன் மதிப்பீட்டு வினா**

12. தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை குறித்து எழுதுக ?

### 2.2.1. பாலைத்திணை விளக்கம்

### 2.2.2. முதற் பொருள்

மூலம்! வடவேங்கடம் தென்குமரி யாயிடைத் தமிழ் வற நல்லுகத்தே இயற்கையில் பாலை நிலம் இல்லை. இல்லையாயினும், புலனெறி வழக்கின்கண் இதற்கு மழை வறந்தமையாலே தமக்குரிய நல்லியல்பு கெட்டு உயிரினத்தை வருத்தும் வெப்பமிக்கனவாகிய முல்லை நிலத்தையும் குறிஞ்சி நிலத்தையுமே நிலமாகக் கொள்வர்.

**காலம் :** இளவேனிலும், முதுவேனிலும்! பாலைக்குரிய பெரும் பொழுதுகள், பின்பனிப் பருவமும் பாலைக்கு வருவதுண்டு. இனி நண்பகல்—சிறுபொழுதென்க. இதுபற்றி ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறுவது வருமாறு.

"காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமை வரச் சோலை தேம்பக் கூவன் மாறு நீரும் நிழலுமின்றி நிலம் பாய்ந்துறந்து, புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெருகுவதொரு காலமாகலின் இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்க நண்பகலும் வேனிலும் சிறப்புடையதாயிற்று என வரும்.

குறிப்பு எழுத இடம்

### 2.2.3. கருப்பொருள்

உணா – ஆறலைத்தனவும், கறை கொண்டனவுமாம்.

மா – வலியிழிந்த யானையும் புலியும் செந்தாயுமாம்.

மரம் – வற்றின இருப்பையும் ஒடையும், உழிஞையும் ஞெனடையும் ஆம்.

புள் – கழுகும் பருந்தும் புறாவும் ஆம்

பறை – சூறை கோட் பறையும், நிரை கோட் பறையுமாம்.

தொழில் – சூறை கோட் பறையும், நிரை கோட பறையுமாம்.

செய்தி – ஆறலைத்தலும் சூறை கோடலும்

யாழ் – பாலை யாழ்

மக்கள் –மீளி விடலை எயிற்றி பேதை, எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர்.

பூ – மரா குரா பாதிரி இவற்றின் பூ

நீர் – அறுநீர்க் கூவலும், அறுநீர்ச்சுவையும்

ஊர் – கொல் குறும்பு

உரிப்பொருள் : பிரிதலும் பிரிதணிமித்தமுமாம்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

13. பாலைத்தின் கருப்பொருள் கூறுக ?
14. செலவழுங்குவித்த பத்து குறிப்பு வரைக ?
15. பிரிவுணர்ந்த தோழி தலைமகற்குச் சொல்லியது யாது ?

### 2.3. செலவழுங்குவித்த பத்து

முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பால்லை என்றாகும் என்பது சிலப்பதிகாரக் கூற்று. தலைவன் பிரிந்து செல்வதில் தனக்கு விருப்பம் இல்லாமையை உணர்த்திச் செலவு தவிறுமாறு தோழி செய்ததைக் கூறும் பத்து அகவற் பாக்களைக் கொண்டது.

### 2.3.1. மைவரை நாட! வருந்துவள் பெரிதே

கூற்று : தோழி திணை : பாலை

துறை : பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைமகற்கச் சொல்லியது ?

மால்வெள் ளோதிரத்து மைஇல் வால் இணர்
அருஞ்சுரம் செல்வோர், சென்னிக் கட்டும்
அவ்வரை இறங்குவை யாயின்,
மைவரை நாட! வருந்துவள் பெரிதே

(அ–ள்) வெள்ளோத்திரம்–வெள் இலவமரம், மால்–பெரியமைஇல்–குற்றமற்ற, வால்இணர்–வெண்மையான பூங்கொத்து, அரும்–அரிய, சுரம்–

பாலை நிலவழியில் செல்வோர் தலையில் அணிந்து கொள்வர் அப்பகுதியில் உள்ள மலையைக் கடந்து நீ செல்வாயாயின் தலைவி மிகவும் வருந்துவள்.

குறிப்பு எழுத இடம்

### 2.3.2. பெருந்தோள் அரிவை தகைதற்கும் உரியள்

கூற்று : தோழி திணை : பாலை

துறை : பொருள்வயிற் பிரியுந் தலைமகன், பிரிவுடன் படுத்த வேண்டுமென்றாக அவற்குத் தோழி சொல்லியது

அரும் பொருள் செய்வினை தப்பதற்கும் உரித்தே
பெருந்தோள் அரிவை தகைதற்கும் உரியள்
செல்லாய் ஆயினோ நன்றே
மெல்லாம் புலம்ப இவள் அழப் பிரிந்தே

**தன் மதிப்பீட்டு வினா**

16. பாலை நிலம் குறித்து தோழி கூறியது என்ன?

(அ–ள்) தப்பல்–தவறுதல், தசைத்தல்–தடுத்தல், மெல்லம் மென்மையான, புலம்பன்–நெய்தல் கடற்கரைத் தலைவன்.

**கருத்துரை**

மென்மையான நெய்தல் நிலத்தலைவ, ஈட்டுவதற்குரிய அரிய பொருள் செய்கின்ற செயலால் தவறுவதற்கும் வாய்ப்பு உண்டு. பெரிய தோள்களுடைய நின் காதலி நீ செல்லாமல் தடுப்பதற்கும் உரியவள். அதனால் நீ இவள் அழப்பிரிந்து செல்லாதிருத்தல் நன்று.

### 2.3.3. போகில் தனைத் தடுக்கும் வேனில் அருஞ்சுரம்

கூற்று : தோழி திணை : பாலை

துறை : சுரந்தருமை கூறி உடன் செலவு மறுக்கம் தலைமகற்குத் தோழி சொல்லியது

புதுக்கலத்து அன்ன கனிய ஆலம்
போகில்தனைத் தடுக்கும் வேனில் அருஞ்சுரம்
தண்ணீய இனிய ஆக;
எம்பொடும் சென்மோ விடலை! நீயே

(அ–ள்) கலம்–மண்சட்டி, கனி–பழம், ஆலம்–ஆலமரம், போகில்–ஒருவகைப் பறவை வேனில்–கோடை, விடலை–பாலை நிலத்தலைவன்

**கருத்துரை**

பாலை நிலத் தலைவ! நீ புதிய மண் பாண்டத்தின் நிறம் போன்ற செந்நிறப் பழங்களைக் கொண்ட ஆலமரம் தன் கண்களின் இனிமையால் தன்னை வந்தடைந்த போகில் என்னும் பறவையினைத் தன்னைவிட்டு செல்லாமல் தடுக்கும், வேனிலால் வெப்பமுற்ற கடத்தற்கரிய பாலை வழிகள் குளிர்ச்சியாகவும் இனியதாகவும் இருப்பதற்கு எம்மையும் உடன் அழைத்துச் செல்வாயாக.

### 2.3.4. கல் அதர்க் கவலை செல்லின், மெல்லியல்

கூற்று : தோழி திணை : பாலை

துறை : பொருள் வயிற் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது ?

கல்லாக் கோவலர் கோலில் தோண்டிய
ஆன்நீர்ப் பத்தல் யானை வெளவுங்
கல் அதர்க் கவலை செல்லின், மெல்லியல்
புயல் நெடுங் கூந்தல் புலம்பும்;
வயமான் தோன்றல்! வல்லா தீமே

(அ–ள்) கல்லா–அறியாமை, கோவலர்–இடையர், பத்தல்–பள்ளம், அதர்–வழி, ஆன்–பசு, கால்நடை கோல்–கம்பு, வெளவும்–கவரும், கவலை–கவர்த்த வழிகள், வயமான்–விரைந்து செல்லும் குதிரை.

**கருத்துரை**

அறியாமையுடைய இடையர்கள் இரும்புக் கம்பியால் நிலத்தைத் தோண்டாமல் ஆநிரை மேய்க்கும் கோலால் தோண்டி ஏற்படுத்திய நீர்ப்பள்ளத்தின் நீரை யானை கவர்ந்து உண்ணும், பல பிரிவுகளை உடைய வழியில் நீ சென்றால் மென்மையான வளம் மேகம் போன்ற கூந்தலையுடையவளாகிய தலைவி தனிமையில் வருந்தும், எனவே விரைந்து செல்லும் குதிரையுடைய தலைவா அவளைப் பிரிதலைத் தவிர்த்து விடும்.

### 2.3.5. எனைப் பயம் செய்யுமோ விடலை நின் செலவே?

கூற்று : தோழி திணை : பாலை

துறை : உடன்போக்கொழித்துத் தனித்துச் செல்லலென்ற தலைமகற்குத் தோழி கூறியது.

களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது
பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்
சுடர்ந் தொடிக் குறுமகள் இனைய,
எனைப் பயம் செய்யுமோ விடலை நின் செலவே ?

(அ–ள்) களிறு–ஆண்யானை, பிடி–பெண்யானை தழீஇ–தழுவி, புலம்–நிலம், படராது–செல்லாது, பைதறு–பயன், விடலை–பாலைநிலத் தலைவன்.

**கருத்துரை**

தலைவ! களிறுகள் தம்பிடிகளைத் தழுவிக் குன்றத்தில் பசுமை நீங்கிய காரணத்தால் பசியால் வருந்தும் நிலையிலும் பிற இடங்களுக்குச் செல்லாது தோள் வளை அணிந்த இளமகள் வருந்த நீ பிரிந்து சென்றால் அது என்ன பயனைத் தரும்.

### 2.3.6. விழவுஒலி உந்தல் மாஅ யோளே

கூற்று : தோழி திணை : பாலை

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

17. பொருள் வயிற் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி கூறியது யாது ?
18. உடன்போக்கொழித்துத் தனித்துச் செல்லலென்ற தலைமகற்குத் தோழி கூறியது யாது ?

குறிப்பு எழுத இடம்

துறை : பிரியும் தலைமகற்குத் தோழி தலைமகள் பிரிவாற்றாமை கூறியது.

"வெல்போர்க் குரிசில் நீ வியன்கரன் இறப்பின்
பல்காழ் அல்கல் அவ்வறி வாசக்
குழலினும் இனைகுவன் பெரிதே
விழவுஒலி உந்தல் மாஅ யோளே"

(அ–ள்) குரிசில்–தலைவன், வியன் சுரன்–அகன்ற பாலைவழி, இறப்பின்–கடந்தால், வரி–அழகு, இனைகுவார்–வருந்துவள், மாஅயோள்–மாமை நிறத்தை உடையவள், காழ்–முத்துவடம்.

**கருத்துரை**

போரில் வெற்றி பெறும் தலைவர், நில வழியைக் கடந்தால், அடிவயிற்றின் அழகு வாட முத்து வடம் அணிந்து விழாக் காலத்தைப் போன்ற நறுமணம் கமழும் தழைத்த கூந்தலை உடைய மாமை நிறம் கொண்ட தலைவி வருந்துவாள்.

### 2.3.7. பாவை அன்னநின் துணைப்பிரிந்து வருமே

கூற்று : தோழி திணை : பாலை

துறை : பொருள் வயிற் பிரியக் கருதிய தலைமகன், அதன் சிறப்புக் கூறிய வழித் தோழி அதனை இழித்துக் கூறியது.

ஞெலிகழை முழங்கு அழல் வயமா வெரூஉம்
குன்றுடை அருஞ்சுரம் செலவு அயர்ந்தனையே
நன்று இல, கொண்க! நின் பொருளே;
பாவை அன்னநின் துணைப்பிரிந்து வருமே.

(அ–ள்) ஞெலி–மூங்கில், முழங்கு–ஒலித்தல், வயமா–புலி–வெரூஉம்–அஞ்சும் சுரம்–பாலை நிலவழி அழல்–நெருப்பு கொண்க–கடற்கரைத் தலைவ.

**தன் மதிப்பீட்டு வினா**

19. பிரியும் தலைமகற்குத் தோழி தலைமகள் பிரிவாற்றாமை குறித்து கூறியது யாது?

**கருத்துரை**

கடற்கரைத் தலைவனே மூங்கில் கழைகள் ஒன்றோடுஒன்று உராய்ந்து தோன்றிய தீயையும் அதன் ஒளியையும், கண்டு அஞ்சும் புலிகளை உடைய அரிய காட்டு வழியில் நீ தலைவியைப் பிரிந்து செல்ல முயல்கிறாய் நீ பெற நினைக்கின்ற பொருள் உன் கொல்லிப் பாவை போன்ற அழகிய மனைவியைப் பிரிந்து வருகின்ற பொருள்.

### 2.3.8. முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே

கூற்று : தோழி திணை : பாலை

துறை : 'பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி, பிரியா தொழியப் பெறின் நன்று பிரிவையாயின், இம்மாமலை இப்பருவத்து எங்களை விட்டுப் பிரிந்தால் பிரி எனச் சொல்லியது

பல் இரும் கூந்தல் மெல்லிய லோள்வயின்
பிரியாய் ஆயினும் நன்றே : விரியிணர்க்
கால் எறுழ் ஒள்வீ தாஅய
முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே

(அ–ள்) இரும்–கரிய, மெல்லியலோள்–மென்மையான இயல்புள்ள தலைவி, இணர்–பூங்கொத்து, கால்–காம்பு எறுழ்–ஒருவகை மரம், ஒள்–ஒளி பொருந்திய வீ–மலர், தாஅய–பரந்த முருகு–முருகக் கடவுள் அமர்–விரும்பும், மா–பெரிய

**கருத்துரை**

பலவாகிய கருமையான கூந்தலையும் மென்மையான இயல்புமுள்ள தலைவியை நீ பிரியாதிருந்தால் நல்லது எறுழ் மரத்தின் விரிந்த ஒளி பொருந்திய கொத்துக் கொத்தான மலர்கள் விழுந்து பரந்த பெரிய மலையில் முருகக் கடவுள் விரும்பி அமர்ந்துள்ளார். அவர் இம்மலையை விட்டுப் பிரிந்தால் நீயும் பிரிக.

### 2.3.9. இறுவரை நாடநீ இறந்து செய் பொருளே?

கூற்று : பாலை திணை : பாலை

துறை : பொருள்வயின் பிரிவல் என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது

வேனில் திங்கள் வெஞ்சுரம் இறந்து
செலவு அயர்ந்தனையால் நீயே; நன்று
நின் நயந்து உறைவி கடுஞ்சூல் சிறுவன்
முறுவல் காண்டலின், இனிதே
இறுவரை நாட! நீ இறந்து செய் பொருளே ?

(அ–ள்) : வேனில்–வேனிற் காலம், திங்கள்–மாதம், வெஞ்சுரம்–கொடிய பாலைநில வழி, இறந்து–கடந்து, செலவு அயர்தல்–செல்ல விரும்புதல், நயந்து விரும்பி, உறைவி–தலைவி, கடுங்சூல் சிறுவன்–கன்னிச் சூல், இறுவரை–பெரிய மலை.

**கருத்துரை**

பெரிய மலை நாட! நீ வேனிற் காலத்தில் கடுமையான பாலை நில வழியைக் கடந்து பொருள் ஈட்டுதலை விரும்புகின்றன. நீ அங்ஙனம் பிரிந்து சென்று ஈட்டக் கருதும் பொருள். உன்னையே பெரிதும் விரும்பி வாழும் நின் தலைவியின் முதல் சூலில் பிறந்த மகனுடைய சிரிப்பைக் கண்டு மகிழ்தலினும் இனிமையானதோ ?

### 2.3.10. அரிதே விடலை! இவள் ஆய்நுதல் கவினே

கூற்று : தோழி திணை : பாலை

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

20. பொருள் வயின் பிரிவல் என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது யாது ?
21. இருள்நலம் மீட்டற்கு அரிது என தோழி கூறியது யாது ?

குறிப்பு எழுத இடம்

துறை : பிரிகின்ற தலைமகற்குத் தோழி, 'நீ நினைக்கின்ற கருமம் முடித்தாய் ஆயினும் இவள் நலம் மீட்டற்கு அரிது' எனச் சொல்லிச் செலவழுங்குவித்தது.

பொலம்பசும் பாண்டில் காசுநிரை அல்குல்
இலங்குவளை மென்தோள் இழைநிலை நெகிழப்
பிரிதல் வல்லுவை ஆயின்,
அரிதே விடலை! இவள் ஆய்நுதல் கவினே

(அ–ள்) பொலம்–பொன், பாண்டில்–வட்டக்காசு அல்குல்–அடிவயிறு, இலங்கு–ஒளிவிடுகின்ற, இழை–ஆபரணம், வல்லுவை–வல்லமை உடையை, நுதல்–நெற்றி, கவின்–அழகு.

**கருத்துரை**

பாலை நிலத் தலைவ! பொன்னாலான பசுமையான வட்ட வடிவக் காசுகளைக் கோத்து அணியாக அணிந்துள்ள அடி வயிற்றை உடைய ஒளி பொருந்திய வளையல்களும், மென்மையான தோளில் அணிந்துள்ள ஆபரணங்களும், நெகிழுமாறு உன்னால் பிரிதல் முடியுமாயின் நீ பிரிவதனால் நீங்கும் இவள் நுதலின் அழகினை மீண்டும் தருதல் இயலுமோ ?

## 2.4. முல்லைத் திணை விளக்கம்

அஃதாவது, முல்லைத் திணை பற்றிப் புனைந்த (நூறு) பாடல்கள் என்றவாறு.

**முதற் பொருள்**

நிலம் : காடும் காடு சார்ந்த நிலப்பகுதியுமாம். காலம் : கார் காலமும் மாலைப் பொழுதுமாம். கார் காலம் என்பது ஆவணித் திங்களும் புராட்டாசித் திங்களும் கூடிய பருவம் இக்காலம் பற்றி ஆசிரியர் நச்சினார்க்கினியர், விலை வயிற் பிரிந்து மீள்வோன் விரைபரித் தேரூர்ந்து பாசைறையின்றும், மாலைக் காலத்து ஊர் உயின் வருஉங் காலம் ஆவணியும் புராட்டாதியும் ஆதலின், அருவ வெப்பமும் தட்பமும் மிகாது இடை நிகர்த்தனவாகிய ஏவல் செய்து வரும் இளையோருக்கு நீரும் நிழலும் பயத்தலானும் ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறுதலிற் களி சிறந்து மாவும் புள்ளும் துணையோடிவைபது விளையாடுவன கண்டு தலைவற்குத் தலைவிக்குங் காமக்குறிப்பு மிகுதலானு மென்பது.

புல்லை மேய்ந்து கொல் லேற் றோடே புனிற்றா கன்றை நினைந்து மன்றிற் புகுதரவும், தீங்குழலிசைப்பவும் பந்தர் முல்லை வந்து மணங்க ஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்கும் காமக் குறிப்புச் சிறுத்தலின் அக்காலத்து மாலைப் பொழுதும் உரித்தாயிற்று என இனிதின் ஓதுவர்.

**தன் மதிப்பீட்டு வினா**

22. முல்லைத் திணை கருப்பொருட்கள் யாவை ?

### 2.4.1. கருப்பொருள்

தெய்வம் – திமோல்

உணவு – வரகும் சாமையும்

விலங்கு – முயலும் சிறுமானும்

மரம் – கொன்றை குருந்து முதலியன

புள் – கானாங் கோழியும், மயிலும், சிவனும்

பறை – ஏறு கோட்பறையும், முரசும்

தொழில் – வரகு களைகட்டலும், அவற்றை அறுத்ததும், கபா விடுதலும், ஆந்தை மேய்த்தலும் ஏறு கோடலும்

பண் – முல்லைப் பண்

தலைவன் – குறும் பொறை நாடன்

தலைவி – கிழத்தி, மனைவி

பூ – முல்லையுந் தோன்றியும்

நீர் – கான்யாறு

ஊர் –பாடியுஞ் சேரியும்

மக்கள் – இடையர் இடைச்சியர் ஆயர் ஆய்ச்சியர்

### 2.4.2. உரிப் பொருள்

இருத்தலும் அதன் நிமித்தங்களும், ஆம் இவற்றூன், இம் முல்லைத் திணைக்கண் வரும் செய்யுட்குத் திணை ஆராய்ந்து கொள்க.

### 2.4.3. செவிலி கூற்றுப் பத்து

அஃதாவது, கற்புக் காலத்தே தலைவன், மனையகட் சென்று ஆங்குத் தலைவனும் தலைவியும் ஆவியும் உடலும், போல, ஒருவரை ஒருவர் இன்றியமையாராய், அன்பாற் கலப்புற்று இன்புற்றமர்ந்து வாழ்கின்ற நல்வாழ்க்கையின் மாண்பினைச் செவிலி கண்ணும் நெஞ்சுங் குளிறுக் கண்டு மீண்டு வந்து அந்த மாண்பினை நற்றூய்க்குக் கூறி மகிழ்வித்தலே பொருளாக வந்த ஒரு பத்துச் செய்யுளின் தொகுதி என்பதாம்.

### 2.4.4. மறிஇடைப் படுத்த மாண்பிணை போல

கூற்று : செவிலி  திணை : முல்லை

துறை : கடிமனைச் சென்றுவந்த செவிலி, உவந்த உள்ளதாய் நற்றாய்குச் சொல்லியது.

மறிஇடைப் படுத்த மாண்பிணை போல,
புதல்வன் நடுவணன் ஆக நன்றும்
இனிது மன்ற அவர் கிடக்கை முனிவின்றி
நீல்நிற வியலகம் சுவை இய
ஈனும், உம்பரும், பெறலருங் குரைத்தே.

(அ–ள்) மறி–குட்டி, மான்–ஆண்மான், பிணை–பெண்மான் கிடக்கை–படுக்கை, முனிவு–வெறுப்பு, இடையறவு இன்றி, நீல்நிற வியலகம்–நீல நிறமுள்ள வானம்,

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

23. செவிலி கூற்று பத்து விளக்குக.
24. உவந்த செவிலி உள்ளத்தாய் நற்றாய்குச் சொல்லியது யாது ?

சுவை இயகவிந்த ஈன்–இவ்வுலகம், உம்பர்–மேலுலகம், பெறலருங்குரைத்தே–பெறுவதற்குரியது.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

குட்டி இடையே படுத்திருக்க அதன் இரு பக்கங்களிலும் ஆண்மானும் பெண்மானும் படுத்திருப்பது போன்று புதல்வன் நடுவில் படுத்திருக்கக் கணவனும் மனைவியும் இருபக்கங்களிலும் படுத்திருந்தனர். இக்காட்சி நீல நிற வானம் கவிந்த இவ்வுலகிலும் மேல் உலகத்திலும் காண்பதற்கு அரிய காட்சி.

### 2.4.5. இனிதால்; அம்ம! பண்புமார் உடைத்தே

கூற்று : செவிலி திணை : முல்லை

துறை : கடிமனைச் சென்றுவந்த செவிலி, உவந்த உள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

புதல்வற் கவைஇய தாய்புறம் முயங்கி,
நசையினன் வதிந்த கிடக்கை, பாணர்
நரம்புளர் முரற்கை போல,
இனிதால்; அம்ம! பண்புமார் உடைத்தே

(அ–ள்) சுவைஇய–அணைத்த, முயங்கி–தழுவி, நசையினன்–விருபினன் வதிந்த–தங்கிய, கிடக்கை–படுக்கை, முரண்–இசை.

**கருத்துரை**

தன் புதல்வனை மார்புற அணைத்துக் கிடந்த தாயின் புறத்தை அன்புடன் தழுவி அவள் கணவன் விருப்பமுடையனாய்த் தங்கிய படுக்கை, அது பாணர்கள் யாழை மீட்டி இசைக்குத் தயார் நிலை செய்தது போல் இனிமையுடையதும் நல்ல பண்பு உடையதும் ஆகும்.

### 2.4.6. சிறுதேர் உருட்டும் தளர் நடை கண்டே

கூற்று : செவிலி திணை : முல்லை

துணை : கடிமனைச் சென்று வந்த செவிலி, உவந்த உள்ளத்தளாய் நற்றூய்க்குச் சொல்லியது.

புணர்ந்த காதலியின் புதல்வன் தலையும்
அமர்ந்த உள்ளம் பெரிது ஆகின்றே
அகன் பெரும் சிறப்பின் தந்தை பெயரன்
முறுவலின் இன்னகை பயிற்றிச்
சிறுதேர் உருட்டும் தளர் நடை கண்டே

(அ–ள்) அமர்ந்த–விருப்பம், முறுவலின் இன்னகை–புன் சிரிப்பு, தலை–இடம்.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

25. கடிமனைச் சென்று வந்த செவிலி நற்றாய்க்குச் சொல்லியது யாது ?
26. சிறுதேர் உருட்டும் தளர்நடை எவ்வாறு இருந்தது ?

**கருத்துரை**

எல்லா இடத்தும் அறியப் பெற்ற பெருஞ் சிறப்பினை உடைய தன் தந்தையின் பெயர் தாங்கிய தன் மகள் இனிய புன் முறுவலுடன் சிறு தேர் உருட்டிய அசைந்த நடையைக் கண்டு தலை மகனுக்குத் தன் காதலியிடம் இருந்த அன்பைப் போல் மகன் பாலும் பொருந்திய அன்பு பெரிதாயிற்று.

குறிப்பு எழுத இடட

### 2.4.7. தானவள் சிறுபுறம் கவையினன் நன்றும்

கூற்று : செவிலி திணை : முல்லை

துறை : கடிமனைச் சென்று வந்த செவிலி, உவந்த உள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

வாள்நுதல் அரிவை மகன் முலை ஊட்டத்
தானவள் சிறுபுறம் கவையினன் நன்றும்
நறும்பூந் தண்புறவு அணிந்த
குறும்பல் பொறைய நாடுகிழ வோனே

(அ–ள்) கனையினன்–அணைத்தனன், புறவு–முல்லை நிலம், பொறை–சிறிய குன்று, அரிவை–தலைவி, வாள்–ஒலி நுதல்–நெற்றி.

**கருத்துரை**

மணமுள்ள பூக்கள் நிறைந்த குளிச்சியுடைய காடுகளில் அழகுபற்ற சிறிய பலகுன்றுகள் சூழ்ந்த முல்லை நிலத் தலைவன் ஒளிமிக்க நெற்றிமையுடைய தன் இளம் மனைவி தன் மகனுக்குப் பாலூட்டவும் இவன் அவள் முதுகின் சிறுபுறத்தைத் தழுவினான்.

### 2.4.8. மனைக்கு விளக்கு ஆயினுள் மன்ற

கூற்று : செவிலி திணை : முல்லை

துறை : கடிமனைச் சென்று வந்த செவிலி, வெந்த உள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

"ஒண்சுடர்ப் பாண்டில் செஞ்சுடர் போல
மனைக்கு விளக்கு ஆயினள் மன்ற
கனைப் பெயல் பூப்பல அணிந்த வைப்பின்
புற அணி நாடன் புதல்வன் தாயே

(அ–ள்) ஒண்–ஒளிமிக்க, பாண்டில்–கால் விளக்கு, கனைப் பெயல்–ஓசையுடன் கூடிய மழை, வைப்பு–ஊர் முல்லை நிலம்.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

27. தானவள் சிறுபுறம் தழுவியவன் யார்?
28. மனைக்கு விளக்கு ஆகுபவர் யார்?

**கருத்துரை**

ஓசையுடன் கூடிய பெருமழை பெய்தமையால் பல் நிறமுடைய பூக்களும் மலர்ந்து அழகு நல்கும் ஊர்களைக் கொண்ட முல்லை நிலத் தலைவனின் புதல்வன் தாயாகிய நம் மகள் ஒளிவிட்டு மின்னும் பாண்டில் விளக்கின் ஏற்றப்பட்ட செந்நிறம் கொண்ட சுடர்போலத் தலைவனின் வீட்டுக்கு விளக்காக விளங்குகின்றாள்.

குறிப்பு எழுத இடம்

### 2.4.9. காதலித் தழீஇ இனிதுஇறந் தனனே

கூற்று : செவிலி திணை : முல்லை

துறை : கடிமனைச் சென்றுவந்த செவிலி, உவந்த உள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

மாதர் உண்கண் மகள் விளை யாடக்
காதலித் தழீஇ இனிதுஇருந் தனனே
தாதுஆர் பிரசம் ஊதும்
போதார் புறவின் நாடுகிழ வோனே.

(அ–ள்) மாதர்–காதல், பிரசம்–வண்டு, தாது–தேன், போது–மலர்.

**கருத்துரை**

அழகுடைய, மைதீட்டியே கண்களைக் கொண்ட மகன் அருகில் விளையாடி இன்புற வண்டுகள், தேனுண்டு இசைக்கும் பூக்கள் நிறைந்த முல்லை நிலங்களைக் கொண்ட தலைவன் தன் காதலியைத் தழுவி இனிமையோடு இருந்தான்.

### 2.4.10. நயந்த காதலித் தழீஇப் பாணர்

கூற்று : செவிலி திணை : முல்லை

துறை : கடிமனைச் சென்றுவந்த செவிலி, உவந்த உள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

நயந்த காதலித் தழீஇப் பாணர்
நயம்படு முரற்கையின் யாத்த பயன் தெரிந்து
இன்புறு புணர்ச்சி நுகரும்
மென்புல வைப்பின் நாடுகிழ வோனே

(அ–ள்) நயந்த–விரும்பிய, தழீஇய–தழுவி, நயம்–இனிமை முரற்கை–இசை. கிழவன்–தலைவன்–வைப்பு–ஊர்.

**கருத்துரை**

மென்மையான புலத்தில் ஊர்களைக் கொண்ட நாட்டின் தலைவன் தன் அன்பிற்குரிய காதலியைத் தழுவிப் பாணர்கள் இனிமையான இசையை வெளிப்படுத்தியதன் பயனைத் தெரிந்து தன் மனைவியோடு கூடிக் காதல் இன்பத்தை நுகர்ந்து வாழ்கிறான்.

### 2.4.11. துனிதீர் கொள்கைத்தன புதல்வனொடு பொலிந்தே

கூற்று : செவிலி திணை : முல்லை

துறை : கடிமனைச் சென்று வந்த செவிலி, உவந்த உள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

பாணர் முல்லை பாடச் சுடரிழை
வாணுதல் அரிவை முல்லை மலைய
இனிது இருந் தனனே, நெடுந்தகை
துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு பொலிந்தே

குறிப்பு எழுத இடம்

(அ–ள்) முல்லை–முல்லைப் பண், சுடரிழை–ஒளிபொருந்திய ஆபரணம், நெடுந்தகை–நீண்ட புகழை உடையவள் துனி–வெறுப்பு.

**கருத்துரை**

பாணர்கள் முல்லை நிலத்திற்குரிய சாதாரிப் பண் பாட ஒளிமிக்க சுடர்விடும் அணிகளை அணிந்த, ஒளி பொருந்திய நெற்றியுடைய தலைவி முல்லைப் பூவைச்சூட பெரும்புகழையுடைய தலைவன் வெறுப்புச் சிறிதும் இல்லாது கொள்கையை யுடைய தன் புதல்வனோடு பொலிவுற்று இருந்தான்.

## 2.4.12. புதல்வன் தாயோ இருவரும் கவை இயினள்

கூற்று : செவிலி திணை : முல்லை

துறை : கடிமனைபுக்கு வந்த செவிலி நற்றாய்க்கு தலைமகள் குறித்துச் சொல்லியது.

புதல்வன் கவை இயினன் தந்தை மென் பொழிப்
புதல்வன் தாயோ இருவரும் கவை இயினள்
இனிது மன்ற அவர் கிடக்கை!
நனி இரும் பரப்பின் இவ் உலகுடன் உறுமே.

(அ–ள்) கவை இயினன்–அனைத்தனன், கிடக்கை–படுக்கை, நனி–மிகுதி, இரும்–பெரிய, உறும்–ஒப்பாகும்.

**கருத்துரை**

புதல்வனை அணைத்துக் கிடந்தான் தலைவன், இனிய சொற்களுடைய தாயான தலைவி புதல்வனையும் தலைவனையும் ஒருங்கு அணைத்துக் கிடந்தாள். அவ்வாறு அம் மூவரும் படுத்திருந்த காட்சி இனிமையாக இருந்தது. அவ் இன்பத்திற்கு மிகப் பெரும் பரப்பினையுடைய இவ்வுலகம் முழுவதும் ஒப்பாகும்.

**தன் மதிப்பீட்டு வினா**

29. தனி இரும் பரப்பின இவ் உலகுடன் கூறுமே யாது ?

## 2.4.13. மார்பின் ஊரும் மகிழ்நகை இன்பப்

கூற்று : செவிலி திணை : முல்லை

துறை : கடிமனைச் சென்ற செவிலி தலைமகனும் தலைமகளும் புதல்வனொடு பாடல் கேட்டிருந்தமை கண்டு தன்னுள்ளே உவந்து சொல்லியது.

மாலை மூன்றில் குறுங்காற் கட்டில்
மனை யோள் துணைவி ஆக, புதல்வன்
மார்பின் ஊரும் மகிழ்நகை இன்பப்
பொழுதிற்கு ஒத்தன்று மன்னே!
மென்பிணித் தம்ம பாணனது யாழே!

(அ–ள்) முன்றில்–முற்றம், ஒத்தன்று–ஒத்தாயிற்று.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

மாலைப் பொழுதில் வீட்டில் முற்றுத்தில் உள்ள உயரம் குறைந்த கால்களை உடைய கட்டிலில் தலைவனும் தலைவியும் இணைந்து இருக்கப் புதல்வன் தலைவன் மார்பில் ஏறி ஊர்கின்றான். அதற்குரிய மகிழ்ச்சியும் நகையும் கூடியும் இன்பம் பாணனது யாழின் இசைக்கு ஒத்திருக்கின்றது. இருப்பினும் அது மெல்லிய பிணிப்புடையதாகும்.

## 2.5. தொகுப்புரை

இவ்வியலில் குறிஞ்சித்திணை, பாலைத்திணை, முல்லைத் திணை ஆகிய மூன்று திணைகளின் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் மற்றும் அதில் அமைந்திருக்கும் உள்ளுறை உவமம், அகத்திணை மரபுகள், அறத்தொடு நின்ற நிலை போன்றவை குறித்து மாணவர்களாகிய நாம் அறிந்து கொண்டோம்.

## 2.6. தன்மதிப்பிட்டு வினாக்குரிய விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1) 2.1.1. | 2) 2.1.2. | 3) 2.1.3. | 4) 2.1.4. |
| 5) 2.1.5. | 6) 2.1.6. | 7) 2.1.7. | 8) 2.1.8. |
| 9) 2.1.9. | 10) 2.1.10. | 11) 2.1.11. | 12) 2.1.12. |
| 13) 2.2.3. | 14) 2.3. | 15) 2.3.1. | 16) 2.3.3. |
| 17) 2.3.4. | 18) 2.3.5. | 19) 2.3.7. | 20) 2.3.9. |
| 21) 2.3.10. | 22) 2.4.1. | 23) 2.4.3. | 24) 2.4.4. |
| 25) 2.4.5. | 26) 2.4.6. | 27) 2.4.7. | 28) 2.4.8. |
| 29) 2.4.13. | | | |

## 2.7. பயிற்சி வினா

1) தோழி அறத்தொடு நின்ற நிலையை ஐங்குறுநூறு பாடல்கள் மூலம் விளக்குக.

2) ஐங்குறுநூற்றுத் திணை வைப்பு முறையை விளக்குக.

3) குறிஞ்சி, பாலை, முல்லை திணைகளை விளக்குக.

அலகு - 3

# குறுந்தொகை (1-10)

குறிப்பு எழுத இடம்

### முன்னுரை

நல்ல குறுந்தொகை எனச் சான்றோரால் சிறப்பிக்கப் பெற்றது குறுந்தொகை. இத்தொகை நூல், நானூறு பாடல்களை கொண்டுள்ளது. அதில் முதல் பத்துப்பாடல்கள் பாடப்பகுதியாக அமைகின்றது. உவமை நூல் என்ற சிறப்புக்குரியது.

### நோக்கம்

சங்க இலக்கியத்தில் குறுந்தொகை பெறும் இடத்தைக் காணுதல் மற்றும் சங்க இலக்கிய மக்களின் காதல் வாழ்க்கையைப் பற்றியும், பண்பாடு, பழக்கவழக்கங்கள் அவர்களின் அக உணர்வுகளைப் பற்றியும் அறிந்து கொள்ளுதலை நோக்கமாக கொண்டுள்ளது.

### பாட அமைப்பு

3.1. குறுந்தொகை விளக்கம்

- 3.1.1. செங்களம் படக்கொன்று... குலைக்காந் தட்டே
- 3.1.2. கொங்குதேர் வாழ்க்கை... நீ அறியும் பூவே
- 3.1.3. நிலத்தினும் பெரிதே... நாடனொடு நட்பு
- 3.1.4. நோம் என் நெஞ்சே... நோம் என் நெஞ்சே
- 3.1.5. அதுகொல் தோழி... பாடு எல்லாவே
- 3.1.6. நள்ளென்றன்றே... துஞ்சாதேனே
- 3.1.7. வில்லோன் காலன... முன்னியோரே
- 3.1.8. கழனி மாத்து... தன் புதல்வன் தாய்க்கே
- 3.1.9. யாய் ஆகியனே... கருப்பாரும்மே
- 3.1.10. யாய் ஆகியளே... நாணிய வருமே

3.2. தொகுப்புரை

3.3. தன் மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

3.4. பயிற்சி வினா

### 3.1. குறுந்தொகை விளக்கம்

குறுந்தொகை எட்டுத்தொகை நூல்களுள் இரண்டாவதாக அமைந்துள்ளது. இதனை நல்ல குறுந்தொகை எனப் புலவர்கள் பாராட்டுவர். குறைந்த அடிகளையுடைய பாடல்களை உடைய குறுந்தொகை நான்கு அடிகள் முதல் எட்டு அடிகள் வரை அமைந்துள்ளது. இத்தொகை முடித்தான் பூரிக்கோ. இந்நூல் அகத்திணை அனைத்து பொருட்களும் ஆசிரியப் பாவாகிய யாப்பாலும் அமைந்துள்ளது. கடவுள் வாழ்த்து நீங்கலாக இந்நூலில் தொகுக்கப் பெற்ற நானூற்றொரு செய்யுட்களையும் பாடிய புலவர் இரு சுற்றைலர் என்பதும் நாலடி முதல் எட்டடிவரை அமைந்த அகவற்பாக்கவே இதன்கண் தொகுக்கப் பெற்றன. 307, 391 ஆம் பாடல்கள் ஒன்பது அடிகளாக உள்ளன.

**தன் மதிப்பீட்டு வினா**

1. குறுந்தொகை சிறு குறிப்பு வரைக.

| | | |
|---|---|---|
| இதில் நான்கு அடிகள் உடைய பாடல் | – | 38 |
| ஐந்து அடிகள் | – | 90 |
| ஆறு அடிகள் | – | 93 |
| ஏழு அடிகள் | – | 103 |
| எட்டு அடிகள் | – | 75 |
| ஒன்பது அடிகள் | – | 2 |
| மொத்தம் | – | 401 |

குறிப்பு எழுத இடம்

குறுந்தொகையில் திணைப்பாடல்கள் இவ்வாறு அமைகின்றன. எல்லாச் சங்க இலக்கியப் பாடல்களும் தொகுக்கப் பெற்றவையே. ஒவ்வொரு நூலையும் தொகுத்தவர் ஒருவர் தொகுப்பித்தவர் ஒருவர். ஆனால் குறுந்தொகைப் பாடல்களை தொகுத்தவர் பூரிக்கோ தொகுப்பித்தவர் யார் என்று நமக்கு தெரியாது.

தொகை என்ற பெயரால் சங்க இலக்கியத்தில் அமைந்தவை குறுந்தொகையும், கலித்தொகையும் அகநானூற்றை நெடுந்தொகை என்றும் அழைப்பர். அகப்பொருள் பாடல்கள் அனைத்தும் சுட்டி பெயர்கொளப் பெறாதவை அதாவது தலைவன் தலைவி தோழி என்று இருக்குமே தவிர தலைவன் பெயரோ தலைவி பெயரோ, தோழி பெயரோ எந்த அகப்பாடல்களிலும் இருக்காது அகப்பாடல்கள் அன்பின் முதிர்ச்சியாகிய காதல் பாடல்கள் அவை உலகக் காதலர் அனைவருக்கும் உரியவை ஒரு தனிப்பட்ட இனத்திற்கோ, மொழியினர்க்கோ கூறப் பெற்றவை அல்ல. உலகினருக்குக் கூறப்பெற்றவை குறுந்தொகையில் உள்ள சங்க கால அகப்பாடல்கள்.

| | |
|---|---|
| குறிஞ்சி | 147 |
| முல்லை | 44 |
| மருதம் | 49 |
| நெய்தல் | 72 |
| பாலை | 89 |

ஆகிய பாடல்கள் ஆகும்.

இலண்டன் மாநகரில் பூமிக்கு அடியில் ஓடும் சுரங்கத் தொடர் வண்டியில் உலகில் சிறந்த குறும்பாடல்களை அது தோன்றிய மொழியிலும் வடிவிலும் ஆங்கில மொழி பெயர்ப்புடன் அச்சடித்து வைக்கும் வழக்கும் உள்ளது என்றும் அப்பாடல்கள் மண்ணுக்கு அடியில் மலரும் பாக்கள் (poems on the underground) என நூலாகவும் அச்சிட பெறுகின்றனவாம். அவ்வாறு அச்சிடப் பெற்ற பாடல்களுள் ஒன்று நம் குறுந்தொகை பாடல்.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

2. குறுந்தொகையை தொகுத்தவர் யார்?
3. தோழி கையுறை மறுத்தது ஏன்?

இத்தகு பெருமை வாய்ந்த குறுந்தொகையுள் அமைந்துள்ள முதல் 10 பாடல்கள் நமக்கு பாடமாக அமைந்துள்ளது.

### 3.1.1. செங்களம் படக்கொன்று... குலைக்காந் தட்டே

கூற்று : தோழி திணை : குறிஞ்சி

துறை : தோழி கையுறை மறுத்தது. அஃதாவது தோழியின் வாயிலாய்த் தலைவியைக் கூடக் கருதிய தலைவன் செங்காந்தள் மலரைத் தோழிக்குக்

காட்டி இதனைக் கையுறையாக ஏற்றுக் கொடுபோய்த் தலைவிக்குக் கொடுத்திடுக என வேண்டா நிற்பத் தோழி, தலைவி அரியள் என்பதுபட அதனை மறுத்தது.

இதன்கண் தலைவ! நீ தந்த இச் செங்காந்தள் மலர் எங்கட்கு அகப்பொருள் அன்று எமது மலையின் கண் இது நிரம்பவுளது காண்! ஆகுலின் இவ்வெண்பொருள் எமக்கு வேண்டா எனத் தோழி கையுறை மறுத்துக் கூறுகின்றாள்.

செங்களம் படக்கொன்று, அவுணர்த்தேய்த்து
செங்கோல் அம்பின் செங்கோட்டு யானை
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே

(அ–ள்) செங்களம் – சிவந்த போர்க்களம், களம்–போர்க்களம், அவுணர்–அசுரர், தேய்த்த–அழித்த கோடு–தந்தம், கழல்–வீரக்கழல், தொடி–வளையம் சேஎய்–முருகன், சேயோன், குருதி–இரத்தம், குலை–கொத்து காந்தள்–பூக்கள்.

**கருத்துரை**

போர்களம், குருதி பாய்தலால் செந்நியமுடைய களமாயிற்று. அசுரர்களைக் கொன்று அவர்கள் குலத்தில் ஒருவரும் இல்லையாகச் செய்த குருதியால் சிவந்த திரண்ட அம்பினையும், சிவந்த கொம்புகளைக் கொண்ட யானையையும், கழல் கிட்ட வீர வளையலையும் உடையவன் முருகன். அவனுடைய இம்மலை கொத்துக்களாகப் பூத்து விளங்கும் சிவந்த மலர்களைக் கொண்ட காந்தளை உடையது.

### 3.1.2. கொங்குதேர் வாழ்க்கை... நீ அறியும் பூவே

கூற்று : தலைவன் திணை : குறிஞ்சி

பாடியவர் : இறையனார்

துறை : நலம் பாராட்டுதல். இவற்றைப் புணர்ச்சிக்கண் இடையீடுபட்டு நின்ற தலைமகன், தலைமகளை நாணின் நீக்குதற் பொருட்டு மெய்த்தொட்டுப் பயிறல் முதலாயின அவள்மாட்டு நிகழ்த்தித் தனது அன்பு தோன்ற அவள் நலத்தைப் பாராட்டுதல்.

இதன் கண் தலைவன் தலைவியின் கூந்தலில் உறையும் வண்டொன்றினை விளித்து, "வண்டே! நீ மலர் தேர்ந்து கொங்குண்ணும் வாழ்க்கையுடையாய், ஆதலின் நீ அறியும் பூக்களில் இவள் கூந்தலினுங் காட்டில் நறியன உள்ளனவாக அறிதியோ?" என வினவுமுகத்தானே, அவள் கூந்தலின் இயற்கை மணத்தைப் பாராட்டுதல்.

"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!
காமம் செப்பாது, கண்டது மொழிமோ?
பயிலியது கெழீஇய நட்பின் மயில்இயல்,
செறிஎயிற்று, அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ, நீ அறியும் பூவே?

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

4. தலைவன் நலம் பாராட்டுதல் விளக்குக.
5. கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி விளக்குக.

(அ–ள்) கொங்கு–பூந்தாது, தேன், சிறை–சிறகு, அம்–அழகு, தும்பி–வண்டு, காமம்–விருப்பம், கண்டது, உண்மை–மொழி சொல், செழீஇய–பொருந்திய, செறி–நெருங்கிய, எயிறு–பல், நறிய–மணமுடையன.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

பூக்களில் உள்ள மணத்தை ஆராய்ந்து உண்ணுகின்ற வாழ்க்கையினையும், அகத்தே சிறகுகளையும் உடைய வண்டே, எனக்கு இன்பம் தருவதைக் கூறாமல், நீ உண்மையென அறிந்த ஒன்றனை என் வினாவிற்கு விடையாகக் கூறுவாயாக எழுமையும் என்னோடு பழகுதல் பொருந்திய நட்பினையும்.

### 3.1.3. நிலத்தினும் பெரிதே... நாடனொடு நட்பு

கூற்று : தலைவி திணை : குறிஞ்சி

துறை : தலைமகன் சிறைப்புறமாக அவன் வரைந்து கொள்வது வேண்டித் தோழி இயற்பழித்தவழித் தலைமகள் இயற்பட பொழிந்தது. அஃதாவது, களவின்பத்தையே விரும்பித் தலைவன் வரைந்து கோடல் கருதனாய்த் திரிதல் தங்கட்கு இன்னாதாதலின் அவன் தம் மனைப்படப்பை மருகே வந்து நிற்றல் கண்ட தோழி, அவன் வருகையை அறியாதான் போன்று அவனைப் பழித்துரைக்கக் கேட்ட தலைவி, அது பொறாது அவனைப் பாராட்டியது.

இதன்கண் தலைவி "யான் தலைவனோடு கொண்டுள்ள நட்புரிமை நிலத்தினும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடலினும் ஆழமானது" என்று, பாராட்டித் தோழிக்குக் கூறுகின்றாள்.

"நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே – சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பு"

– தேவகுலத்தார்.

**தேவகுலத்தார்**

தேவ குலம் – தேவர் தளி "அரசரெடுத்த தேவகுலம்"

சிந். (348 நச்)

**தன் மதிப்பீட்டு வினா**

6. நிலத்தினும் பெரிதே வானிலும் உயர்ந்தன்று விளக்குக.

(அ–ள்) உயர்ந்தன்று – உயர்ந்தது ஆரளவு – அளவினை உடையது. சாரல்–மலைச்சாரல் கருங்கோல், கரிய நிறமுடைய கம்பு குறிஞ்சிப்பூ மலைநாட்டில் பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை மலரும் மலர்.

**கருத்துரை**

கரிய கொம்புகளில் பூத்து விளங்கும் குறிஞ்சிப் பூக்களைக் கொண்டு, மலைப் பகுதியில் பெரிய தேனை வண்டுகள் தொகுத்தற்கு இடனாகிய

நாட்டையுடைய தலைவனொடு யான்கொண்ட நட்பு சொல்லப்புகுங்கால் நிலத்தைவிட அகலத்தால் பெரிது; நினையப் புகுங்கால் வானத்தைவிட உயர்ச்சியால் மிக்கது. உள்புகுந்து எல்லை காணப்புகுங்கால், கடலைவிட ஆழத்தால் அளவிடற்கு அரிது.

### 3.1.4. நோம் என் நெஞ்சே... நோம் என் நெஞ்சே

கூற்று : தலைமகள் திணை : நெய்தல்

துறை : பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

துறை விளக்கம் : தலைவன் வரைபொருட்டு அகன்றானாக, அப்பிரிவை ஆற்றாது இவள் இறந்துபடுவாளோ எனக் கவலையுற்ற தோழிக்கு யான் ஆற்றுவன் கவலற்க என்பது படத் தலைவி கூறியது.

இதன் கண், "தோழி! சான்றோராகிய நங்காதலர் தண்ணளியை நினைந்தே யான் ஆற்றிருப்பேன், யான் ஆற்றாது வருந்துவது ஏற்றுக்கெனில் சால்புடைய அவரை நீ சால்பிலர் என்று கூறுகின்றமை கேட்கப் பொறாமைக்கே காண்" எனத் தலைவி கூறுகின்றாள்.

"நோம் என் நெஞ்சே! நோம் என் நெஞ்சே!
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்த நங்காதலர்
அமைவிலர் ஆகுதல் நோம் என் நெஞ்சே!"

– காமஞ்சேர் குளத்தார்

#### காமஞ்சேர் குளத்தார்

பிரிந்தாரைக் காமத்திற் சேர்க்கும் குளமுண்டு என்பது புகாரிலுள்ள இரு காமத்திணையோர்" (பட்டின. 39) வரலாற்றான் அறியப்படுவது.

(அ–ள்) நோம்–நோகும், வருந்தும், தீய்ப்பு–உடலின் வெம்மையால் கருகச் செய்தல், அமைதல்–பொருந்துதல் அமைவு இலா – பொருந்தாதவர்.

#### கருத்துரை

கண்ணுக்குக் காவலாகிய இமைகளைத் தீயக்கும் கருவியைப் போன்ற வெம்மையுடைய என் கண்ணிரினைத் தம் கையால் தடுத்து நாம் உயிர் தாங்கி வாழ்வதற்காகப் பிரியாது தங்கிய, நம்மிடம் காதலுடைய தலைவர், இப்பொழுது நம்மிடம் வுலகுதல் இவர் என்று நின்னால் சொல்லப்படும் தன்மை நினைத்து என் நெஞ்சு முக்காலும் வருந்துவதாயிற்று.

### 3.1.5. அதுகொல் தோழி... பாடு எல்லாவே

கூற்று : தலைவி திணை : நெய்தல்

துறை : பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

7. பிரிவிடை ஆற்றாளெனக் கலன்ற தோழிக்கு கிழத்தி கூறியது யாது ?
8. நரிதெருஉத் தலைவன் கூறியது யாது ?

குறிப்பு எழுத இடம்

துறை விளக்கம் : அஃதாவது, வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவனது பரிவாற்றாமையாலே மிகவும் வருந்தின. தலைவியின் நிலைகண்டு கவலையுற்ற தோழிக்குத் தலைவி அக்காம நோயின் கொடுமை செப்பியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'இக்கண்கள் தம்மகத்தே காதலர் உளராகவும், அஃதறியாவாங் அவர் பிரிந்து போயினர் என்று கருதி உறங்காமல் வருந்தாநின்றன. இத்தகைய மடமையைச் செய்யும் இயல்பிற்றோ காமநோய்" என்று கூறுகின்றாள்

அதுகொல், தோழி! காம நோயே ?
வதிகுருகு உறங்கும் இனநிழற் புன்னை
உடைதிரைத் திவலை அரும்பும் தீம்நீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தென
பல் இதழ், உண்கண் பாடு ஒல்லாவே

– நரிவெருஉத் தலையார்

(அ–ள்) வதி–தங்குதல் குருகு–நாரை, புன்னை–புன்னைமரம், திவலை–துளி, தீம் நீர்–இனிய, மெல்லாம் புலம்பன்–மெல்லிய நிலத்தையுடைய கடற்கரைத் தலைவன் என்னைவிட்டுப் பிரிந்த குவளை போன்ற மையுண்ட கண்கள் உறங்குவதற்கு இயலாதன ஆயின.

**கருத்துரை**

மருத நிலத்திலிருந்து வந்து நெய்தல் நிலத்தில் துணையின்றித் தங்கும் குருகு, மீன் உண்டு தன் நிலத்தையும் மறந்து உறங்குவதற்குக் காரணமாகிய புன்னை மரங்களில், கரையை உடைக்கின்ற அலையின் திவலைகள் பட்டமையால் அரும்புகள் மலரும் இத்தகைய இனிய நீரினையுடைய மென்புலமாகிய நெய்தல் நிலத்திற்கு உரியவன் பிரிந்தான் என்று பல பூக்களைப் போன்ற மையுண்ட கண்கள் துயிலுதலைப் பொருந்தாவாயின. காமநோய் என்பது அத்தன்மையதோ.

**3.1.6. நள்ளென்றன்றே... துஞ்சாதேனே**

கூற்று : தலைவி திணை : நெய்தல்

துறை : வரைவிடை வைத்துப் பிரிந்தவழி ஆற்றாளான தலைமகள் தோழியை நெருங்கிச் சொல்லியது ?

துறை விளக்கம் : அஃதாவது தலைவன் தலைவியை மணஞ்செய்தற்குப் பொருளீட்டப் பிரிந்தானாக அப்பிரிவாற்றாமையால் வருந்திய தலைவி தனக்கு உசாத்துணையாகாது துயின்ற தோழியைப் பழித்துத் தன் வருத்த மிகுதி தோன்றக் கூறியது.

இதன்கண் தலைவி தோழி கேட்கும்படி "இருளோ நள்ளென்னும் ஓசையுடைத்தாயிருந்தது. இவ்விடையாமத்தே புறங்கூறும் மடவோரும் வாயவிந்து உறங்காநின்றனர்; இப்பேருலகம் முழுவதுமே துயின்று கிடக்கின்றது.

நான் ஒருத்தி மட்டுமே இவ்வுலகில் துயிலாது வருந்துகின்றேன்" என்று கூறுகின்றான்.

"நள்ளென்றன்றே யாமம்; சொல் அவித்து
இனிது அடங்கினரே மாக்கள்; முனிவு இன்று
நனந்தலை உலகமும் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சாதேனே"

– பதுமனார்

(அ–ள்) நள்–செறிவு அவிந்து–அடங்கிய யாமம்–நடு இரவு, மாக்கள்–மக்கள், முனிவு–வெறுப்பு, நனந்தலை–இடமகன்ற, துஞ்சும்–தூங்கும்.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

இரவுப் பொழுதின் நடுக்கூறாகிய யாமப்பொழுது நள் என்ற ஓசையுடையதாக உள்ளது. மக்கள் பேச்சொழிந்து, வெறுப்பின்றி இனிமையாக உறங்குகின்றனர். அகன்ற இடத்தையுடைய உலகத்திலுள்ள உயிர்களும் இனிது துயல்கின்றன. நிச்சயமாக யான் ஒருத்தியே துயிலாது உள்ளேன்.

### 3.1.7. வில்லோன் காலன... முன்னியோரே

கூற்று : கண்டோர் திணை : பாலை

துறை : செலவின்கண் இடைச்சுரத்துக் கண்டோர் கூறியது ?

துறை விளக்கம் : அஃதாவது தலைவி தன் தமரின் நீங்கித் தலைவனோடே உடன்போகும் பொழுது அவர்கள் சென்ற பாலை நிலத்தின்கண் ஆற்றெதிர்ப்பட்டோர் இவர்களைக் கண்டு இரங்கிக் கூறியது.

இதன் கண், தோற்ற முதலியவற்றால் இவர் உயர்குடி மக்களாகக் காணப்படுகின்றனர். இவள் சிலம்பு அணிந்திருக்கின்றளாகலின் இவர்கள் மணம் செய்துகொண்டாராகக் கருதவும் இடமில்லை. மெல்லடியுடைய இந்நல்லாளும் இவ்வில்லோனும் யாவரே அறிகிலேம் இக்கொடிய பாலைநிலத்தே வழிச் செல்கின்றார் அளியர்!

"வில்லோன் காலன கழலே; தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்
யார் கொல்? அளியர் தாமே–ஆரியர்
கயிறு ஆடு பறையின் கால்பொரக் கலங்கி
வாகை வெண்நெற்று ஒலிக்கும்
வேய்பயில் அழுவம் முன்னியோரே"

– பெரும்பதுமனார்

**தன் மதிப்பீட்டு வினா**

9. பாலைநில வழியில் தலைவனும் தலைவியும் சென்ற போது கண்டோர் கூறியது யாது ?

(அ–ள்) வில்லோன்–வில்லை உடையவன், கழல்–காலணி தொடியோள்–தோள்வளையணிந்தவள், அளியர்–இரங்கத்தக்கவர் ஆரியர்–கழைக் கூத்தர். வேய்–மூங்கில், அழுவம்–அடந்த காட்டுவழி–முன்னியோரை கருதிச் செல்கின்றவர் நெற்றுவிதை. கழைக் கூத்தர்கள், மூங்கிலியின் மேல் கட்டிய

குறிப்பு எழுத இடம்

கயிற்றின் மேல் ஏறிநின்று ஆடும்போது கொட்டப்படும் பறை ஒலியைப் போல, மேல்காற்று வீசும்போது நிலை கலங்கி, வாகை மரத்தின் வெண்ணிற நெற்றுக்கள் ஒலி எழுப்பும், அத்தகைய மூங்கில் செறிந்த பாலை நிலப்பரப்பில் கடந்து செல்ல நினைத்து வருபவர்களுள், கையில் வில்லை ஏந்திய இவ்வாடவன் கால்களில் வீரக்கழல்கள் உள்ளன. வளையணிந்த கைகளையுடைய இம்மகளின் மெல்லிய அடிகளில் மேல் சிலம்புகள் உள்ளன. இந்நேலார் யாவரோ ? இவர்கள் அளிக்கத்தக்கவர்.

### 3.1.8. கழனி மாதர்... தன் புதல்வன் தாய்க்கே

கூற்று : காதற்பரத்தை திணை : மருதம்

துறை : கிழத்தி, தன்னைப் புறனுரைத்தாள் எனக்கேட்ட காதற்பரத்தை அவர்கட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

துறை விளக்கம் : அஃதாவது, தலைவி தன்னை இகழ்ந்து கூறினாள் எனப் பிறர் சொல்லக்கேட்ட பரத்தை தலைவிக்குப் பாங்காயினார் கேட்கும்படி தலைவனை இகழ்ந்து கூறியது.

இதன்கண், தலைவன் எனக்கு வயப்பட்டான் போன்றிருந்து விட்டுத் தலைவியின் பாற் சென்று அவட்கஞ்சி அவள் மனம் போன்று இயைந்து ஒழுகுகின்றான். ஆதலின், அவள் செருக்குற்று என்னை இகழ்வாளாயினள் எனப் பரத்தை கூறுகின்றாள்.

"கழனி மாத்து விளைந்துஉகு தீம்பழம்
பழன வாளை கதூஉம் ஊரன்
எம்இல் பெருமொழி கூறி, தம் இல்,
கையும் காலும் தூக்கத் தூக்கும்
ஆடிப்பாவை போல
மேவன செய்யும், தன் புதல்வன் தாய்க்கே"

– ஆலங்குடி வங்கனார்

(அ–ள்) கழனி–வயல், தீம்–இனிமை, பழமை–பொய்கை, வாளை–வாளைமீன், கதூஉம்–கவ்வும் மேவன–விரும்பியதை.

**தன் மதிப்பீட்டு வினா**

10. கையும் காலும் தூக்கும் அடிப்பாவை ஆறுவது எது ?

### கருத்துரை

வயல் அருகில் உள்ள மாமரத்தின் முற்றி வீழ்ந்த இனிய பழத்தைப் பொய்கையிலுள்ள வாளைமீன்கள், கவ்வி உண்பதற்கு இடனாகிய மருதநிலத் தலைமகன், எம்முடைய வீட்டில், எம்மை வயப்படுத்துவதற்காகப் பெருமொழிகளைக் கூறிச் சென்று, தம்முடைய வீட்டில், முன் நிற்பவர் கையையும் காலையும் தூக்கும்போது, தானும் தூக்குகின்ற கண்ணாடியுள் தோன்றும் பாவையைப் போல, புதல்வனை ஈன்ற தன்னுடைய மனைவிக்கு அவள் விரும்பிய செயல்களைச் செய்வான்

### 3.1.9. யாய் ஆகியனே... கருப்பாரும்மே

கூற்று : தோழி திணை : நெய்தல்

துறை : தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது ?

குறிப்பு எழுத இடம்

துறை விளக்கம் : அஃதாவது தலைவன் தனது பரத்தைமையால் ஊடியிருந்த தலைவியின் ஊடல் தீர்க்கக் கருதித் தோழியின்பாற் குறையிரப்பத் தோழி, தலைவி ஊடல் தீர்வாள் என்ற குறிப்பைத் தலைவனுக்குக் கூறியது.

இதன்கண், தலைவி உடல் மெலிவுற்றாளேனும் நின் கொடுமையை நாணி என்னை மறைத்தொழுகின்றாளாகலின் அவள் தாய்மைத்தன்மை உடையவளாயினள்; நீ அவனை அடைதல் எளிதெனத் தோழி கூறுகின்றாள்.

யாய் ஆகியளே மாஅயாளே
மடைமாண் செப்பில் தமிய வைகிய
பெய்யாப் பூவின் மெய் சாயின ளே;
பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி லுதம் மலடு தொறும்
கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும்
தண்ணம் துறைவன் கொடுமை
நம்முன் நாணிக் கரப்பாடும்மே.

– கயமனார்

(அ–ள்) யாய்–தாய் மாஅயோள் – மாமை நிறமுடையவள் பாசடை–பசியஇலை, நிவந்த–உயர்ந்த, ஒதம்–அலை கழி–உப்பங்குழி, மலகு–அதிகரிக்கும் தோறும், கயல்–அழமான நீர் நிலை (குளம்) கரப்பாடும் – மறைத்துப் பேசுவாள்.

#### கருத்துரை

மாமை நிறம் உடையவள் என் தாய் ஆயினள். பொருத்துதல் அமைந்த செப்பின்கண், துணை ஏதுமின்றித் தனியே வைக்கப்பட்ட, ஒருவர் சூடாத மலர்களைப் போல, இவள் உடல் வாடினள், பசிய இலைகளுக்கிடையே வளர்ந்துள்ள உயர்ந்த திரட்டியையுடைய தண்டினைக் கொண்ட நீலமலர், பல இனங்களாக விளங்கும் மீன்களைக் கொண்ட உப்பங்குழியின்கண், நீர் அலை பெருகுந்தோறும், ஆழமான குளிர்ந்த நீர்த்துறைக்கு உரிய தலைவன், தன்னைப் போணாமையேயன்றிப் பரத்தையைப் பேணும் கொடுமையை நம்முன் புலப்படுத்த நாணமுற்றுத் தன்னுள் மறைந்தனளாய் உரையாடுவாள்.

### 3.1.10. யாய் ஆகியளே... நாணிய வருமே

கூற்று : மருதம் திணை : மருதம்

துறை : தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது

துறை விளக்கம் : அஃதாவது ஒன்பதாம் செய்யுட்குரைத்தால் குறைத்துக் கொல்க.

குறிப்பு எழுத இடம்

இதன்கண், தலைவி தலைவன் செய்த கொடுமையை மறைத்து அவன் நாணும்படி வாராநின்றாள் எனத் தோழி கூறுகின்றாள்.

"யாய் ஆகியளே விழவு முதலாட்டி,
பயிறு போல் இணர பைந்தாது படீஇயர்
உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
காஞ்சி ஊரன் கொடுமை
கரத்தனள் ஆகலின் நாணிய வருமே"

– லுரம்போகியார்

(அ–ள்) யாய்–தாய், விழவு–திருவிழா கொண்டாடுவது போல, பயிறு–பயற்றங்காய், இணர–மகிழ்தற்குரிய தலைவி, பூங்கொத்து, படீஇய–படுவதற்காக, வாங்கிய–வளைந்த மென்சினை–கிளை, கொடுமை–பரத்தையோடு இணைவது, கரந்தனள்–மறைந்தனள்.

**கருத்துரை**

தலைவன் செல்வம் பெற்று விழாக்கோலம் பூண்டு மகிழ்தற்குக் காரணமாய தலைவி, தாயாக விளங்குகின்றாள். மணம் வீசும் மலர்களைக் கொண்ட காஞ்சி மரத்தின் பயற்றங்காய் போன்ற பூங்கொத்துக்களில் உள்ள மகரந்தத்தூள், தங்கள் மேனியிலும் உழுகின்ற பகட்டின் மேலும், வயலிலும் படும்படியாக நிலத்தை உழுபவர்கள் வளைப்பர் இத்தகைய வளம் பொருந்திய மருத நிலத்துத் தலைமகனுடைய கொடுமையை நாம் அறியாதவாறு மறைத்தனள் ஆகலின், அவன் நாணும்படி அவனை எதிர்கொள்ள வருகின்றாள்.

## 3.2. தொகுப்புரை

குறுந்தொகையில் அமைந்த பத்து பாடல்களில் அக வாழ்க்கையில் ஏற்படும் காதல் ஒழுக்கங்களையும், மக்களின் நிலைப்பாடுகளையும் நம் கண்முன் படம் பிடித்துக் காட்டுகின்றனர். எனவே மாணவர்களே சங்க இலக்கியம் வீரத்தையும், காதலையும் இரண்டு கண்களாக கொண்டன என்பது விளங்குகின்றது.

## 3.3. தன் மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

1) 3.1 2) 3.1 3) 3.1.1 4) 3.1.2
5) 3.1.3 6) 3.1.4 7) 3.1.5 8) 3.1.6
9) 3.1.7 10) 3.1.8

## 3.4. பயிற்சி வினா

1) குறுந்தொகை விளக்கம் தருக ?

2) கொங்குதோர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி விளக்குக ?

3) குறுந்தொகையின் தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்ததை விளக்குக ?

குறிப்பு எழுத இடம்

அலகு - 4

# குறுந்தொகை (11-20)

## முன்னுரை

குறுந்தொகை எட்டுத்தொகை நூல்களுள் இரண்டாவதாக அமைந்துள்ளது. இதனை நல்ல குறுந்தொகை என அழைப்பர். இந்நூல் நாலடி முதல் எட்டடி வரையுள்ள ஐந்திணை தழுவிய 400 பாக்களைக் கொண்டது இந்நூல். அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளை அனுபவ மெருகோடு உரைக்கும் எண்ணற்ற பாக்கள் இந்நூலிலே உள்ளன. இல்லற வாழ்க்கையின் இன்ப நுகர்வினை உவமைகளோடு சுவைப்பட விளக்கும் நூலாக குறுந்தொகை உள்ளது. இதில் முதல் பத்து பாடல்கள் முந்தைய இயலிலும் அதற்கு பின் பதினொன்று முதல் இருபது பாடல்களை இவ்வியலிலும் காணலாம்.

## நோக்கம்

கூற்றுகளின் வழியாகவும், பண்டைய இலக்கிய வாழ்வியல் முறைகளையும், அகப்பாடல்களின் சுவைகளையும் உவமையோடு விளக்குவதை நோக்கமாக கொண்டுள்ளது.

## பாட அமைப்பு

4.1. கோடு ஈர் இலங்கு... அவருடைய நாடே

4.2. எறும்பு அளைவின்... இல் அழுங்கல்

4.3. மாசு அறக் கழீஇய... நம் குவளை அம் கண்ணே

4.4. அமிழ்து பொதி செந்தா... நாணுகம் சிறிதே

4.5. பறைபட பணிபலம்... முன்கை மடந்தை நட்பே

4.6. உள்ளார் கொல்லோ... காடு இறந்தோரே

4.7. மாஎன மடலும் ஊர்ப... காமம் காழ்க கொளினே

4.8. வேரல் வேலி வேர்க்... உயிர்தவச் சிறிது காமமோ பெரிது

4.9. எவவி இழந்த... பல் நெல் கூந்தல் யாரளோ நமக்கே

4.10. அருளும் அன்பும்... மடந்தை தாமே.

4.11. தொகுப்புரை

4.12. தன்மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

4.13. பயிற்சி வினா

## 4.1. கோடு ஈர் இலங்கு... அவருடைய நாடே

கூற்று : தலைவி திணை : பாலை

துறை : தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்வாளாய்த் தோழி கேட்பச் சொல்லியது.

துறை விளக்கம் : அஃதாவது தலைவனுடைய பிரிவாற்றாமையால் உடல் மெலிந்து வருந்திய தலைவி தன் நெஞ்சிற்குக் கூறுவாள் போல அவ்வருத்த மிகுதியைத் தோழிக்குப் புலப்படுத்தியது.

குறிப்பு எழுத இடம்

இதன் கண், தலைவி தன் நெஞ்சை விளித்து "நெஞ்சே நாம் அவரைப் பிரிந்தமையால் உடல் மெலிந்து கண்கலுந்து அழுதலினின்றும் தப்புவோம் யான் வேற்று நாட்டில் அவர் இருப்பினும் அங்குச் செல்லத் துணிந்தேன். ஆதலால் நீயும் உடன்வருவாயாக" எனக் கூறுகின்றாள்.

கோடு ஈர் இலங்கு வளை நெகிழ, நாளும்
பாடு இல கவிழும் கண்ணொடு புலம்பி
ஈங்கு இவண் உறைதலும் உய்குவம், ஆங்கே
ஏழு, இனி–வாழி, என் நெஞ்சே! – முனாது,
குல்லைக் கண்ணி வடுகர் முனையது
வல்வேற் கட்டி நல்நாட்டு உம்பர்
மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்
வழிபடல் சூழ்ந்திசின், அவருடைய நாட்டே

– மாமூலனார்

சங்கினை அறுத்துச் செய்யப்பட்ட, முன்கையில் விளங்கும் வளையல்கள், உடல் மெலிவினால் நெகிழுமாறு, தலைவன் வரைவிடை வைத்துச் சென்ற ஒவ்வொரு நாளும் உறக்கமில்லாமல் கலங்கி அழும் கண்ணொடு, தனிமைத் துயரால் நாம் இங்கு வருந்திக் கிடத்தலினின்று தப்புவோம். என் நெஞ்சே! நீ வாழ்வாயாக நீ அவனுடைய நாட்டிற்குச் செல்ல இப்பொழுதே முற்பட்டு எழுவாயாக, கஞ்சல் குல்லையைத் தலைமாலையாக அணிந்த வடுகருடைய பகைப்புலம், வலிய வேற்படையையுடைய கட்டி என்பவனுடைய நல்ல நாட்டிற்கு அப்பால் உள்ளது. நம் மொழி பேசாது வேற்று மொழி பேசப்படும். அந்நாட்டில் தலைவன் இருப்பினும், அவனை நாடிச் செல்லும் அன்னைத் தொடர்ந்து வருதலை யான் துணிந்துள்ளேன்.

கோடு–சங்கு முனாது–முற்பட்வுள்ள, குல்லை–கஞ்சங்குல்லை என்னும் செடி கட்டி–கங்க நாட்டின் தலைவன், வழிபடல்–தலைவன் உள்ள இடத்திற்குச் செல்லுதல்.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்வளாய்த் தோழி கேட்பச் சொல்லியது யாது ?

ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு கிழத்தி உரைத்தது யாது ?

### 4.2. எறும்பு அளைவின்... இல் அழுங்கல்

கூற்று : தலைவி திணை : பாலை

துறை : ஆற்றாள் எனக் இவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது ?

துறை விளக்கம் : அஃதாவது, தலைவன் பிரிவினை ஆற்றாது பெரிதும் வருந்தாநின்ற தலைவி இறந்துபடுவாளோ எனக் கவலையுற்ற தோழிக்குத் தலைவி, யான் வருந்துவது பிரிவிற்கன்று வேறொன்றினுக்கு என்று கூறியது.

இதன்கண், தலைவி தனது ஆற்றாமை கண்டு வருந்திய தோழியை நோக்கி, யான் ஆற்றேனாவது அவர் பிரிந்தார் என்பதற்கன்று அவர் சென்ற

வழியின் கொடுமையை எண்ணியே வருந்துகின்றேன். அஃதறியாது இவ்வூர் அயன்மை கூறி என்னை இடித்துரையாநின்றது என்று கூறுகின்றாள்.

குறிப்பு எழுத இடம்

எறும்பி அளைபின் குறும்பல் சுனைய
உலைக்கல் அன்ன பாறை ஏறி,
கொடுவில் எயினர், பகழி மாய்க்கும்
கவலைத்து என்ப, அவர்தேர் சென்ற ஆறே;
அதுமற்று அவலம் கொள்ளாது
நொதுமல் கழறும் இல்அழுங்கல் ஊரே

– ஓதலாந்தையார்

எறும்பி–எறும்பு, அளை–புற்று, உலைக்கல்–கொல்லன் உலைக் கூடத்தில் உள்ள அடைகல், எயினர்–வேட்டுவர், கவலைத்து–கவர்த்த வழிகளை உடையது, ஆறு–நெறி, மாய்த்தல்–தீட்டுதல் நொதுமல்–அயல்.

**கருத்துரை**

எறும்புப் புற்றுகளைப் போன்ற, குறுகிய, பலவாகிய சுனைகளையுடைய பாறைகள் உள்ளன. அப்பாறைகள், கொல்லனது உலைக் கூடத்திலுள்ள பட்டடைக் கல்லைப் போல வெம்மையுடையவை வளைந்த வில்லினை ஏந்திய வேட்டுவர், அப்பாறையின் மேல் ஏறித் தங்கள் அம்புகளைத் தேய்த்துக் கூர்மையாக்குவர். தலைவனுடைய தேர் சென்ற வழி இத்தகைய பாலை நிலத்தில் கவர்த்த பல வழிகளையுடையது என் போல அவ்வழியைப் பற்றித் துயரம் கொள்ளாமல், இந்த ஆரவாரத்தினையுடைய ஊரானது என்னை அயலாகக் கருதி இடித்துரைக்கும்.

**4.3. மாசு அறக் கழீஇய... நம் குவளை அம் கண்ணே**

கூற்று : தலைவி திணை : குறிஞ்சி

துறை : தலைவன் தோழியிற் கூட்டங்கூடி ஆற்றும் வகையான் ஆற்றுவித்துப் பிரிய, வேறுபட்ட கிழத்தி தோழிக்குரைத்தது.

துறை விளக்கம் : அஃதாவது பாங்கியிற் கூட்டத்தின் பின்னர்த் தலைவன் பிரிந்தானாக அப்பிரிவாற்றாது வேறுபட்ட தலைவியைக் கவன்ற தோழிக்குத் தலைவி தன் ஆற்றாமைக்குக் காரணங் கூறியது.

இதன் கண், தலைவி, தலைவர் என்னைப் பிரிந்து பெரிய நோயைச் செய்தனர்; அதனால் என் கண் பசலை பாய்ந்தன. யான் வருந்தா நின்றேன் எனத் தோழிக்குக் கூறுகின்றாள்.

**தன் மதிப்பீட்டு வினா**

3. பசலை ஆர்ந்த நம் குவளை அம் கண்ணே என கூறியது யாது?

மாசு அறக் கழிஇய யானை போலப்
பெரும்பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல்
பைதல் ஒரு தலைச் சேர்க்கும் நாடன்
நோய் தந்தனனே – தோழி!
பசலை ஆர்த்த, நம் குவளை அம் கண்ணே

– கபிலர்

மாசு–புழுதி, பெயல்–மழை பிணர்–நால்வகை ஊறுகளில் ஒன்று துறுகல்–உருண்டைக்கல், பைதல்–குளிர்ச்சி சேர்க்கும்–தங்கும் நாடன்–தலைவனைக் குறிக்கும் சொல்.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

தோழி! மேல்படிந்துள்ள புழுதி நீங்கும்படி பாகனால் கழுவப் பெற்ற யானையைப் போல, பெரும்மழையினால் தாக்கப்பட்ட சருக்கரையுடைய பெரிய துறுகல்லின் குளிர்ச்சியையுடைய ஒரு புறத்தே நம்முடன் தங்கியநாடன், நம்மை நீங்கிப் பிரிவுப் துயரைத் தந்தனன். அதனால் குவளை போன்ற கண்களில் பசலை படர்ந்தது.

## 4.4. அமிழ்து பொதி செந்தா... நாணுகம் சிறிதே

கூற்று : தலைவன் திணை : குறிஞ்சி

துறை : "மடன்மா கூறும் இடனுமாருண்டே" என்பதனால் (தொ–ல் களவி–11) தோழி குறைமறுத்துழித் தலைமகன் மடலேறுவன் என்பதுபடச் சொல்லியது.

அஃதாவது தோழியாற் குறைமறுக்கப்பட்ட தலைவன் இனி யான் மடன் மாவூர்ந்து என்னைத் துன்புறுத்தியவள் இன்னளென்பதை ஊரறியச் செய்து பல்லோரும் பழிதூற்றச் செய்வேன் என அத்தோழி கேட்பக் கூறியது.

இதன்கண், தலைவன், யான் சின்மொழியரிவையை மடன்மா வேறிப்பெறுவேன். யான் அங்ஙனம் பெற்றபொழுது அவ்வூரிலுள்ளோர் அறிவாராக. ஆனால் அங்ஙனம் மடன்மேலேறி இவளைப் பெறுவதற்கு என்னை மடன்மா மேலே கண்ட பலரும் இவனே போலும் இந்நேலாளுடைய கணவன் என்று கூறாநிற்பர் என்பதற்கே சிறிது நாணுகின்றேன் எனத் தோழி கேட்பக் கூறுகின்றாள்.

**தன் மதிப்பீட்டு வினா**

4. "மடன்மா கூறும் இனுமாநண்டே" விளக்குக.

அமிழ்து பொதி செந்தா அஞ்ச வந்த
வார்ந்து இலங்கு வைஎயிற்றுச் சின்மொழி அரிலையைப்
பெருகதில் அம்ம, அவ்வூரே! மறுகில்
நல்லோள் கணவன் இவன்; எனப்
பல்லோர்கூற யாஅம் நாணுகம் சிறிதே

– தொல்கபிலர்

வந்த–எழுந்த, வார்தல்–நேராதல் (உரிச்சொல்) வைஎயிறு–கூரியபற்கள் பெறுக–மடல் ஏறிப் பெறுவேனாக, மறுகு–வீதி.

**கருத்துரை**

அமுதத்தின் இனிமை நிரம்பிய, செவ்விய நாக்கு, அஞ்சுதற்குக் காரணமாக முளைத்த, நேராக விளங்கும் கூர்மையான பற்களையும், சிலவாகிய சொற்களையும் உடைய தலைவியை யான் மடலேறிப் பெறுவேனாகுக. அவ்வாறு பெற்றதனை, இதுகாறும் அறியாத இவ்வூரில் உள்ளவர் அறிவாராக.

இந்நல்லாளுடைய கணவன் இவன் என்று, இவ்வூரில் உள்ள பலரும் கூற, யானும் என் காதலியும் சிறிது பொழுது நாணமடைவோம்.

### 4.5. பறைபட பணிபலம்... முன்கை மடந்தை நட்பே

குறிப்பு எழுத இடம்

கூற்று : செவிலி திணை : பாலை

துறை : உடன் போயின பின்றைத் தோழி செவிலிக்கு அறத்தோடு நின்றாள்; நிற்பச் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.

அஃதாவது, தலைவனோடு தலைவி தமரிற் பிரிந்து சென்ற பின்னர்த் தோழி அச்செய்தியைத் தன் தாயாகிய செவிலிக்கு அறிவுறுத்தச் செவிலி அச்செய்தியை நற்றாய்க்கு நின்மகள் கற்புக்கடம் பூண்டாள் என்று கூறியது.

இதன்கண், செவிலி நற்றாயை நோக்கி நின்மகள் வெளவேல் விடலையொடு கொண்ட காதற்கேண்மை அவர் தம்முள் பலரறிமணம் செய்து கொண்டமையால் நாலூர்க் கோசர் நன்மொழிபோல உண்மையாயிற்று என்று அறிவுறுத்துகின்றாள்.

பறைபட பணிபலம் ஆர்ப்ப, இறை கொஸ்பு
தொல் முதலாத்துப் பொதியில் தோன்றிய
நால் ஊர்க் கோசர் நல்மொழி போல
வாய் ஆகின்றே – தோழி! ஆய் கழல்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே

(அ–ள்) பட–ஒலிக்க, பணிலம்–சங்கு, இறைகொள்பு–தங்குதல் தொன்முதலாழ்–பழைய ஆலமரத்துப் பழைய பொதியில், பொதியில்–பொதுஇடம், அம்பலம் நாலூர்க்கோசர்–நான்கு ஊர்களில் வாழ்ந்த கோசர் என்னும் பிரிவினர்; நான்கு பிரிவினராய கோசர், நாலூர் என்னும் ஊரிராய கோசர்.

விடலை – மறவன், பாலை நிலத்தலைமகன்.

பழைய ஆலமரத்தின் அடியில் மக்கள் கூடும் பொதுமன்றத்தின் கண், தாம் சொன்ன சொல் பிழையாமல், நான்கு ஊர்களைச் சார்ந்த கோசர் என்ற குடியினர் வந்து தோன்றினர். அவர்களுடைய பிழையாத வாய்மொழி போல, காலில் ஆய்ந்து கட்டிய கழலினையும் செம்மையாகிய இலைபோன்ற வடிவுடைய வெள்ளிய வேலினையும் ஏந்திய தலைவனொடு, பலவாகத் தொக்க வளையல்களை அணிந்த முன்கையையுடைய மடந்தை, ஒரு மனையில் தங்கியமையால் அவர்கள் கொண்ட நட்பு உண்மையாயிற்று.

**தன் மதிப்பீட்டு வினா**

5. அறத்தோடு நின்ற நிலைமை விளக்குக ?

### 4.6. உள்ளார் கொல்லோ... காடு இறந்தோரே

கூற்று : தோழி திணை : பாலை

துறை : பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைமகள் ஆற்றாமை கண்டு தோழி கூறியது.

குறிப்பு எழுத இடம்

அஃதாவது, பொருளீட்டும் பொருட்டுப் பிரிந்த தலைமகள் மீண்டும் வாராமை கண்டு வருந்திய தலைவியை அவர் இன்னே வருவரெனக் கூறித் தோழி ஆற்றுவித்தது. இதன் கண், தலைவியை நோக்கித் தோழி அன்னாய் நின்னைத் தலைவர் மறந்தமைவாரெல்லர். அவர் சென்ற பாலைநிலத்தே ஆண்பல்லி தன் காதற்றுணையாகிய பெண் பல்லியை அழைத்தலைக் கேட்பர். அங்ஙனம் கேட்டபொழுது உன்னை நினைந்து விரைந்து மீண்டு வருவார் என்று கூறுகின்றாள்.

"உள்ளார் கொல்லோ–தோழி கள்வர்
பொன்டினை பகழி செப்பம் கொண்மார்
உகிர்நுதி புரட்டும் ஓசை போல
செங்காற்பல்லி தன்துணை பயிரும்
அங்காற் கள்ளி அம் காடு இறந்தோரே ?"

– பாலை பாடிய பொருங்கடுங்கோ.

(அ–ள்) உள்ளுதல்–நினைத்தல், பொன்–இரும்பு, பகழி–அம்பு, செப்பம்–கூர்மை, செப்பம்–கெண்மார்–உருவக்குத்தும் கூர்மையைக் காணும் பொருட்டு உகிர்–நகம், பயிர்தல்–அழைத்தல், இறத்தல்–நீங்குதல்.

ஆறலைக் கள்வர், இரும்பைத் தலையிடத்தே கொண்ட தங்கள் அம்புகளின் கூர்மையை அறிய நகத்தால் அவற்றின் நுனியை நெருடுவர். அவ்வோசையைப் போல, செவ்விய கால்களையுடைய ஆண்பல்லி தனக்குத் துணையாகிய பெண்பல்லியை அழைக்கும் ஒலி விளப்படும். இத்தகைய பல்லிகள் தங்கியுள்ள, அழகிய அடிப்பகுதியைக் கொண்ட கள்ளிச் செடிகள் மிகுந்த காட்டினைக் கடந்து சென்ற நம் காதலர் நம்மை நினையாரோ (நினைப்பார்).

### 4.7. மாஎன மடலும் ஊர்ப... காமம் காழ்க கொளினே

கூற்று : தலைவன் திணை : குறிஞ்சி

துறை : தோழியிற் கூட்டம் வேண்டிப் பின்னின்ற தலைமகன் தோழி குறை மாறாமற் கூறியது.

அஃதாவது, தன் குறையை நிறைவேற்ற மறுத்த தோழியைத் தலைவன் நீ மறுப்பாயாயின் யான் வேறு வழியானும் தலைவியைப் பெறுதல்களும் என்பதுபடக் கூறியது. இதன்கண் குறைமறுத்த தோழியை நோக்கித் தலைவன் தான் மடலூர்தல் முதலியன செய்தேனும் தலைவியைப் பெறுவேன் என்பது குறிப்பாற் தோன்றுமாறு, காமம் கமழ்கொண்டோர் இன்னின்ன செய்வதுண்டு என உலகியல் மேலிட்டுக் கூறுகின்றான்.

**தன் மதிப்பீட்டு வினா**

6. பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைமகள் ஆற்றாமை கண்டு தோழி கூறியது யாது ?

மாஎன மடலும் ஊர்ப; பூ எனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப;
மறுகின் ஆர்க்கவும் படுப;
பறிதும் ஆகுப–காமம் காழ்க கொளினே

– பேரெயின் மூறுவலான்

மா–குதிரை, மடல்–பனை மடலால் செய்யப்பட்ட குதிரை, பிறிது–சாதற்குரிய செயல், காழ்–விதை.

**கருத்துரை**

காமநோய் முதிர்கின்றபோது, ஊரும் குதிரை என, வாராத பனைமடலை ஊர்வர். சூடும் பூவென ஒருவரும் சூடாத குவிந்த அரும்புகளையுடைய எருக்க மாலையை அணிந்து கொள்வர். தெருவில் பலரால் ஆராவரிக்கவும் படுவர், தம் கருத்து முற்றுப்பெறாத நிலையல் சாகவும் துணிவர்.

குறிப்பு எழுத இடம்

**4.8. வேரல் வேலி வேர்க்... உயிர்தவச் சிறிது காமமோ பெரிது**

கூற்று : தலைவன் திணை : குறிஞ்சி

துறை : இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு வரைவு கடாயது.

அஃதாவது, மனைப்படப்பையில் இரவுக் குறிக்கண் தலைவியைப் புணர்ந்து செல்லும் தலைமகனைத் தோழி தனியிடத்தே கண்டு தலைவியின் வருத்தநிலையுணர்த்தி விரைவில் அவளைப் பலரறிமணம் செய்து கொள்ளல் வேண்டும் என வற்புறுத்திக் கூறியது. இதன்கண் தோழி தலைவனை நோக்கி நாடனே! சிறிய பலாக்கொம்பிலே பெரியபழம் தூங்கினாற்போன்று தலைவியின் உயிராகிய சிறிய கொம்பிலே காமமாகிய பெரும்பழம் கணிந்து தூங்குகின்றது. இச்செவ்வியறிந்து நீ அக்கனியை நுகர்ந்தின் புறக்கடவாய், இன்றேல் அக் காமமுதிர்ச்சி அவள் உயிர்க்கு இறுதியைப் பயக்கும் என்று கூறுகின்றாள்.

**தன் மதிப்பீட்டு வினா**

7. மடலூர்தல் என்றால் என்ன?

8. உயிர்தவச் சிறிது காமமோ பெரிது விளக்குக?

வேரல் வேலி பேர்க் கோட் பலவின்
சாரல் நாட! செவ்வியை ஆகுமதி
யார் அஃது அறிந்திசினோரே – சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு இவன்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிது

– கபிலர்

வேரல் – சிறுமூங்கில், வேலி–வாழ் முள்வேலி, சாரல்–பக்கமலை கோடு–கொம்பு, செவ்வி–தலைவியை வரைந்து கொள்ளும் பொழுது.

**கருத்துரை**

மூங்கிலை வேலியாக உடைய, வேரில் பழக்குலைகளை உடைய பலாமரங்கள் செறிந்த மலைப்பக்கத்து நாடனே நின் நாட்டுப் பக்கமலையில் வளர்ந்துள்ள பலாவின் சிறிய கொம்பில் பெரிய பழம் தன்னைத் தாங்கும் எவ்வகைப் பற்றுக் கோடுமின்றித் தானே பருத்துத் தொங்குவது போல, இத்தலைவியின் உயிராகிய கொம்பு, மிகவும் சிறியதாய் உள்ளது. அதன்கண் விளங்கும் காமநோய் என்னும் பழமோ மிகவும் பெரியதாய் உள்ளது. அந்நிலையை அறிந்தவர் நின்னையன்றி யார் உளர்? (உருலரம் இவர்) அவளை நுகர்வதற்குரிய காலத்தை நீ உடையை ஆகுக.

குறிப்பு எழுத இடம்

### 4.9. எவவி இழந்த... பல் நெல் கூந்தல் யாரளோ நமக்கே

கூற்று : தலைவன் திணை : மருதம்

துறை : உணாப்பு வயின் வாரா ஊடற்கண் தலைமகள் சொல்லியது.

அஃதாவது, தனது பரத்தமை காரணமாக கூடியிருக்கும் தலைவியைத் தலைமகன் நெருங்கி யான் தவறிலேன் எனப் பணிமொழி பல கூறியுணர்த்தவும், அவள் ஊடல் தீர்ந்திலளாகப் பின்னர்த் தலைவன் தன் நெஞ்சை நோக்கிப் புலந்து கூறியது.

எவ்வி இழந்த வறுமையர் பாணர்
பூகில் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி வாழியர் நெஞ்சே! மனைமரத்து
எல்லுறும் மௌவல் நாறும்
பல்இருங் கூந்தல் யாரளோ நமக்கே ?

– பரணர்

எல்–ஒளி, மௌவல்–முல்லை, இனைமதி–வருந்துவாயாக.

**கருத்துரை**

நெஞ்சே! நீ வாழ்வாயாக, எவ்வி என்னும் வள்ளல் இறந்தமையால பாணர்கள் வறுமையுடையராயினர் அவர்களுடைய பொற்பூ அணியப் பெறாத வறிய தலையைப் போல, நீயும் பொலிவிழந்து வருந்துவாயாக மனைத் தோட்டத்தில் உள்ள மரத்தின் மீது படர்ந்த, ஒளியுடைய முல்லைமலரின் மணம் கமழும் பலவாகிய கூரிய கூந்தலையுடைய இவள், நமக்கு எத்திறத்தில் உறவுடையரோ ?

### 4.10. அருளும் அன்பும்... மடந்தை தாமே.

கூற்று : தலைவி திணை : பாலை

கூற்று : பாலை

துறை : செலவுணர்த்திய தோழிக்குக் கிழத்தி உரைத்தது

அஃதாவது, பொருள் வயிற் பிரியக் கருதிய தலைவன் தன் கருத்தைக் தோழிக்கு கூறினாளாகத் தோழி தலைவன் பிரியக் கருதியதைத் தலைவிக்குக் கூற அவள் புலந்து கூறியது.

இதன்கண், தலைவனது பிரிவுணர்த்திய தோழியை நோக்கி அவர் அருளும் அன்புமின்றி நம்மைப் பிரியக் கருதன் நாமென் செய்கோம் அங்ஙனம் பிரிவோர் அறிஞர் ஆயின் ஆகுக அப்பிரிவை ஆற்றாது வருந்தும் யாம் பேதையம் ஆவேமெனில் ஆகே என்று கூறுகின்றாள்.

அருளும் அன்பும் நீக்கி, துணை துறந்து
பொருள் வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

9. உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண் தலைமகள் சொல்லியது யாது ?
10. மடவம் ஆக, மடந்தை தாமே விளக்குக ?

உரவோர் உரவோர் ஆக!
மடவம் ஆக; மடந்தை நாமே

– கோப்பெருஞ்சோழன்

குறிப்பு எழுத இடம்

அருள்–தொடர்பிலார் மட்டுத் தோன்றும் பிரிவுணர்ச்சி, அன்பு–தொடர்புடையார். மாட்டுத் தோன்றும் காதல், உரவோர்–அறிவுடையவர், மடவம்–அறிவில்லாத யாம் அறிவில்லேம்.

**கருத்துரை**

தோழியே! தொடர்பிலார் மாட்டுத் தோன்றும் அருளையும் தொடர்புடையார் மாட்டுத் தோன்றும் அன்பையும் துறந்து, பொருள் தேடும் நோக்கம் ஒன்றே உடையராக நம்மைப் பிரிந்து செல்லும். காதலர், அறிவுடையவராயின் அத்தகைய ஆற்றலையுடைய அவர் அறிவுடையவரே ஆகுக. அவரைப் பிரிந்திருப்பதற்கு உரிய ஆற்றவில்லாத நாம், அறிவில்லேம் ஆகுக.

## 4.11. தொகுப்புரை

குறுந்தொகை எட்டுத்தொகை நூல்களில் இரண்டாவதாக அமைந்த இந்நூல் அகத்திணையாகிய பொருளாலும் ஆசிரியப்பாவாகிய யாப்பாலும் அமைந்தவை இதில் இல்லற வாழ்க்கையின் ஒழுக்கங்கள் கூற்று, திணை, துறையில் ஒழுட்குப்பட அமைந்திருப்பதை நாம் காண முடிந்தது.

## 4.12. தன்மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

1) 4.1 2) 4.2 3) 4.3 4) 4.4
5) 4.5 6) 4.6 7) 4.7 8) 4.8
9) 4.9 10) 4.10

## 4.13. பயிற்சி வினா

1. பொருளின் பொருட்டுப் பிரியக் கருதிய தலைமகன் தன் நெஞ்சிற்கு கூறியது யாது?
2. குறுந்தொகையில் பாலைத் திணை பாடல்களை விளக்குக.
3. குறுந்தொகை விளக்கம் தருக?

குறிப்பு எழுத இடம்

# அலகு - 5

## அகநானூறு

### முன்னுரை

சங்கப் பாடல்களை அகம் என்றும் புறம் என்றும் பிரிப்பர். காதலையொட்டிய உள்ளத்துணர்வுகளையும் அகத்தினின்று எழுகின்ற இன்பியல் வாழ்வின் ஆர்வத் துடிதுடிப்புகளையும் அளவற்ற எண்ணச் சூழலையும் காட்டுவனவே தமிழரின் அகநூல்கள் என்பர். போர், கொடை, வீரம் முதலிய புறவுணர்வுகள் மேலோங்கிய பாடல்களைப் புறம் என்பர். கடைச் சங்க காலத்துத் தொகுக்கப் பெற்றது. அகநானூறு நெடுந்தொகை என்ற பெயரும் இதற்குண்டு. அத்தகைய அகநானூற்றை நமக்குப் பாடமாக உள்ளது.

### நோக்கம்

அகநானூற்றுப் பாடல்களில் அகம் பற்றி முழுவதுமாக பேசப்படுகின்றது. பொருளீட்ட சென்ற தலைவனின் மனநிலை, தலைவியின் மனநிலை உள்ளுறையாகவும், உவமையாகவும் கூறப்படுவதையும், மற்றும் அதன் முதல், கரு, உரிப்பொருட்கள் மூலம் அகநானூறு பாடல்கள் எவ்வாறு கட்டமைக்கப்பட்டுள்ளன போன்றவை அகநானூற்றில் உள்ள முதல் ஐந்து பாடல்களில் மூலம் அறிந்து கொள்வதே நோக்கமாக கொண்டுள்ளது.

### பாட அமைப்பு



### 5.0. அகநானூறு விளக்கம்

**தன் மதிப்பீட்டு வினா**

1. அகம் என்றால் என்ன ?

அகம்+நான்கு+நூறு – அகநானூறு என்றாகும். அகம் என்ற சொல்லில் உள்ள மகர ஒற்று அதற்கு முன் வருகின்ற சொல்லாகிய நான்கு என்பதிலுள்ள மெல்லினத்தால் அகம் என்ற சொல்லிலுள்ள மகரம் வீழ்ந்து விடும். அதனால், அகம்+நான்கு+நூறு – அகநானூறு என்றாகிறது.

அகம் என்ற சொல்லுக்கு மனம், வீடு, உள்ளீடம் காம இன்பம் ஆகாயம், உலகம், எண்ணம், அகப்பொருள், மருதம், ஆன்மா போன்ற பல பொருள்கள்

உள்ளன. இங்கு அகம் என்ற சொல் அகப்பொருளைக் குறிப்பதோடு, வீட்டு வாழ்க்கையைப் பற்றியும் பேசுகிறது. புறம் என்பது நாட்டு வாழ்க்கையைப் பற்றிப் பேசும் நூல்.

குறிப்பு எழுத இடம்

தொல்காப்பியர் காலத்தில் இலக்கிய அடிப்படையாக அகம், புறம் என்ற இரண்டு நிலையில் தான் அமைந்தன. தொல்காப்பியர் காலத்திற்குப் பிற்காலத்தில் திருக்குறளில் அறம், பொருள், இன்பம், என்ற மூன்று நிலையில் இலக்கிய அடிப்படை அமைந்தது. வடமொழித் தாக்கத்தால் அறம், பொருள், இன்பம், வீடு என நான்கு நிலையாக இலக்கிய அடிப்படை வளர்ந்தது. தொடக்கத்தில் இருந்தது அகம் புறம் என்ற இரண்டு மட்டுமே. ஆனால் தொல்காப்பியர் *இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு* என்று முப்பொருளையும் சுட்டுவார். அறம், பொருள், இன்பம் என்ற மூன்றினையும் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். ஆனால், சிறு வயதில் இன்பமும், நடு வயதில் பொருள் ஈட்டலும், முதிய வயதில் அற உணர்வும் அதிகமாகும் என்ற நிலையில், இன்பமும், பொருளும் அறனும் என்று இன்பத்தை முதலில் வைத்தார். ஆனால், அறவழியில் பொருள் ஈட்ட வேண்டும். அறவழியில் இன்பம் துய்க்க வேண்டும் என்ற நிலையில்தான் வள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்று அமைத்தார்.

அகநானூற்றைத் தொகுக்கச் செய்தவன் மன்னன் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, தொகுத்தவர் மதுரை உப்பூரிகுடி கிழார் மகனார் உருத்திர சன்மர்.

இதனை மிகவும் சிந்தித்துத் தொகுத்துள்ளார். ஒற்றைப்படை எண்ணலான பாடல்கள், 1, 3, 5, 7, 9 ஆகியவை பாலைப் பாடல்கள் 400 பாடல்களில், 200 பாடல்கள் பாவைப் பாடல்கள். இரட்டைப்படை எண்களில் 2, 8, 12, 18 எனப்படும் பாடல்கள் குறிஞ்சிப் பாடல்கள். குறிஞ்சிப் பாடல்கள் 30, 4, 14, 24 எனும் எண்ணுள்ள பாடல்கள் முல்லைப்பாடல்கள் அவை 40, 6, 16, 26 எனும் எண்ணுள்ள பாடல்கள் நெய்தல் பாடல்கள். அவை 40 மிகத் திட்டமிட்டு இவ்வமைப்பு செய்யப் பெற்றுள்ளது. மருதப் பாடல்களில் தான் பெரும் பாலும் பரத்தையர் ஊடல் போன்ற செய்திகள் அமையும். பாலைப் பாடல்கள் மிகுதியாக இருப்பதால் பிரிதல்–அதிலும் பொருள் வயிற் பிரிதல் மிகுதியாக அமைகிறது. காரணம் தலைவன் பொருள் ஈட்டிய பின்புதான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று நினைத்தது.

அகநானூற்றில் தோழி கூற்றே மிகுதியாக உள்ளது. இவ்வாறு அமைந்த அகநானூற்றில் உள்ள முதல் 5 பாடல்கள் நமக்குப் பாடமாக அமைந்துள்ளது.

**தன் மதிப்பீட்டு வினா**

2. அகநானூறு மொத்தம் எத்தனை பாடல்களை உடையது ?

### 5.1. விண்டுபடத் ததைந்த... தோன்றல் காடு இறந்தாரே?

கூற்று : தலைவி திணை : பாலை

பாடியவர் : மாமூலனார்

வண்டுபடத் ததைந்த கண்ணி, ஒண்கழல்,
உருவக் குதிரை மழவர் ஒட்டிய
முருகன் நற்போர் நெடுவேள் ஆவி,
அறுகோட்டு யானைப் பொதினி ஆங்கண்,

குறிப்பு எழுத இடம்

சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கல்போல் பிரியலம் என்ற சொல்தாம்
மறந்தனர் கொல்லோ தோழி! சிறந்த
வேய்மருள் பணைத்தோள் நெகிழ, சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக,

அழல்போல் வெங்கதிர் பைது அறத் தெறுதலின்
நிழல் தேய்ந்து உலறிய மரத்த அறைகாப்பு,
அறுநீர்ப் பைஞ்சுனை ஆம்அறப் புலர்தலின்
உகுநெல் பொரியும் வெம்மைய; யாவரும்
வழங்குநர் இன்மையின், வௌவுநர் மடிய

சுரம்புல் லென்ற ஆற்ற, அலங்கு சினை
நார் இல் முருங்கை நவிரல் வான்பூச்
சூரல் அம் கடுவளி எடுப்ப ஆருற்று,
உடை திரைப் பதிர்வின் பொங்கி முன்
கடல் போல் தோன்றல காடு இறந்தோரே?

## அருஞ்சொற் பொருள் விளக்கம்

கண்ணி–தலை மாலை, உரு–அச்சம், ஆல்–சிற்றரசர்கள் ஒருவன், பொதினி–பொதிய, மலை, பயின்–அரக்கு, பக–பிளக்க, அழல்–நெருப்பு, பைது–பசுமை, காய்வு–கொதித்தஅறை–பறை, வௌவுநர்–கொள்ளையடிப்போர், நவிரல்–குலைந்த, சூரல்–சூறாவளி, வளி–காற்று, பொலம்–பொன், கலம்–அணிகலன், வெறுக்கை–செல்வம், வேய்–மூங்கில், பணை–பருத்த.

## கருத்துரை

வண்டுகள் மொய்க்கின்ற தலைமாலையை உடையவனும் வீரக் கழலைக் கொண்டவனும், அஞ்சத்தக்க குதிரைகளை உடைய மழவரை வென்றவனும், முருகனைப் போன்ற போர் வெற்றிய உடையவனும், ஆகிய பெருமை பொருந்திய ஆவி என்பானது அறுத்துத் திருத்திய கொம்புகளை உடைய யானைகளை மிகுதியாகக் கொண்ட பொதினி மலை இடத்தில் உள்ள அரக்கொடு பொருந்திய சாணைக்கல் போன்று பிரிய மாட்டோம் என்று கூறியதை நம் தலைவர் மறந்து விட்டாரோ! மூங்கில் போன்ற பருத்த தோள்கள் மெலிய தூரத்து நாட்டிற்குப் பொன்னையும், அணிகலன்களையும் செல்வத்தையும் பெறுவதற்காக பாலை நிலமாகிய வெம்மையுடைய காட்டைக் கடந்து சென்றாரே?

**தன் மதிப்பீட்டு வினா**

3. பாலை நில வருணனையை விவரி?

நிலம் வெடிக்குமாறு கதிரவன் மிகுதியாகத் தெருதலால் பசுமையற்ற நிழலே இல்லாத மரங்களை உடைய நெல்லும் பொறிகின்ற காட்டில் யாரும் செல்வோர் இல்லாமையால் ஆறலைப் போல் வறுமையால் மெலிய பாலைநில வழி வெறுமையற்று இருக்க அங்குள்ள முருங்க மரப் பூக்கள் உலர்ந்து பறக்க சூரல் காற்று மிகுதியாக அடிக்க, உடைந்த திரைகளின் துளிகளைப் போலக் கடல் பரந்த பொய்த் தேரையுடைய காட்டைக் கடந்து சென்றாரோ?

## 5.2. கோழிலை வாழைக்... ஊர் கொண்டன்றே

கூற்று : தோழி திணை : குறிஞ்சி

பாடியவர் : கபிலர்

குறிப்பு எழுத இடம்

துறை : பகற்குறிக் கண் செறிப்பு அறிவுறீஇத் தோழி வரைவு கடாயது

கோழிலை வாழைக் கோள்மிகு பெருங்குலை
ஊழுறு தீம்கனி, உண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொடு, ஊழ்படு
பாறை நெடுஞ்சுனை, வளைந்த தேறல்

அறியாது உண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல் செல் லாது,
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்
குறியா இன்பம், எளிதின், நின்மலைப்
பல்வேறு விலங்கும், எய்தும் நாட!

குறித்த இன்பம் நினக்கு எவன் அரிய?
வெறுத்த ஏளர் வேய்புரை பணைத்தோள்;
நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு,
இவளும், இனையள் ஆயின், தந்தை
அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றி

கலங்குல் வருதலும் உரியை; பைழ்புதல்
வேங்கையும் ஒள் இணர் விரிந்தன
நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே

(அ–ள்) கோள்–வளமான, ஊழ்–முறை, சாரல்–பக்கமலை, தேறல்–தேன், கடுவன்–ஆண்குரங்கு, கறி–மிளகு கொடி, சாந்தம்–சந்தனமரம், நறுவீ–மணமுடைய மலர், அடுக்கம்–படுக்கை, வெறுத்த–மிகுதியான, கடி–காவல், புதல்–புதர், இணர்–பூங்கொத்து.

### கருத்துரை

வளமான இலைகளைக் கொண்ட வாழை மரம் பெரிய குலைகளை ஈன்று முதிர்ந்த கனிகளைத் தந்தது. அருகே பக்கமலையில் இனிமையான சுவையோடு கூடிய பலாப் பழங்கள் உள்ள மரங்கள் இருந்தன. பலா மரங்களில் இருந்து அருகில் உள்ள நீண்ட சுனையில் தேன் வடிந்து கொண்டே இருந்தது. அத்தேனை உண்ட ஆண் குரங்கு மிளகு கொடியை உடைய சந்தன மரத்தில் ஏற இயலாது.

அருகில் உள்ள மணம் பொருந்திய மலர்ப்படுக்கையில் தூங்கும். இது போன்ற உன் நாட்டு விலங்குகளும் எதிர்பாராத இன்பத்தைப் பெறுகின்ற நாட்டை உடையவனே அதனால் நீ விரும்புகின்ற இன்பத்தைப் பெறுவது எவ்வாறு அரியதாகும்?

**தன் மதிப்பீட்டு வினா**

4. பகற்குறியின் நிலைப்பாடு யாது?

குறிப்பு எழுத இடம்

மிக்க அழகினை உடைய மூங்கில் போன்ற பருத்த தோள்களை உடைய தலைவியின் நெஞ்சம் தன்னிடம் நில்லாது உன்னிடத்து வருகின்ற நிலையில் உள்ளது. அவளின் தந்தை உங்கள் களவறிந்து கடிய காவலை அமைத்துள்ளார். அவ்வாறு இருந்தாலும் நீ இரவில் வருவதற்கு உரியவன்.

இப்போது பசுமையான புதர்கள், சூழ்ந்த வேங்கை மரத்தில் பூங் கொத்துக்கள் விரிந்துள்ளன. பிறைச் சந்திரனும் முழுச்சந்திரன் ஆனான். வேங்கை மலரும் காலத்தில் பூரணச் சந்திரன் இருக்கும் போது திருமணம் செய்வது பழங்காலத்தில் அமைந்தது.

### 5.3. இருங்கழி முதலை... ஆர் இடை விலங்கு ஒன்றே

கூற்று : தலைவன் திணை : பாலை

பாடியவர் : எயினந்தை மகனார் இளங்கீரனார்.

துறை : முன் ஒரு காலத்து, நெஞ்சினால் பொருள் வளக்கப்பட்டு பிரிந்தான். தலைமகன் பிரிந்து இடைச்சுரத்தினின்று அவள் நலம் நயந்து மீளலுற்ற நெஞ்சினைக் கழறிப்போம், பொருள் முடித்து வந்த தலைமகன், பின்னும் பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிற்குச் சொல்லி செலவு அழுங்கியது.

இருங்கழி முதலை, மேஎந்தோல் அன்ன,
கருங்கால் ஓமைக் காண்புஇன் பெருஞ்சினைக்
கடியுடை நனந்தலை, ஈன்று இளைப் பட்ட,
கொடுவாய்ப் பேடைக்கு அல்கு இரை தரீஇய,

மான்று வேட்டு எழுந்த செஞ்செவி எருவை–
வான் தோய் சிமைய விறல் வரைக் கவாஅன்,
துளங்கு நடைமரையா வலம்படத் தொலைச்சி
ஒண் செங்குருதி உவற்றி உண்டு அருந்துபு,
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை

கொள்கை மாந்தரின் ஆனாது கவரும்
புல் இலை மராஅத்த அகன்சேண் அத்தம்,
கலம்தரல் உள்ளமொடு கழியக் காட்டி,
பின் நின்று துரக்கும் நெஞ்சம்! நின்வாய்
வாய் போல் பொயம் மொழி எவ்வம் என் களைமா–

கவிர் இதழ் அன்ன காண்புஇன் செவ்வாய்
அம் தீம் கிளவி, ஆய் இழை, மடந்தை
கொடுஞ் குழைக்கு அமர்ந்த நோக்கம்
நெடுஞ் சேண் ஆர் இடை விலங்கும் ஞான்றே ?

**தன் மதிப்பீட்டு வினா**

5. தலைவன் தன் நெஞ்சிற்கு சொல்லியது யாது ?

(அ–ள்) இரும்–பெரிய, கழி–உப்பங்கழி, செமை–மரம், நனந்தலை–அகன்ற இடம், கொடு–வளைந்த, அல்கு–மிக்க, எருமை–பருந்தின் ஒருவகை, கவாஅன்–பக்கமலை, கவர்–முள் முருக்க மரம்.

**கருத்துரை**

உப்பங்கழியால் உள்ள முதலையின் மேல் தோல் போன்ற ஓமை மரத்தின் கரிய அடி இருந்தது. ஓமை மரங்கள் நிறைந்த காட்டில் வளைந்த வாயினை உடைய குஞ்சினை ஈன்ற பெண் பறவைக்கும் சிவந்த செவிகளை உடைய எருவையாகிய ஆண் பறவை மலைச்சாரலில் ஏற்கனவே புலியால் கொல்லப் பெற்ற மானின் இறைச்சி புலால் நாற்றமோடு வீசிக் கிடக்க அதைக் கவர்ந்து வந்து பெண் பறவைக்குக் கொடுக்கும். அத்தகைய ஆறலைக் கள்வர் பிறர் பொருளை கவர்ந்து செல்லும் இடமாகிய புள்ளிய மாமரங்களைக் கொண்ட பாலை நிலப் பெருவழியில் அணிகலன்களை ஈட்டிக் கொணரும் எண்ணத்தால் செல்லும் நெஞ்சமே!

முருக்க இதழ் போன்ற வாயினை உடைய இனிய சொற்களை உடைய அணிகளை உடைய தலைவனின் வளைந்த காதணியுடன் பார்த்த நோக்கம் என்னுடைய உள்ளத்தைச் தரத்திடம் செல்வதைத் தடுக்கும். ஆனால் நீ நெஞ்சே உண்மை போன்று பொய்மொழி கூறி என் துன்பத்தை எவ்வாறு போக்க இயலும்.

குறிப்பு எழுத இடம்

## 5.4. முல்லை வைந்துனை... நின் மாண் நலம் படர்ந்தே

கூற்று : தோழி திணை : முல்லை

பாடியவர் : குறுங்குடி மருதனார்

துறை : தோழி தலைமகளைப் பருவங் காட்டி வற்புறுத்தியது.

முல்லை வைந்நுனை தோன்ற, இல்லமொடு
பைங்கால் கொன்றை மென்பிணி அவிழ,
இரும்பு திரித்தன்ன மாஇரு மருப்பின்,
பரல் அவல் அடைய, இரலை தெறிப்ப,

மலர்ந்த ஞாலம் புலம்பு புறக்கொடுப்ப,
கருவி வானம் இதழ் உறை சிதறி,
கார் செய் தன்றே, கவின் பெறு கானம்.
குரங்கு உளைப் பொலிந்த கொய்அவல் புரவி,
நரம்பு ஆர்த்தன்ன வாங்குவள்பு அரிய

பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாது உண் பறவை பேதுறல் அஞ்சி,
மணிநா ஆர்த்த மாண் வினைத் தேரன்,
உவக்காண் தோன்றும்–குறும்பொறை நாடன்,
கறங்கு இசை விழவின் உறந்தைக் குணாது

நெடும்பெருங் குன்றத்து அமன்ற காந்தள்
போது அவிழ் அலரின் நாறும்–
ஆய் தொடி அரிவை! நின் மாண் நலம் படர்ந்தே.

குறிப்பு எழுத இடம்

(அ-ள்) வை–கூர்மை, நுனை–அரும்பு, இல்லம்–தேற்றாமரம், அவல்–பள்ளம், இரலை–ஆண் மான், தெறிப்ப–துள்ளிக் குதிப்ப, கவின்–அழகு, உறந்தை–சோழர் தலைநகரம், குணாது–கிழக்கே, குரங்கு–வளைந்த, பொங்கர்–சோலை, உளை–தலையாட்டம்.

**கருத்துரை**

கார்காலம் வந்துவிட்டது அதனால் வானத்தில் இருந்து மழைத்துளிகள் சிதறின. பாலை நில வழி அழகு பெற்றது. முல்லை மொட்டுக்களும் தேற்றா மொட்டுக்களும், கொன்றை மொட்டுக்களும், கட்டவிழ்ந்து மலர்களாயின. இரும்பைத் திரித்தது போன்ற கரு நிறமுடைய கொம்புகளைக் கொண்ட மான்கள் துள்ளிக் குதித்து ஆடின, தலைவன் வளைந்த தலையாட்டத்தை உடைய பிடரி மயிரினைக் கொண்ட குதிரையில் தலைவியைக் காண வருகிறான்.

கார் காலத்தில் சோலைகள் அனைத்திலும் பூக்கள் மலர்ந்திருந்தன. பூக்களில் உள்ள தாதை உண்பதற்கு வண்டுகள் தம் துணையோடு சேர்ந்து தேனை உறிஞ்சிக் கொண்டு இருந்தன. தலைவன் தன் தேரை இழுத்து வருகின்ற குதிரைகளின் கழுத்தில் உள்ள மணிகளின் ஓசையில் வண்டுகள் அஞ்சும் பிரியும் என்று கருதி மணிகளை ஒலிக்காமல் கட்டி விரைவாகத் தலைவியைக் காண வந்து கொண்டிருக்கிறான் அருகில் உள்ள குன்றத்தில் காந்தள் மலர்கள் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருந்தன. இந்நிலையில் தன் தலைவியைக் காணத் தலைவன் வருகிறான்.

## 5.5. அறநிலை பெறாஅது... ஆகவும் இனைவேள்

கூற்று : தலைமகன் திணை : பாலை

பாடியவர் : பாலை பாடிய பெருங்கடுங்கோ

துறை : பொருள் வயிற் பிரியக் கருதிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

அளிநிலை பொறாஅது அமரிய முகத்தள்,
விளிநிலை கொள்ளாள், தமியள், மென்மெல்ல,
நலம்மிகு சேவடி நிலம்வடுக் கொளாஅ,
குறுக வந்து, தன் கூர் எயிறு தோன்ற

வறிது அகத்து எழுந்த வாய்அல் முறுவலள்,
கண்ணியது உணரா அளவை, ஒண்ணுதல்
வினை தலைப்படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த ஓமை முதையல் அம் காட்டு,
பளிங்கத்து அன்ன பல்காய் நெல்லி,

மோட்டு இரும்பாறை, ஈட்டுவட்டு ஏய்ப்ப,
உதிர்வன படூஉம் கதிர்தெறு கவா அன்,
மாய்த்த போல மழுகுநுனை தோற்றி,

பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்,
விரல் நுதி சிதைக்கும் றிர் நிலை அதர,

பரல் முரம்பு ஆகிய பயம் இல், கானம்
இறப்ப எண்ணுதிர் ஆயின்–அறத்தாறு
அன்றுஎன மொழிந்த தொன்றுபடு கிளவி
அன்ன ஆக என்னுநள் போல,
முன்னம் காட்டி, முகத்தின் உரையா,

ஓவச் செய்தியின் ஒன்று நினைந்து ஒற்றி,
பாவை மாய்த்த பனிநீர் நோக்மொடு,
ஆகத்து ஒடுங்கிய புதல்வன் புன்தலைத்
தூநீர் பயந்த துணை அமை பிணையல்
போயினள் உயிர்த்த காலை, மாமலர்

மணி உரு இழந்த அணி அழி தோற்றம்
கண்டே கடிந்தனம் செலவே ஒண்டொடி
உழையம் ஆகவும் இனைவோள்
பிளையலள் மாதோ, பிரிதும் நாம் எனினே!

குறிப்பு எழுத இடம்

(அ–ள்) அளி–அருள், எயிறு–பல், முளிந்த–காய்ந்த, முதையல்–முதிய, மோடு–உயர்ந்த, இரும்–பெரிய, இறப்ப–கடக்க, அறத்தாறு–அறவழி, ஆகம்–மார்பு, ஓவம்–ஓவியம், முன்னம்–குறிப்பால், புன்–மென்மை, கடிந்தனம்–தவிர்த்தோம்.

**கருத்துரை**

ஒளி பொருந்திய நெற்றியை உடைய தலைவி. நம் அருளைப் பெறாததால் மாறுபட்ட முகத்தினளாய், நாம் அழைத்தலைக் கேளாமல் தனி ஆளாய் மெதுவாகத் தன் சிவந்த அடிகள் சுவடு தோன்ற பக்கத்தில் வந்து அவள் கூறிய பற்கள் தோன்றத் தன்னிடத்து எழுந்த உண்மையல்லாத சிரிப்போடு நாம் எண்ணியதை உணரும் முன்பே நாம் பொருள் வயிற் பிரிதலை விரும்பாத எண்ணத்துடன் இது அறவழி அன்று என்று சொல்லிய அளவில் கழிக என்று கூறுவாள் போல் குறிப்பினால் முகத்தில் காட்டி ஓவியம் உணராது நிற்பது போல நமக்கு உடன்படாமையைத் துணிந்து தனது கண்ணின் பாவையை மறைத்து நிற்கும் நடுக்கத்தைச் செய்யும் நீரையுடைய பார்வையுடன் தன் புதல்வனை மார்பில் அணைத்து அவன் தலையில் உள்ள மாலையை மோந்து பெருமூச்சு விட்ட காலத்து அந்த மலர் பொலிவிழந்து இருந்த காட்சியைக் கண்ட போது நாம் பிரிந்து செல்வோம் என்ற எண்ணத்தைத் தவிர்த்தோம். காய்ந்த ஓமை மரங்களை உடைய காட்டில் நீர் வற்றிய பளிங்கு போன்ற நெல்லிக் காய்கள் பெரிய பாறைகளில் உதிர்ந்து கிடக்கும். அது விளையாடும் வட்டுக்களைப் போன்று இருந்தது. அது வழிச் செல்வோர் விறலின் முனையைச் சிதைக்கும் நிலையில் இருந்தது. பற்கள்களை உடைய வளமற்ற காட்டினை நீர் கடந்து செல்ல எண்ணுவீராயின் என்ற தோற்றத்தை அவள் ஓவியம் போன்ற தோற்றும் தந்தது.

குறிப்பு எழுத இடம்

## 5.6. தொகுப்புரை

பொருளீட்ட சென்ற தலைவன் நிலைப்பாடு, தலைவின் மனநிலை, வழிக்கொடுமை, தலைவன் நெஞ்சோடு பேசுவது, செலவு அமுங்கியது, இயற்கை வருணனை போன்றவை அகநானூறு பாடல்களின் மூலம் அறியலாகும்.

## 5.7. தன்மதிப்பீட்டு வினாக்குரிய விடை

1) 5.1 2) 5.1 3) 5.2 4) 5.3 5) 5.4

## 5.8. பயிற்சி வினா

1. அகநானூறு பற்றி குறிப்பு வரைக.
2. தலைவன் நெஞ்சிற்கு கூறியது யாது.
3. பகற்குறிக் கண் செறிப்பு அறிவுநிகத் தோழி வரைக எனக் கூறியது யாது ?

# நற்றிணை

குறிப்பு எழுத இடம்

## முன்னுரை

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான நற்றிணை ஐந்து திணைகளாக பிரிக்கப்பட்டு ஒவ்வொரு திணையிலும் தலைவன், தலைவி, செவிலி, நற்றாய், தோழி என கதாபாத்திரங்களின் கூற்றுகள் மூலம் இல்லற வாழ்வின் இனிமை மற்றும் இல்லறவாழ்வின் ஒழுக்கங்களை நமக்கு விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

## நோக்கம்

இப்பாடத்தை பயில்வதன் மூலம் அகவாழ்க்கையின் சிறப்புகள் மற்றும் தலைவன் தலைவிக்கு இடையே ஏற்படுகின்ற பிரிதல் போராட்டங்கள் அவைகளில் ஏற்படுகின்ற நிகழ்வுகள் போன்றவற்றை நற்றிணையில் உள்ள முதல் ஐந்து பாடல்கள் மூலம் அறிந்து கொள்வதையே நோக்கமாக கொண்டுள்ளது.

## பாட அமைப்பு



## 6.0. நற்றிணை விளக்கம்

நல்+திணை – நற்றிணை என்றாகும். நல்ல ஒழுகலாறுகளைக் கூறுவது என்று பொருள். திணை என்ற சொல்லுக்குக் கொண்ட கொள்கையில் திண்மையாக நிற்பது என்று பொருள். திண்+ஐ–திணை; திண்மையை உடையது. அகத்திணை அகஒழுக்கம்; புறத்திணை புறஒழுக்கம்.

சங்கத் தொகை நூல்களில் நற்றிணை என்ற நூல் முதலிடம் பெறுகிறது. நற்றிணையில் 7 அடி முதல் 13 அடி (வரி) வரை உள்ள பாடல்கள் உள்ளன.

| | | |
|---|---|---|
| 7 அடி பாடல் | – | 1 |
| 8 ,, | – | 1 |
| 9 ,, | – | 106 |

**தன் மதிப்பீட்டு வினா**

1. நற்றிணை பாடல்கள் எத்தனை அடிகளை உடையது ?

| | | | |
|---|---|---|---|
| 10 | ,, | – | 96 |
| 11 | ,, | – | 110 |
| 12 | ,, | – | 77 |
| 13 | ,, | – | 8 |

குறிப்பு எழுத இடம்

நற்றிணையில் 234ஆவது பாடல் கிடைக்கவில்லை.

நற்றிணைப் பாடல்களைத் தொகுக்கச் செய்தவன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி. தொகுத்தவர் யார் என்று தெரியவில்லை.

192 புலவர்களால் பாடப்பெற்றது நற்றிணை பாடலில் உள்ள சொற்றொடர்களால் பெயர் பெற்றவர் எழுவர். வண்ணப்புறக் கந்தரத்தனார், மலையனார், தனிமகனார், விழிக்கண்பேதைப் பெருங்கண்ணனார் தும்பிசேர் கீரனார், தேய்புரி பழங்கயிற்றனார், மடல் பாடிய மாதங்கீரனார் ஆகியோர்.

திணை அடிப்படையில் பார்க்குபோது குறிஞ்சித்திணைப் பாடல் 130, பாலைப் பாடல்கள் 107, நெய்தல் பாடல்கள் 101, மருதப் பாடல்கள் 33, முல்லைப் பாடல்கள் 28 ஆகவும் நற்றிணையில் அமைக்கப்பட்டுள்ளது. அத்தகைய அகஇலக்கியத்தை உடைய நற்றிணையைக் காண்போம்.

### 6.1. சிறுமை செய்யார்

கூற்று : தலைவி திணை : குறிஞ்சி

துறை : பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது.

**தன் மதிப்பீட்டு வினா**

2. சிறுமை செய்யார் யார்?

துறை விளக்கம் : தலைவன், தலைவியைப் பிரிந்து செல்லும் முயற்சிகளிலே ஈடுபட்டனன் அதனைக் கண்டு அவன் பிரிந்தால் தலைவியிடம் வரும் துன்பப் பெருக்கினுக்கு அஞ்சுகின்றாள் தோழி. அவள் தலைவியிடம் சென்று தன் வருத்தத்தைக் கூறிய பொழுதிலே தலைவனிடத்தே ஆராக்காதலும் நம்பிக்கையும் உடையவளான தலைவி தன் சால்பு தோன்ற உரைத்து இவ்வாறு அவளைத் தேற்றுகின்றாள்.

தின்ற சொல்லர், நிடு தோன்றினியர்
என்றும் என்றோள் பிரிபறி யலரே
தாமரைத் தண்டா தூதி மீமிசைச்
சாந்தின் தொடுத்த தீந்தேன் போகப்
புரைய மன்ற, புரையோர் கேண்மை;
நீரின்றமையா உலகம் போலத்
தம்மின் றமையா நந்தயந் தருளி,
நறுநூதல் பசத்த லஞ்சிச்
சிறுமை உறுபவோ செய்பறியலரே!

(அ–ள்) புரேயோர்–உயர்ந்தோர், கேண்மை–அன்பு, நட்பு, நயந்து–விரும்பி.

**கருத்துரை**

நம் தலைவர் என்றுமே பிறழ்தலுற்றதாக நிலை பெறுகின்ற சொல்வாய்மையினை உடையவர். நெடிதாகப் பழகுந்தோறும் பின்னரும் இனிமையுடையவராக விளங்குகின்ற தன்மையினை உடையவர். என் தோள்களைப் பிரிகின்றதான அந்தக் குறைபாட்டுச் செயலினை என்றுமே அறியமாட்டாத சிறந்த பண்பினையும் கொண்டவர். வண்டானது தாமரைப் பூவினது தண்மையான தாதினை ஊதிக் கொண்டு சென்று மிக்க மேலடத்தான சந்தன மரத்தினிடத்தே வைத்திருக்கும் இனிதானதொரு தேனிறாலைப் போல, மேலான தன்மையாளரான அவருடைய நட்பானது என்றும் நமக்கு மேன்மையினைத் தருவதாகவே விளங்கும். நீர் வளத்தினை இல்லாத அமைந்திரா இந்தப் பூமியினது இயல்பினைப் போலவே, தம்மை இல்லாதே அமைந்திராத தன்மையினைப் பெற்று நம்மையும் விரும்பி, நமக்கு அந்நாளில் அருளினையும் செய்தவர் அவர். நம்முடைய நறுமணம் கமழ்தலையுடைய நெற்றியானது பசலையாலே உண்ணப்பட்டுப் பாழாதலை நினைத்து அச்சங் கொண்டார். ஆகுதலாகிய ஒரு சிறுமையினையும் அவர் அடையவர் ஆவாரோ ? அடைய மாட்டார்.

கருத்து : சிறுமையினை அறியார், ஆதலில் பிரிதலையும் நினையார் என்பதார்.

## 6.2. இடியினும் கொடியதாகும்

கூற்று : கண்டோர் கூற்று திணை : பாலை

பாடியவர் : பெரும்பதுமனார்

துறை : உடன் போக நின்றாரை இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.

துறை விளக்கம் : தலைவனும் தலைவியுமாகச் சுரத்திடையே தனித்துச் செல்கின்றனர் அவர்கள் சில வழிப் போக்கர்கள். இடைவழியில் காணுகின்றனர். அவர்களது உள்ளம் பெரிதும் கவலை கொள்ளுகின்றது. அவர்களுள் ஒருவர் தம்முடன் வந்த பிறர்க்கு இவ்வாறு இரங்கிக் கூறுகின்றனர்.

அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத்,
தொலிவல் ஈந்தின் உலவை யங்காட்டு,
ஆறுசெல் மாக்கள் சென்னி யெறிந்த,
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய,
வல்லியப் பெருந்தலைக் குருளை மாலை
மரன் நோக்கும் இண்டிவர் ஈங்கைய சுரனே;
வைஎயிற்று ஐயன் மடந்தை முன்னூற்று
எல்லிடை நீங்கும் இளையோ னுள்ளய்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கும் உருமினுங் கொடிதே

(அ–ள்) ஒலி–தழைத்தல் உலவை–காற்று, நெய்த்தோர்–இரத்தம், வல்லியம்–புலி.

குறிப்பு எழுத இடம்

குறிப்பு எழுத இடம்

ஆழ்ந்து படக்கிடந்தும் பெரிய குளர்ச்சியைக் கொண்டிருந்ததுதமான இக்குன்றினிடத்தேயுள்ளதும். தழைத்த வலிய ஈந்து மரங்களையுடையதும் காற்றுச் சுழன்று வீசுவதுமான தன்மையது காடு, இக்காட்டினிடத்தை நெறிக்கொண்டு செல்லும் மாக்களது தலையை மோதியதனாலே குருதிக்கரை வடிந்து சிவந்த மாறுபட்ட தலையை உடையனவும், இரத்தம் பூசிய வாயினை உடையவனாகவும் விளங்குவன். புலிக்குட்டிகள் பெருத்த தலையையுடைய அப்புலிக்குட்டிகள், மாலைப் பொழுதிலே தமக்கு உணவாக மான்களை எதிர் நோக்கியபடியே புதர்களில் பதுங்கியிருக்கும். அத்தகைய இண்டங்கொடிகள் படர்தேறிய ஈங்கைப் புதர்களைக் கொண்டதும் இச்சுரத்தின் நிலைமையாகும். இதனிடத்தே கூர்மையான பற்களையுடைய மெல்லியலாளான தன் காதலியைத் தன் முன்னே சொல்லவிடுத்துத் தானும் அவன் பின்னாக இராப்பொழுதிலேயும் செல்ல நினைக்கிறானே இந்த இளைஞன். இப்படிச் செல்லாநின்கின்ற இளைஞனது உள்ளமானது, காற்றோடு கலந்த பெருமழை பெய்கின்ற காலத்திலே பெரிய துற்கற்களைப் பெயர்த்துத் தள்ளும் வலிய இடியேற்றினும் காட்டிற் கொடுமையுடையதாகும்.

### 6.3. சுடரொடு படர் பொழுது

கூற்று : தலைவன் திணை : பாலை

பாடியவர் : இளங்கிரனார்

துறை : முன்னொரு காலத்துப் பொருள் வயிற் பிரித்த தலைமகன் பின்னும் பொருள் கலைக் கட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

துறை விளக்கம் : முன்பொரு காலத்தே பொருள் தேடிவரத் தலைவியைப் பிரிந்து சென்று, அந்தப் பிரிவுக் காலத்தே அவளது நினைவால் உற்ற துயரத்தை அறிந்து வரையருந்தான் ஒரு தலைவன். அவன் மீண்டும் பொருட் பிரிவினுக்குத் தன் நெஞ்சே தன்னைத் துண்டிய பொழுது இவ்வாறு தன் நெஞ்சோடு கூறியவனாக வருந்துகின்றான்.

ஈன்பருந்துயவும் வான் பொரு நெடிஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழல்,
கட்டளை அன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச சிறாஅர் நெல்லி வட்டாரும்
வில்லேர் உழவர் வெம்முனைச் சிறூர்ச்
சுரன்முதல் வந்த உரன் மாய் மாலை
யுள்ளினென் அல்லனோ, யானே புள்ளிய
வினைமுடித் தன்ன இனியோன்
மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே?

**கருத்துரை**

நெஞ்சமே பார்ப்பை ஈன்ற பருந்தானது அந்த வருத்தமுடன் தங்கியிருக்கும் வானத்தைப் பொருது மாறுபோல வளர்ந்து உயர்ந்த நெடிய கிளையினையும் பெரிந்த அடியினையும் கொண்ட வேம்–பினது புள்ளிபட்ட

நிழனிடத்தே கட்டளைக் கல்லினைப் போலத் தோன்றும் இரட்டரங்கினைக் கீறிக் கொண்டு கல்லாமையினையுடைய சிறுவர்கள் நெல்லி வட்டினை ஆடியபடியிருக்கும். விற்போரால் ஆறலைத்து உண்டு வாழுகின்ற மக்களின் வெம்மையான குடியிருப்பையுடைய சிற்றூரினிடத்தே சுரத்தின் கண்ணே வந்ததும் நம் வலியனைத்தையும் மாயச் செய்ததுமான மாலைக் காலத்திலே நினைத்த செயலைச் செய்து முடித்தாற் போன்ற இனிமையினைத் தருபவளான நம் தலைவியானவள் மனைக்கு மாட்சிதரும் விளக்கினை ஏற்றியுரைத்தவாளாக அதன் முன் நின்று நம்மை நினைத்துத் துன்புறும் மாலைப்பொழுது இதுவாகும். என்யானும் அவளை நினைத்தேன் அல்லனோ.

குறிப்பு எழுத இடம்

கருத்து : என் நிலைமை அவ்வாறாக யான் இனியும் எவ்வாறு பிரித்து போதற்குத் துணிவேன் என்பது ஆகும்.

## 6.4. கொண்டு செல்வாரே

கூற்று : தோழி திணை : நெய்தல்

பாடியவர் : அம்மூவனார்

துறை : தலைவன் சிறப்புரைத்தானாகத் தோழி அலரச்சம் தோன்றச் சொல்லி வரைவு கடாயது நச்சினார்க்கினியர் இதனைத் தலைவி கூற்றாகக் கொண்டுள்ளார்.

துறை விளக்கம் : களவுறவிலே திளைத்து வரும் நங்கையொருத்தி, ஊரிடத்தே எழுந்த பழிச் சொற்களைக் கேட்டு அச்சமுற்றுத் தன்னை விரைந்து வந்து மணம் கொள்ளல் வேண்டுமெனக் கருதினாள். அதனைத் தலைவனிடம் நேரிற் கூறுவதற்கு நாணியவளாக அவள் குறியிடத்தே சிறைப்புறத்தானதாலே அறிந்து அவன் கேட்குமாறு தான் தோழியிடம் உரையாடி உசாவுவாள் போல இவ்வாறு உரைக்கின்றாள்.

"கலைஞ் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்
நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇத்
தண் பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி
யங்கண் அரில்வலை உணக்குந் துறைவனோ
டலரே, அன்னை யறியான் இவண் உறை
அரிய வாகும் நமக்கெனக் கூறிற் வாழ்க்கை
கொண்டுஞ் செல்வர் கொல் தோழி உமணர்
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்
கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்
மணல்மடுத் தூறும் ஓசை கழனிக்
கருங்கால் வெண்குருகு வெரூஉம்
இருங்கழிச் சேர்ப்பிற்றம் உறைவின் ஊர்க்கே

கானல்–கடற்கரைச் சோலை அசைஇ–தங்கி, உனக்கு–தூயவைக்கும், உமணர்–உப்பு விற்போர், கொள்ளை–விலை, சகடம்–வண்டி, வரறும்–ஒலிக்கும் கழனி–வயல் வெருவம்–அஞ்சும்.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

தோழி கானற் சோலையிடத்தே அமைந்த அழகான சிறிய குடியிருப்பிலே வாழ்வோர் கடற்மேற் சென்று மீன்வேட்டையாடி வரும் பரதவர்கள், நீலநிறப் புன்னையினது கொழுமையின நிழலினிடத்தே அவர்கள் தங்கியிருந்தவராகத் தண்ணிய பெரிய கடற்பரப்பினிடத்தே தாம் வேட்டங்குறித்துச் செல்லுதற்கேற்ற ஒள்ளிய பதத்தினை நோக்கிய படியே இருப்பார்கள், அவர்கள், அவ்விடத்தே முனுக்குண்டு கிடந்த வலையினைப் பிரித்துக் காய வைத்தபடியும் இருப்பார்கள். அத்தகைய துறையினை உடையவர் நம் தலைவர், அவன்பாற் சென்று நம் அன்னையானவள் ஊரிலே எழுந்துள்ள பழிச்சொற்களை அறிந்தனளானால் இவ்விடத்தே தங்கியிருந்து களவிற் கூடி எழுந்துள்ள பழிச்சொற்களை அறந்தனவினால் இவ்விடத்தே தங்கியிருந்து களவிற்கூடி வாழும் தம் வாழ்க்கையானது நமக்கு இனி அரிதாகிப் போய்விடும் என்று கூறினாள்.

வெண்மையின் கல்லுப்பின் விலையைக் கூறிய படியே கூட்டமாகிய ஆநிரையை எழுப்புகின்ற உப்பு வணிகர்களது நெடிதான நெளியிடத்தே செல்லும் வண்டிகள், மணலின் கண் மடுத்து எழுப்புகின்ற ஓசையைக் கேட்டு வயலிடத்தே உள்ள கரிய கால்களையுடைய வெறிய நாரைகள் வெருவாதிற்கும், கரிய கழி ஆழ்ந்த தம் உறைவிடமாகிய நெய்தனிலத்தேயுள்ள இனிய ஊர்க்கு நம்மை அலரும் தம்முடன் அழைத்துக் கொண்டு செல்வாரோ ?

விரைய வந்து மணந்து கொண்டு, தம்மோடு தம்மூர்க்கு நம்மையும் அழைத்துச் செல்ல வேண்டும் என்பது ஆகும்.

## 6.5. பிரிதல் அரிதே

கூற்று : தோழி திணை : குறிஞ்சி

பாடியவர் : பெருங்குன்றூர் கிழார்

துறை : தலைவனின் செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது.

துறை விளக்கம் : தலைவன் தன்னை பிரிந்து செல்லுதற்காவன செய்கின்றானெனக் குறிப்பாலுணர்ந்த தலைவி எழில் வேறு பட்டளை அவளைத் தெளிவிப்பாளான தோழி அவளது அந்த வேறுபாட்டுக் குறிப்புக்களை அறிந்த தலைவன், தன் போக்கையே கைவிட்டனன் என்பது இவ்வாறு கூறுகின்றார்.

**தன் மதிப்பீட்டு வினா**

3. பிரிதல் அரிதே என தோழி யாரிடம் கூறினாள் ?

நிலநீர் ஆரக் குன்றுய் குழைப்ப
அகல்வாய்ப் பைஞ்சுனைப் பயிர்கால் யாப்பக்
குறவர்கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
நறுங்காம் ஆருஞ் சுற்றுவன அகைப்பப்
பெருமபுயல் பொழிந்த தொழில் எழிலி
தெற்கேர் பிரங்கும் அற்சிரக் கலையு
மரிதே காதிலர்ப் பிரிதல் இன்று செல்

இருளையர்த் தருஉம் வாடையொடு
மயல்கிழற் மழைக்கண் பயந்ததூதே.

நறை–வாசனை, மணம், பவர்–கொடி, ஆரம்–சந்தனம், அகைப்ப–படர, எழிலி–மேகம், அற்சிரம்–முன்பனிக் காலம், இருளை–தோழி.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

தோழி இன்றைக்குச் செல்லுகின்றவரான ஏவலிளையரையும் மீட்டுக் கொணர்ந்து தரக்கூடியதான வாடைக் காலத்தோடு மயங்கிய மழைபோல நீரைச் சொரிகின்ற நின் இமைகளையுடைய கண்கள்தாம், அவரைச் செல்லாதிருக்க வேண்டுமாறு ஒரு காதினையும் பயந்தன. அதனால்

நிலம் நீரினாலே நிரம்பப் பெற்றதாய் நிறைவெய்தவும், குன்றிடத்து மரம் முதலாயினவெல்லாம் தலைப்பவும் அகன்ற வாயினையுடைய பசிய சுனையிடத்தெல்லாம் அதன்கண் தோன்றும் பயிர்வகைகள் முளைத்தெழுந்து வளர்ந்து நிறையவும் கொல்லையிடத்தே குறவர்கள் வெட்டியழித்தலினாலே குறைபட்ட மிக்க நரைக் கொடியானது, நறுமணமுடைய வயிரங்கொண்ட சந்தன மரத்தின் மீது அந்திப் படர்ந்து ஏறவும், பெரு மழையைப் பொலிந்த தொழிலையுடைய மேகமானது தென்திசையிடத்தே எழுந்து செல்லுதலினாலே, காதலைப் பிரிந்தோர் இறங்குகின்றதாம் முன்பனிக் காலத்திலும் நின்காதலை நீ பிரிந்து தனித்து வாழ்தல் என்பதுதான் அரிதாகும்.

கருத்து : "ஆதலின் நீ மகிழ்வோடு அவரோடு இன்புற்று வாழ்வாயாக" என்பது.

## 6.6. தொகுப்புரை

நற்றிணையில் உள்ள ஐந்து பாடல்களில் பாடல்களின் அமைப்பு அவை ஒவ்வொறு பாடல்களும் உணர்ந்தும் இருந்தாள், மற்றும் சிறுமை செய்யார், இடியினும் கொடியதாகும். சுடரொடு படர்பொழுது, கொண்டு செல்வாரே, பிந்தல் அரிதே என இவ் ஐந்து பாடல்களும் அகவாழ்க்கையை நமக்கு படம் பிடித்துக் காட்டுகின்றன.

## 6.7. தன்மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

1) 6.2  2) 6.3  3) 6.4  4) 6.5  5) 6.6

## 6.8. பயிற்சி வினா

1. நற்றினை பாடல்கள் உணர்த்தும் கருத்து யாது ?
2. சிறுமை செய்யார் யார் ?
3. நற்றிணையின் பாடல் வைப்பு முறைகளை விவரி.

குறிப்பு எழுத இடம்

# அலகு - 7

## புறநானூறு

### முன்னுரை

புறத்தை பற்றி பாடுகின்ற நூல் புறநானூறு. இவை நானூறு பாடல்களை கொண்டுள்ளது. சங்க காலத்தில் ஆண்ட அரசர்கள், போர் முறைகள், போர் ஒழுக்கங்கள், கொடை சிறப்புகள், போர்களகாட்சிகள் மன்னரின் வீரச் சிறப்புகள், நாட்டு வளங்கள் போன்றவை புறநானூற்று பாடல் அடி மூலம் காணலாம்.

### நோக்கம்

பெருஞ்சோறளித்த சேரனை அறிதல், அவர்களின் போர்நிலைப்பாடுகள்? கொடைத்திறன் யாது? சங்ககால தமிழகத்தின் அரசியல் நிலை, சமுதாய நிலை ஆகியவற்றை அறிவதையே நோக்கமாக கொண்டுள்ளது.

### பாட அமைப்பு

7.1. புறநானூறு விளக்கம்

7.2. கடவுள் வாழ்த்து

7.3. பெருஞ்சோறளித்த சேரன்

7.4. பாடுவோர் துயரம் பரிவோடு தீர்த்தவன்

7.5. காலை இளங்கதிர் போன்றவன்

7.6. தாய் போல் நாட்டைக் காத்திடு நீயே

7.7. கதிரும் நிலவும் போல வாழ்க

7.8. போரில் வருவது புகழ் எனில் அழிவது நாடு

7.9. சூரியனே நீ எம் சேரமானுக்கு ஈடாக மாட்டாய்

7.10. ஆற்று மணலினும் அதிக நாள் வாழ்க

7.11. நல்லதே செய்யும் வல்லன் நீயே

7.12. தொகுப்புரை

7.13. தன்மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

7.14. பயிற்சி வினாக்கள்

**தன் மதிப்பீட்டு வினா**

1. புறநானூறு விளக்கம் தருக?

### 7.1. புறநானூறு விளக்கம்

புறம் + நான்கு + நூறு. சங்க இலக்கியத்தில் புறநானூறு மிக முக்கியமான இடத்தை பெற்றுள்ளது. புறம் என்ற சொல்லுக்கு வெளியிடம், அன்னியம், புறத்திணை, வீரம், பக்கம், முதுகு, பின்புறம் இடம், இறையிலி நிலம் போன்ற பல பொருட்கள் உள்ள இலகுப் புறத்திணை, புறவாழுக்கம் என்ற நிலையில் அமைகிறது. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு இலக்கிய

வகைகளை அகம், புறம் எனப் பிரித்தனர். அகவொழுக்கம் என்பது வீட்டு வாழ்க்கை, புறவொழுக்கம் என்பது நாட்டு வாழ்க்கை கூறுவதாக அமைகின்றன.

குறிப்பு எழுத இடம்

புறப்பொருள் பற்றிய 400 பாடல்களைக் கொண்ட நூலாகும். அதனைத் தொகுத்தாரும், தொகுப்பித்தாரும் யாரெனத் தெரியவில்லை. செல்லரித்துச் சிதைந்து விட்டதால் இரண்டு பாடல்கள் இன்றும் கிடைக்கவில்லை. 44 பாடல்களில் பல வரிகள் உருத்தெரியாமலே ஒழிந்து விட்டன. 4 அடி முதல் 40 அடி வரையிலும் இப்பாக்கள் செல்லுகின்றன. இவற்றை ஏறக்குறைய 160 புலவர்கள் பற்பல காலங்களில் பாடியுள்ளனர். 160 பாடல்களை இயற்றியவர் இன்னார் எனத் தெரியவில்லை.

புறநானூறு சிறப்புகளாவன, வாழ்ந்து சிறந்த தமிழகத்தின் வரலாற்றை எடுத்துரைக்கும் பெருமையினையுடையது புறநானூறு. சங்ககாலத் தமிழகத்து அரசியல் நிலை, சமுதாய நிலை, பழக்க வழக்கங்கள், நாகரிகம், கல்வி, பொருளாதாரம், கலை வளர்ச்சி முதலானவற்றை அறிவதற்குப் பெருந்துணை புரியும் நூல் புறநானூறேயாகும். மங்கையர் மங்கல அணி அணிதல், இறந்தவரைத் தாழியில் கவித்தல், நடுகல் நடுதல், நட்டா கல்லைச் சுற்றி மயிற்பீலி சூட்டி மதுத்துளி வார்த்தல் கணவனிறந்த பொழுது பெண்கள் அணிகளைக் களைதல், கைம்மை நோன்பு தோற்றல், ஊண் சுரக்குதல் உடன்கட்டைபேறுதல் போன்ற பழக்கவழக்கங்களையும் பத்து ஆடை வகைகளையும் இருபத்தெட்டு அணிவகைகளையும் முப்பது படைக்கல வகைகளையும் அறுபத்தெழு உணவு வகைகளையும் இந்நூல் எடுத்துக்காட்டுகின்றன. இதில் முதல் பத்து பாடல்களை இவ்வியலில் காண்போம்.

## 7.2. கடவுள் வாழ்த்து

கண்ணி கார்நறுங் கொன்றை; காமத்
வண்ண மார்பின் தாரும் கொன்றை;
ஊர்தி வால்வெள் ஏறே; சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வேறு என்ப;
கறைமிடறு அணியலும் அணிந்தன்று; அக்கறை

மறைநவில் அந்தணர் நிலவவும் படுமே;
பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று; அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்;
பிறைநுதல் வண்ணம் ஆகின்று; அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே

எல்லா உயிர்க்கும் ஏமம் ஆகிய
நீரறவு அறியாக் கரகத்துத்,
தாழ்சடைப் பொலிந்த, அருவந்தவத் தோற்கே.

– பாரதம் பாடிய பெருந்தேவனார்

திருமுடியில் சூட்டிய கண்ணி மாலை, கார் காலத்திலே மலரும் மணமிக்க கொன்றை மலர்களால் ஆனது, மார் பலணிந்த அழகிய மாலையும்

குறிப்பு எழுத இடம்

கொன்றைப் பூக்களாலானது. இத்தகைய தோற்றமுடைய இறைவனின் வாகனமோ வெள்ளை நிறக் காளை, அவனுடைய அழகிய கொடியை அணி செய்தும் சிறப்பு மிக்க அக்காளையே அவனுடைய கழுத்தை நஞ்சுண்ட கறை அணி செய்கிறது. அக்கறையே, மறைநூல் கற்ற பெரியவர்களால் போற்றிப் புகழவும் படுகிறது. உமைப் பெண்ணுக்குத் தன் இடப்பக்கம் தந்தருளும் அப்பெருமானே. அப்பெண்ணுருவைத் தன்னுள் அடக்கிய பேருருவாய்த் திகழினும் திகழுவான் என்ற நிலவே அவனுடைய நெற்றிக்குப் பேரழகு தருகிறது. அப்பிறை நிலவே தேவர் முதலாய பதினெட்டுக் கணங்களால் போற்றவும் படுகின்றது. இவ்வுலகத்து உயிர்களுக்கெல்லாம் காவலாகிய நீர் வற்றி அறியாத கமண்டலமும், தாழ்ந்த விர் சடையும், மிகுந்த தவப் பொலிவும் உடையோன் அத்தேவன் அவன் திருவடிகளே சரணம்.

கார்–கார்காலம், காமர்–அழகு, கண்ணி–முடியில் சூட்டுவது, தார்–மார்பில் அணிவது, காத்தல்–மறைத்தல், ஏமம்–காவல், கரகம்–கமண்டலம்.

பாடியபுலவர் பாரதம் பாடிய பெருந் தேவனார். இவர் தமிழில் பாரதத்தைப் பாடினார். எனவே, பாரதம் பாடிய பெருந் தேவனார் என்று குறிப்பிடப்படுகிறார்.

## 7.3. சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனைப் பாடியது

திணை – பாடாண்

துறை – செவியறிவுறூஉ; வாழ்த்தியலும் ஆம்

மண் திணிந்த நிலனும்,
நிலன் ஏந்திய விசும்பும்,
விசும்பு தைவரு வளியும்,
வளித்தலை இய தீயும்,
தீ முரணிய நீரும், என்றாங்கு

ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும், சூழ்ச்சியது அகலமும்,
வலியும் தெறலும் அளியும் உடைபோய்!
நின் கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
வெண்தலைப் புணரிக் குடகடற் குளிக்கும்,

யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொறாந!
வான வரம்பனை! நீயோ பெரும!
அலங்குகளைப் புரவி ஐவரொடு சினைஇ
நினந்தலைக் கொண்ட பொலம் பூந்தும்பை
ஈரைம் பதின்மரும் பொருது, களைத்து ஒழியப்

பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!
பாஅல் புளிப்பினும், பகளருளினும்,
நாஅல் வேத நெறி திரியினும்,
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி,
நடுக்கின்றி நிலியரோ அத்தை அடுக்கத்துச்,

**தன் மதிப்பீட்டு வினா**

2. பெருஞ்சோறளிந்த சேரன் வலிமை யாது?

சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பினை,
அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்ததீ விளக்கின், துஞ்சும்
பொற் கோட்டு இமயமும், பொதியமும் போன்றே!

– முரிஞ்சியூர் முடிநாகராயர்

குறிப்பு எழுத இடம்

திணை – பாடாண் – ஒருவருடைய புகழ் வலிமை, கொடை, சுருள் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

துறை – செவியறிவுறூஉ, வாழ்த்தியலும் ஆம் – அரசன் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யுமாறு அவனிடம் அறிவுறுத்துவது. அதோடு அவனை வாழ்த்திக் கூறுவதும் ஆகும்.

நெருக்கமுடைய இந்நிலப்பரப்பும், இந்நிலப்பரப்பின் மேல் விரிந்து கவிந்த வானமும், அவ்வானத்தில் மிதந்து வரும் காற்றும், அக்காற்றில் பற்றிய தீயும், தீயிலிருந்து மாறுபட்ட நீரும் ஆகிய ஐம்பெரும் பூக்களைப் போல பகைவர் செய்த பிழையைப் பொறுப்பதும் அப்பகையை வெல்லும் வழியைப் பார்ப்பதும் ஆகிய குணங்களுடன், அவரை அழிக்கும் மன வலிமையும்–படை வலியும் கொண்டிருப்பதோடு, பணிவோர்க்கு அருள் சுரக்கும் மனவளமும் உடையவனே! உன்னுடைய நாட்டின் கிழக்குக் கடற்கரையிலே உதித்தெழுகின்ற சூரியன் வெள்ளலை வீசும் மேற்குக் கடற்கரையிலே சென்று மறைவான் இவ்வாறு கிழக்கிலும் மேற்கிலும் கடல்வரை விரிந்து பரந்த–வளமிக்க நிலப்பரப்பை உடைய மன்னவனே வான் வரை விரிந்த புகமுடையவனே! அரசர் பெருமானே! அசைந்தாடும் பிடரி மயிருடைய குதிரைகள் கொண்ட வேந்தர் ஐவரொடும் சினம் கொண்டு நிலம் கைக் கொண்ட, பொன்னாலாக்கிய திம்மைப் பூமாலை அணிந்த நூற்றுவரும் போரிட்டு மாண்டனர். அப்பெரும் போரில் இரு மன்னர் படைக்கும் பெருஞ்சோறு இல்லை என்னாது, கொடுத்துதவியவன் நீ! சுவைமிக்க பால் தன் இனிமை இழந்து புளிப்பதாயினும். பகல் ஒளியிழந்து இருளாயினும், நான்மறைப் பொருளும் முறை தவறினும். தாம் நிலையில் தவறாத அமைச்சர் முதலானோரோடு. நீண்ட நெடுங்காலம் துயர் இன்றி மலைச் சரிவுகளில், சிறிய தலையுடைய மான் குட்டி கருடன் பெரிய கண்களை உடைய பெண் மான்கள் அந்திப் பொழுதிலே, மந்திரக் கடன் கழிக்க, அந்தணர் வளர்க்கும் வேள்வித் தீயின் ஒளியையே விளக்காகக் கொண்டு கண் வளரும் வளமிக்க – நலம் பொருந்திய பொன் முடியுடைய – இமயமும் பொதிய மலையும் போல வாழ்வாயாக!

திணிந்த–நிறைந்த, தைவரும்–தடவும், வளி–காற்று அளி–அன்பு, புணரி–அலை, யாணர்–புதுவருவாய், உளை–பிடரி மயிர், பொலம்–பொன், அடுக்கம்–மாலைச்சரிவு, நவ்லி–மான்குட்டி, எணை–பெண்மான்.

திணை–பாடாண்திணை, துறை–செலியறிவுறுஉத் துறை–வாழ்த்தியல், பாடிய புலவர்–முரஞ்சியூர் முடிநாகணார், பாட்டுடைத்தலைவன்–சேரமான், பெருஞ் சோற்று தியஞ் சேரலாதன். இவன் போரிடும் இரு திறத்து மன்னர் படைக்கும் பெருஞ்சோறு படைத்தான் என்பான்.

### 7.4. பாடுவோர் துயரம் பரிவோடு தீர்த்தவன்

பாண்டியன் கருங்கை ஒள்வாள்
பெரும்பெயர் வழுதியைப் பாடியது

குறிப்பு எழுத இடம்

திணை – பாடாண்

துறை – செவியறிவுறூஉ, வாழ்த்தியலும் ஆம்

உவவுமதி உருவின் ஓங்கல் வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம் நிழற்ற,
ஏம முரசம் இழுமென முழங்க,
நேமி உய்த்த நேஎ நெஞ்சின்,
தவிரா ஈகைக் கவுரியர் மருக!

செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ!
பொன்னோடைப் புகர் அணிநுதல்,
துன்னருந் திறல், கமழ்கடா அத்து,
எயிறு படையாக, எயிற்கதவு இடாஅக்
கயிறு பிணிக் கொண்ட கவழ் மணி மருங்கின்

பெருங்கை யானை இரும்பிடர்த் தலையிலிருந்து
மருந்தில் கூற்றத்து அருந்தொழில் சாயாக்
கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி
நிலம் மெயரினும் நின் சொற் பெயரால்
பொலங் கழற்கால் புலர் சாந்தின்

விலங் ககன்ற வியன் மார்ப
ஊர் இல்ல, உயவு அரிய
நீர் இல்ல, நீள் இடைய
பார்வல் இருக்கைக் கவிகண் நோக்கிற்
செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்

அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்
திருந்து சிறை வளைவாய்ப் பருந்திலிருந்து உயவும்
உன்ன மரத்த துன்னருங் கவலை
நின் நசை வேட்கையின் இரவலர் விருவர் அது
முன்னம் முகத்தின் உணர்ந்து அவன்
இன்மை தீர்த்தல் வன்மை யானே.

– இரும்பிடர்த் தலையார்

**தன் மதிப்பீட்டு வினா**

3. பாண்டிய அரசன் பாடுவோர் துயரத்தை எவ்வாறு தீர்த்தார்?

பௌர்ணமி நாள் பால் நிலவைப் போன்ற வடிவழகுடைய உயர்ந்த வெண்க்கொற்றக் குடை, கடல் சூழ்ந்த நிலப்பரப்பைக் காத்து அருள் செய்ய படை காவல் செய்யும் வெற்றி முரசு ஒலி செய்து முழங்க – அறவாழி செலுத்தி அன்புடைய நெஞ்சும், இல்லை என்னாது கொடுக்கும் வள்ளண்மையும் உடைய, பாண்டியர் மரபில் வந்தவனே குற்றவற்ற கற்புடைய, தூமணி புனைந்த கோப்பெருந்தேவியின் கணவனே.

பொன்னாலாக்கிய நெற்றிப் பட்டத்தையும், புற்றுகளுடைய மத்தகத்தையும், நெருங்க முடியாத வலிவையும் மணம் வீசும் மதத்தையும், கயிற்றோடு பொருந்தக்கூடிய–கவிழ்ந்த – மணியணிந்த பக்கத்தையும், நீண்ட துதிக்கையையும் உடைய தகை தந்தக் கொம்புகளை படைக்கலமாகக் கொண்டு, பகையரசர் மதில் புறத்தின் கோட்டைக் கதவுகளைக் குத்திப் பிளக்கும் – யானையின்யுடைய பெரிய கழுத்திலே இருந்த படி மாற்று மருந்தில்லை கூற்றுவனின் கொலைத் தொழிலுக்குச் சற்றும் சளைக்காத கொன்று குவிக்கும் – வலிமை மிக்க கூர்வாள் ஏந்திய பெரும் புகழ் வழுதியே! உலகே நிலை குலையினும், நீ உன் சொல் தவறாதே! பொன்னால் செய்த வீரக் கழல் அணிந்த கால்களும், பூசிய விரசீச சந்தனம் மணக்கும் விரிந்த கன்ற மாரிவும் உடையவனே இடையே ஊரற்ற – மிக்க துன்பம் உடைய, குடிப்பதற்கு நீரும் அற்ற நீண்ட நெடுந்தூரப் பயணத்தையும் வரும் வழிப்போக்கர்களை அச்சுறுத்தி மிரட்ட அவர் வரவை எதிர்பார்த்துக் காத்திருக்கும் மற்றவர்களையும் அவர்கள் தங்கள் கண்களின் மேல் கைகளை வளைத்து வைத்துத் தூரத்தே வருபவர்களைப் பார்க்கும் கொடிய பார்வையையும் குறி தவறாத அவர் வீரத்தையும், இத்தகு வீரமுடையோர் அம்பு எய்ய, வீழ்ந்த உடல்கள் கற்குவியல்களுக்கிடையே மூடிக்கிடக்க அவ்வுடல்களை உண்ண முடியாது அழகிய சிறகினையும்–உடைய வளைந்த அலகினையும் உடைய பருந்துகள் இருந்து வருந்தும் உன்ன மரங்கள் நிறைந்த – நெருங்க முடியாத அச்சந்தரும் காட்டுப் பாதையையுங் கடந்து இரப்பவர் பலர் உன்னைக் கண்டு பொருள் பெறும் ஆசையால் உன்னைத் தேடி வருவர் அப்படி அவர்கள் இவ்வளவு இடரினையும் கடந்து உன்னைத் தேடி வருவதற்குக் காரணம். அவர்தம் வேட்கையை–மனக்குறையை முகத்தைப் பார்த்தவுடனேயே கண்டறிந்து, அவருடைய இல்லாமையை–ஏழ்மையைப் போக்குகின்ற–நின் வள்ளல் தன்மைதான் என்பதை அறிவாயாக.

உவவுமதி–முழுநிலா, ஓங்கல் உயர்ந்த, ஏமம்–காவல் நோ–இரக்கம், அன்பு, புகார்–புள்ளி, எயில்–மதில், பார்வல்–பார்த்தல், வம்பு–புதிய, பதுக்கை–கற்குவியல், உயவும்–வருந்தும், நசை–விருப்பம்.

திணை–பாடாண்திணை, துறை–செவியறிவுறூ உத்துறை–வாழ்த்தியலுமாகும். பாடிய புலவர் இரும்பிடர்த் தலையார், பாட்டுடைத் தலைவன் பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி.

இவன் இல்லையென்று தேடிப் பாட வருவோர் முகக் குறிப்பைக் கண்டே, அவர்க்கு இல்லை என்னாது கொடுக்கும் வள்ளல் தன்மை உடையவன் என்று புலவர் பாடும் பெருமைக் குரியவன்.

### 7.5. காலை இளங்கதிர் போன்றவன்

சோழன் உருவப்பல்தேர் இளஞ்சேட்
சென்னியைப் பாடியது

திணை – வஞ்சி–பகை அரசர் இடத்தை வெற்றி கொள்வதற்காக வஞ்சிப் பூவைச் சூடிச் செல்லுதல்.

குறிப்பு எழுத இடம்

குறிப்பு எழுத இடம்

துறை – கொற்றவள்ளை, தலைவன் புகழைச் சொல்லி, அவன் பகைவர் நாடு அழிதற்காக வருத்துதல்.

வாள், வலந்தர, மறுப்பட்டன
செவ் வானத்து வனப்புப் போன்றன;
தாள், களங் கொளக், கழல் பறைந்தன
கொல் ஏற்றின் மருப்புப் போன்றன;
தோல், துவைத்து, அம்பன் துளை தோன்றுவ,

நிலைக்கு ஒராஅ இலக்கம் போன்றன,
மாவே, எறிபதத்தான் இடங்காட்டக்,
கறுழ் பொருத செவ்வாயான்,
எருத்து வவ்விய புலி போன்றன;
களிறு கதவு எறியா சிவந்து உராஅ

நுதி மழுங்கிய வெண் கோட்டான,
உயிர் உண்ணும் கூற்றுப் போன்றன;
நீயே, அலங்கு உளைப் பரீஇ இவுளிப்
பொலந் தேர்மிசைப் பொலிவு தோன்றி,
மாக்கடல் நிவந் தெழுதரும்

செஞ் ஞாயிற்றுக் கவினை மாதோ
அனையை ஆகன் மாறே,
தாஇல் தூவாக் குழலி போல
ஓவாது கூடம், நின் உடற்றியோர் நாடே
– பரணர்

வெற்றி தரும் வீரப் போர் பலவற்றில் ஈடுபட்ட இரத்தக்கறை படிந்த வாள், செக்கர் வானத்து அழகை ஒத்திருந்தது. வீரர் தம் காலில் அணிந்திருந்த வேலைப்பாடு மிக்க வீரக் கழல்கள், போரிடும் வீரர்கள் காலோடு மோதியும் உராய்ந்தும் உடைந்துப் பரல்கள் சிதறத் தேய்ந்து, கொல்லும் வளமைமிக்க காளை மாட்டின் கொம்புகளைப் போல் தோன்றின அம்பு தைக்கக் கேடயத்திலே உண்டான துளைகள் நிலையில் மாறா இலக்கை ஒத்தன. பகைவர் மேல் பாயும் சமயம் அறிந்து குதிரையை வலம் இடமாகத் திருப்பும் கடிவாளக் கயிறு பூட்டிய கருவி உராய இரத்தம் கசியும் குதிரையின் சிவந்தவாய் மானின் கழுத்தைக் கவ்வி இரத்தங்குடித்த புலியின் சிவந்த வாய் போன்ற தோற்ற மளிக்கும் பகையரசர் கோட்டை மதில் கதவுகளைக் குத்தி உடைத்து விட்டு, கூர் மழுங்கிய தந்தக் கொம்புகளுடன் திரியும் கோபங் கொண்ட யானைகள், கொல்லும் கூற்றினைப் போல், தோன்றின. இவற்றிற்கிடையில் அசைந்தாடும் பிடரி மயிர் உடைய கதிர்கள் பூட்டிய பொன் தேரில் அமர்ந்து அழகோடு வருகின்ற நீயே நீலமாக் கடலில் தோன்றி எழும் அழகிய சிவந்த இளஞ் சூரியனைப் போல இருந்தாய். நீ இப்படிப்பட்ட வலிமை உடையவன், ஆகையால், நின் கோபம் உன்னோடு போரிட்டுப் பகை கொள்ளும் படை மன்னநாடு உண்ண உணவின்றி வாடும் தாயில்லாப் பிள்ளையைப் போல ஓயாத துன்பத்தில் துடித்துக் கொண்டிருக்கும்.

மறு—கறை, பறைந்தன—தேய்ந்தன. பருப்பு—கொம்பு, மா—குதிரை, கறும்—முகக் கருவி, நுதி—நுனி, இவுளி—குதிரை, நிவற்து—உயர்ந்து, துவ்வு—உணவு, ஓவாது—ஓயாது, கூவம்—கூப்பிடும்.

திணை—வஞ்சி, துறை—கொற்றவள்ளை, பாடியவர், பரணர் பாடப் பெற்றவன், சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி. பாணர் சங்க நூல் பாடல்கள் பல பாடியவர்.

குறிப்பு எழுத இடம்

### 7.6. தாய் போல் நாட்டைக் காத்திடு நீயே

சேரமான் கருவூர் எறிய ஒள்வாட் கோப்பெருஞ்ச சேரல்
இரும்பொறையைக் கண்ட ஞான்று நின் உடம்பு
பெறுவாயாகென அவனைச் சென்று கண்டு, தம்முடம்பு
பெற்று நின்று பாடியது

திணை – பாடாண்

துறை – செவியறிவுறூஉ; பொருண்மொழிக் காஞ்சியும் ஆம்

எருமை அன்ன கருங்கல் இடைதோறு,
ஆனின் பரக்கும் யானைய, முன்பின்
கானக நாடனை! நீயோ, பெரும!
நீயோர் ஆகலின், நின் ஒன்று மொழிவல்;
அருளும் அன்பும் நீக்கி, நீங்கா
நிரயம் கொள்பவரோடு—ஒன்றாது, காவல்,
குழவி கொள்பவரின், ஓம்புமதி,
அளிதோ தானேயது பெறலிருருங் குரைத்தே.

– நரிவெரூஉத் தலையார்

திணை – பாடாண் – ஒருவருடைய புகழ் வலிமை, கொடை, அருள் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

துறை – செவியறிவுறூஉ, பொருண்மொழிக் காஞ்சியுமாம் அரசன் செய்யுமாறு அவனிடம் அறிவுறுத்துவது. உயிர்க்கு நலத்தைத் தரும் இம்மை. மறுமைக்குரிய கடைமைகளை எடுத்துச் சொல்லுதல்.

**தன் மதிப்பீட்டு வினா**

4. அரசனின் தோற்றப் பொலிவை விவரி ?

எருமை மாடுகளுக்கிடையே கலந்து நின்று மேய்கின்ற பசுக் கூட்டத்தைப் போல, கருங்கல் பாறைகட்கிடையே உலவுகின்ற யானைகள் நிறைந்த காடுகள் சூழ்ந்த வலிமை மிக்க நாட்டுக்குத் தலைவனே! பகைவரால் வெல்லப்படாத பெருமைக்குரியவன் நீ! ஆகையினால், உனக்கொன்று சொல்கிறேன். அதைக் கேட்பாயாக! உள்ளத்தில் அன்பும் அருளும் இல்லாத நாகத்தை நீங்காத இடமாகக் கொண்ட தீயவர்களோடு சேராமல் தாய் தன் குழந்தையைப் பாதுகாப்பதைப் போல, நீ உன் நாட்டினைப் பாதுகாத்து வளர்ப்பாயாக! போற்றற்கரிய இச்செயல் மன்னன் பெறுதற்கரிய பெரும் பேறு ஆகும்.

ஆன்—பசு, நிரயம்—நரகம், ஒன்றுதல்—சேருதல், திணை—பாடாண் திணை, துறை—செலியறிவுறுஉத் துறை. பொருண் மொழிக் காஞ்சியுமாம்

குறிப்பு எழுத இடம்

சேரமான் கருவூரேறிய ஒள் வாட் கோப்பெருஞ் சேரல் பொறையை, நரிவெரூஉத் தலையார் பாடியது. இச்சேர மன்னன் கொங்கு நாடு. கருவூர் வரை தனது புகழ் பரவ ஆண்டவன் மிக்க அழகுடையவன்.

## 7.7. கதிரும் நிலவும் போல வாழ்க

பாண்டியன் பல்யாகசாலை
முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியது

திணை – பாடாண்

துறை – செவியறிவுறுஉ, பொருண்மொழிக் காஞ்சி; வாழ்த்தியலும் ஆம்.

வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்,
தெனா அது உருகெழு குமரியின் தெற்கும்,
குணாஎது கரைபொரு தொடுகடல் குணக்கும்,
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குக்கும்,
கீழது முப்புணர் அடுக்கிய முறைமுதற் கட்டின்

நீர்நிலை நிவப்பான் கீழும், மேலது
ஆனிலை உலகத்தானும், ஆனாது,
உருவும் புகழும் ஆகி, விரிசீர்த்
தெரிகோல் ஞமன் போல, ஒரு திறம்
பற்றல் இலியரோ! நின்றியும் சிறக்க!

செய்வினைக்கு எதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிப்ப மண்டி, அடர்ப் புகர்ச்
சிறுகண் யானை செவ்விதின் ஏவிப்,
பாசவவ் படப்பை ஆர்எயில் பல தந்து,
அவ்வெயில் கொண்ட செய்வுறு நன்கலம்

பரிசின் மாக்கட்கு வரிசையின் நல்கி,
பணியியர் அத்தைறின் குடையே– முன்னர்
முக்கண் செல்வர் றகர்வலந் செயற்கே!
இறைஞ்சுக பெரும! றின் சென்னி; – சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே

வாடுக இறைவ! நின் கண்ணி– ஒன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறிந்த லானே!
செவீயர் அத்தை நின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாள்முகத்து எதிரே!
ஆங்க, வென்றியெல்லாம் வென்றகத்து அடக்கிய

தண்டா ஈகைத் தகைமாண் குடுமி!
தண்கதிர் மதியம் போலவும் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெரும நீ நிலமிசை யானே

– காரிகிழார்

திணை – பாடாண் – ஒருவருடைய புகழ் வலிமை, கொடை, அருள், ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

துறை – செவியறிவுறூஉ, பொருண்மொழிக் காஞ்சி, வாழ்த்தியலும் ஆகும்.

குறிப்பு எழுத இடம்

அரசன் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யுமாறு அவனிடம் அறிவுறுத்துவது. உயிர்க்கு நலத்தைத் தரும் இம்மை, மறுமைக்குரிய கடமைகளை எடுத்துச் சொல்லுதல் அதோடு அவனை வாழ்த்திக் கூறுவதும் ஆகும்.

பனிதோய்ந்து உயர்ந்த இமயமலை வடக்கே! பயமூட்டும் குமரியாறு தெற்கே! நிலக் கடல் வேலி கிழக்கே இவற்றோடு மேற்கிலும் கடலே எல்லையாக உடைய பரந்த நாட்டுக்குத் தலைவனே! மண், விண், சுவர்க்கம் என்று மூன்றாக அமைந்த பூமிக்கோளத்தில், முதலாவதாக உள்ள நிலத்தின் கீழ் இருக்கின்ற நீர் மிகுந்த பாதாள லோகத்திலும் சுவர்க்கத்துக்கும் அப்பால் உள்ள இந்திர லோகத்திலும், சுவர்க்கத்துக்கும், பரவிய ஓங்கு புகழ் உடையவனே! அளந்தறியும் துலாக்கோலின் முற்முனை போல நீ நடுவு நிலைமை தவறாது இருப்பாயாக! உனது குடிப்படைகளின் நலம் சிறப்புறுவாயாக! உன்னை எதிர்த்துப் போர் புரியும் படை மன்னர் வலியடங்க, அவர் நாட்டினுள் புகுந்த கடல் போன்ற உனது படை வீரர்கள், நிறைந்த புள்ளிகளையும் சிறிய கண்களையும் உடைய யானைகளை செலுத்தி, பசுமை நிறைந்த நெல் வயல்கள் சூழ்ந்த கோட்டை மதில்களைக் கவர்வர். கவர்ந்த அக்கோட்டைகளில் கைப்பற்றிய அணிமணிகளைப் பரிசில் பெற விரும்பி வருவோர்க்குத் தந்து மகிழும் பெருஉலா உடையவனே! உனது வெண் கொற்றக் குடை முனிவர் போற்றும் இறைவன் கோயிலை வலம் வரும் போது மட்டுமே தாழ்க! பெரியோனே! நினது தலை, நான் மறை கற்றுணர்ந்த மேலோர் நீ வாழ்கவென வாழ்த்தக் கூப்பிய கரங்களுக்கு முன்னே மட்டும் குனிவதாகும். அரசே உனது முடிக்கண்ணியும் மாலையும், எரியுண்ட பகையரசர் நாட்டின் வாச நறும் புகை வந்து தாக்கவே வாடுக! நினது கோபம், உயர்ந்த அணி மணிகள் புனைந்த–ஊடிப் பிணங்கும்– மங்கையரின் அழகிய முகங்களைக் கண்டே தணிக! வெற்றிபல கொண்ட அவ்வெற்றிப் பெருமைகளுக்கெல்லாம் உரியவனாகிய குறைவற்ற ஈகையும், கொடை மாட்சியும் உடைய முதுகுடுமிப் பெருவழுதியே! குளிர்ந்த ஒளியுடைய வெண்ணிலைவைப் போலவும், சுடுகின்ற கதிர் வீசும் செஞ்சுடர்ச் சூரியனைப் போலவும் நீ இவ்வுலகில் நிலை பெற்று வாழ்வாயாக!

குணா அது–குணதிசை, கிழக்கு–குடக்கு–மேற்கு, பௌவம்–கடல், நிவப்பு–உயர்வு, ஒமன்–துலாக் கோளன் முன்முனை. தெவ்வர்–பகைவர், பாசவல்–பசுமை நிறைந்த விளைநிலம், எயில்–மதில், கோட்டை, செவ்விய– செல்க. தணிக, துனித்த–ஊழப்பிணங்கிய தெறு – சூடு.

பாடாண் திணை, செவி அறிவுறூஉத் துறை வாழ்த்தியதுமாகும், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிக் கிழார் பாடியது.

கடல் கொண்ட, குமரிக் கண்டம் வரை இவன் ஆண்டான் எனவும், வடபுலத்தவரும், போற்ற யாகங்கள் பல செய்ததனால் பல்யாகசாலைப் பெருவழுதி என அழைக்கப்பட்டான் எனவும் கூறுவர்.

குறிப்பு எழுத இடம்

## 7.8. போரில் வருவது புகழ் எனில் அழிவது நாடு

சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாடியது

திணை – வஞ்சி

துறை – கொற்றவள்ளை; மழபுல வஞ்சியும் ஆம்

களிறு கடைஇய தாள்,
கழல் உரீஇய திருந்து அடிக்,
கணை பொருது கவிவண் கையால்,
கண் ஒளிர் வரூஉம் கவின் சாபத்து,
மாமறுத்த மலர் மார்பின்,

தோல் பெயரிய எறுழ் முன்பின்,
எல்லையையும் இரவும் எண்ணாய் பகைவர்
ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை, ஆகலின், நல்ல
இல்ல ஆகுபவால்–இயல்தேர் வளவ!

தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து
மீனின் செறுக்கும் யாணர்ப்
பயன் திகழ் வைப்பின் பிறர் அகன்றனல நாடே.

திணை – வஞ்சி – பகை அரசர் இடத்தை வெற்றி கொள்வதற்காக வஞ்சிப் பூவைச் சூடிச் செல்லுதல்.

துறை – கொற்றவற்றை, மழபுல வஞ்சியும் ஆம்.

தலைவன் புகழைச் சொல்லி, அவன் பகைவர் நாடு அழிதற்காக வருந்துதல். பகைவர் ஊரில் கொள்ளையிட்டுப் பாழ்படச் செய்தல், எரியூட்டல்.

**தன் மதிப்பீட்டு வினா**

5. போர்களக் காட்சியை விவரி?

யானைகளைச் செலுத்திய தாள்களும், வீரக் கழல் பொருந்திய கால்களும், அம்பு தொடுத்துத் தொடுத்துக் குவிந்த கையும், கண்ணைக் கவரும் அழகிய வில்லும் பிற மார்புகளை வெறுத்தொதுக்கி விட்டுத் திருமகள் இருந்து வாழ விரும்பும் அகன்ற மார்பும் பெரிய யானையை எதிர்க்கும் வலிமையும் உடையவனே இர வென்றும் பகலென்றும் பாராது நீ பகையரசர் நாட்டின் மீது படை யெடுத்துச் சென்று அதைச் சுட்டுப் பொசுக்கிறாய்! ஊர் பற்றி எரிய–அந்த ஒளி நெருப்பின் முன்னே அவ்வூரார் கூவியமுகின்ற கூக்குரல் கேட்டும்–படையெடுப்பையே நீ விரும்புகிறாய்! எனவே அவ்வூர்களில் நல்ல பொருள்கள் எவையும் இருப்பதில்லை. அழகிய தேருடைய வளநாட்டிற்கு அரசே! கரை உடைத்துப் பெருகிப் பாய்ந்து வரும் நீரோட்டத்தை மண்ணால் அடைக்க நினைக்காது, நீரோடு ஓடிவரும் மீன்களைக் கொண்டே அடைக்கும் வளமிக்க ஊர்கள் நிறைந்தவை–நீ வென்றழிந்த பணியரசர் நாடுகள்.

சாபம்–வில், தோல்–யானை, எறுள்–வலிமை, கம்பலை–துன்பக்குரல், பூசல்–உடைப்பு, செறுக்கும்–அடைக்கும்.

வஞ்சித்திணை, கொற்ற வள்ளைத் துறை, மழபுல வஞ்சித் துறையுமாகும். சோழன் கரிகால் பெருவளத் தானைக் கருங்குழல் ஆதனார் பாடியது.

குறிப்பு எழுத இடம்

வளமிகுந்த நாடுகள், படையெடுப்புகளால் எத்தகைய துயர் மலிந்த இடங்களாகி விடுகின்றன என்பதை எடுத்துக்கூறி, மன்னன் மனதிலே அன்பை விதைக்க நினைக்கிறார் புலவர். சோழன் கரிகாலன் போரிலே புலி. வரலாற்றின் அழியாத புகழுக்குரியவன் உறையூரையும் புகாரையும் தலைநகராகக் கொண்டு வாழ்ந்த வீரன். இவன் புகழ் பாடும் தமிழேடுகள் முடத்தாமக் கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படை, கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பட்டினப்பாலை ஆகியவை.

## 7.9. சூரியனே நீ எம் சேரமானுக்கு ஈடாக மாட்டாய்

சேரமான கடுங்கோ வாழியாதனைப் பாடியது.

திணை – பாடாண்

துறை – இயன்மொழி; பூவை நிலையும் ஆம்.

வையம் காவலர் வழிமொழிந்து ஒழுகப்
போகம் வேண்டிப் பொதுச் சொல் பொறாஅது
இடம் சிறிதென்னும் ஊக்கம் துரப்ப
ஒடுங்கா உள்ளத்து, ஓம்பா ஈகைக்
கடந்து அடுதானைச் சேரலாதனை

யாங்கனம் ஒத்தியோ? விங்குகென் மண்டிலம்
பொழுதென வரைதி; புறக்கொடுத்து இறத்தி!
மாறி வருதி மலை மறைந்து ஒளித்தி
அகல் இரு விசும்பினானும்
பகல்விளங் குதியால் பல்கதிர் விரித்தே
– கபிலர்

திணை – பாடாண் ஒருவருடைய புகழ் வலிமை, கொடை, அருள் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

**தன் மதிப்பீட்டு வினா**

6. சேரனின் வீரத்தை விளக்குக.

துறை – இயன்மொழி, பூவை நிலையும் ஆம்.

ஒருவர் இயல்பைக் கூறுதலும் அவர் முன்னோர் செய்தியை அவர் மேல் ஏற்றிக் கூறதலாகிய இயல்பைக் கூறுவது, திருமாலின் நிறுமொத்த காயாம்பூலைப் புகழ்ந்து கூறுதல்.

நாடாளும் மன்னர் பலர் புகழ்ந்து பாராட்ட, இன்பவாழ்வை விரும்பி, இம்மண்ணகம் மன்னர் பலர்க்கும் சொந்த மென்ற பொதுச் சொல்லைப் பொய்யாக்க, தனது சிறிய நாட்டை விரிவு படுத்திப் பெரிதாக்கிய, ஊக்கமும், அயராத உள்ளமும் பொருளைப் பாதுகாவாது பிறர்க்கு வாரி வழங்கும் வள்ளல்

குறிப்பு எழுத இடம்

தன்மையும், பகை வெல்லும் படை வலியும் உடைய சேர மன்னனுக்கு, சுழன்றோடும் சூரியனே! நீ எவ்வாறு நிகராவாய்? நீயோ பகல் பொழுதிலே மட்டும் தோன்றக் கூடியவன் நிலவைக் கண்டு புறமுதுகிட்டு ஒடுபவன். நிலையில்லாமல் மாறி மாறித் தோன்றுபவன் மலைகளுக்கிடையே ஒளிந்து மறைந்து கொள்ளக் கூடியவன், பகல் பொழுதிலே மட்டும் வானிலே பல கதிர் விரியத் தோன்றக் கூடியவன் நீ! ஆதனால் எங்கள் சேரமானோ என்றும் ஒரே நிலையில் நிற்பவன், எவர்க்கும் அஞ்சாதவன்! புறமுதுகு காட்டாதவன்! விண்ணும் மண்ணும் புகழும் நிலையான புகழுக்குரியவன்! இப்படிப்பட்டவனுக்கு நீ எவ்வாறு நிகராவாய்?

போகம்–இன்பம், துரப்ப–தூண்ட, அடுதல்–வெல்லுதல், போரிடுதல், தானை–படை, மண்டிலம்–ஆர்யன், வரை–அளவு.

பாடாண் திணை–துறை–இயன்மொழி! பூவை நிலை! சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் புகழ் போற்றிக் கபிலர் பாடிய பாடல். இச்சேரன் படை வலியும் செல்வச் சிறப்பும் உடையவன் இவன் கபிலார்க்கு நூறாயிரம் கணம் பொன்னோடு ஒன்றா என்னும் குன்றிலே இருந்து கண்ணுக்கெட்டிய தூரம் வரை காணுகின்ற நிலப் பரப்பையெல்லாம், அவருக்கே பரிசாகவும் தந்த பெருவள்ளல் என்று பதிற்றுப்பத்து பாடுகிறது.

## 7.10. ஆற்று மணலினும் அதிக நாள் வாழ்க

பாண்டியன் பல்யாக சாலை
முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியது.

திணை – பாடாண்.

துறை – இயன்மொழி; பூவை நிலையும் ஆம்.

ஆவும் ஆனியிற் பார்ப்பன மாக்களும்,
பெண்டிரும் பிணியுடை யிரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன் போல் புதல்வர் பெறாஅ தீரும்
எம் அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின்ன

அறத்தாறு நுவலும் பூட்கை பிறத்தின்
கொல் களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றம்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும் பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே
– நெட்டிமையார்

திணை – பாடாண். ஒருவருடைய, புகழ் வலிமை, கொடை, அருள் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

துறை – இயன்மொழி, பூவை நிலையும் ஆம்.

ஒருவர் இயல்பைச் கூறுதலும் அவர் முன்னோர் செய்தியை அவர் மேல் ஏற்றிக் கூறுதலுமாகிய இயல்பைக் கூறுவது.

பசுக்களும் பார்ப்பனரும் மக்களும் பெண்களும் நோயுடை யோரும், இறந்து–தென்திசை, சென்றோர்க்குப் பலிச் சோறு படைக்கச் சிறந்த பிள்ளைகளைப் பெறாதவரும், பாதுகாப்புடைய இடங்களைத் தேடிக் கொள்ளட்டும். எம்முடைய அம்புகள் விரைந்து வந்து உம்மை அழித்து விடக்கூடும். எனவே நீங்கள் உங்களுக்கேற்ற பாதுகாவலைத் தேடிக் கொள்ளுங்கள் என்று கூறி போருக்கு முன்னே எச்சரிக்கும் அறச் செயலும், வீர மறக் குணமும் உடையவனே சொல்கின்ற வளமை மிக்க யானை மேல் அசைந்து வரும் நின்னுடைய வெற்றிக் கொடிகள் ஆகாயத்தை இருளடையச் செய்கின்றன. எம்மரசே! குடுமிப் பெருவழுதியே! நீ வாழ்க! கூத்தர்க்குச் செம்பொன் காசுகள் அளித்த கடல் தெய்வத்திற்கு விழாவெடுத்த, நெடியோன் பாண்டியன் உண்டாக்கிய, பஃறுளி ஆற்றின் பரந்த மணல் பரப்பினும் மேலாகப் பல கோடி ஆண்டுகள் நீ புகழோடு வாழ்க!

இறுக்கும்–கொடுக்கும், அறத்தாறு–அறவழி நுவறும்–சொல்லும் பூட்கை–மன உறுதி, வயிரியர்–கூத்தர்.

பாடாண் திணை–இயன் மொழித் துறை. இப்பாடல் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

நெடிய தொலை நோக்கும் கர்த்த பார்வையும் கொண்டவர் புலவர் என்பதால், நெட்டிமையார் என்னும் சிறப்பு பெயர் பெற்றது.

குறிப்பு எழுத இடம்

## 7.11. தொகுப்புரை

புறநானூறு புறத்தை பற்றிய சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் வீரத்தை பாடுகின்றது. அரசன் பெருஞ்சோறளிந்த சேரழன் போர் சிறப்பு, பரிசில் வழங்கிய முறை, தோற்றபொலிவு, நாட்டைக் காத்திடும்திறன் அவரின் புகழ் போன்றவைகளை இன்சுவையோடு புறநானூறு நமக்கு விளக்குகின்றது.

## 7.12. தன்மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

1) 7.1 2) 7.3 3) 7.4 4) 7.5 5) 7.8 6) 7.9

## 7.13. பயிற்சி வினாக்கள்

1. புறநானூறு பற்றி குறிப்பு வரைக ?
2. பெருஞ்சோறளிந்த சேர மன்னனின் வீரத்தை விவரி ?
3. பரிசில் வாழ்க்கையை விளக்குக.

# புறநானூறு

குறிப்பு எழுத இடம்

## முன்னுரை

புறநானூற்று பாடல்களில், சேர மன்னர்களின் போர் சிறப்புகளையும், பரிசில் வாழ்க்கை, அரசியல் வாழ்க்கை சமுதாய நிலை போன்றவற்றை அறிநது கொள்ள முடிகின்றது. புறநானூற்றின் முதல் இயலில் முதல் பத்துப்பாடல்களும் இரண்டாம் இயலில் அடுத்த பத்துப்பாடல்களும் வரிசை அமைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

## நோக்கம்

சேர வரலாற்றை அறியவும், பரிசில் மற்றும் புலவர்களின் நிலைப்பாடுகள், சேரர்களைப் பற்றி பாடிய மன்னர்கள், அவர்களின் வலிமை, கொடை, அருள் மற்றும் அவர்களின் போர் நிலைப்பாடுகள், போரிடும் வீரர்களின் சிறப்புகள் போன்றவைகளை திணை, துறையின் மூலம் விளக்குவதையே நோக்கமாக கொண்டுள்ளது.

## பாட அமைப்பு

8.1. பாடல் உனக்கு பரிசில் எனக்கும்

8.2. புலவர் பாடும் புகழ் இருக்கப் போர் எதற்கு

8.3. யானையைப் போகவீடு! சோழனை வாழவிடு

8.4. போரிடும் கைவலிமை புலவர்க்கு வருமா ?

8.5. போரா ? வேள்வியா ? எது நீ அதிகம் செய்தது

8.6. எதிரிக்கு எமன்! எமக்குத் தலைவன் நீ!

8.7. இல்லை என்று வருவோர்க்கு இல்லை என்னாது தருபவன் நீ

8.8. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே

8.9. போரிடும் வீரம் எனக்கு புகலிடமாகும்

8.10. மன்னன் வாழ்வு மக்களின் வாழ்வு

8.11. தொகுப்புரை

8.12. தன் மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

8.13. பயிற்சி வினா

## 8.1. பாடல் உனக்கு பரிசில் எனக்கும்

சேரமான் பாலை பாடிய
பெருங்கடுங்கோவைப் பாடியது

திணை – பாடாண

துறை – பரிசில் கடாநிலை

அரிமயிர் திரள் முன்கை
வால் இழை மட மங்கையர்
வரி–மணல் புனை பாவைக்கு
குலவுச் சினைப் பூக் கொய்து
தண் பொருநப் புனல் பாயும்

விண் பொருபுகழ் விறல் வஞ்சிப்
பாடல் சான்ற விறல்வேந் தனும்மே
வெப்புடைய அரண் கடந்து
துப்புறுவர் புறம் பெற்றி சினே
புறம் பெற்ற வய வேந்தன்

மறம் பாடிய பாடினி யும்மே
ஏர் உடைய விழுக் கழஞ்சின்
சீர் உடைய இழை பெற்றிசினே
இழை பெற்ற பாடினிக்குக்
குரல் புணர்சீர்க் கொளைவல் பாண் மகனும்மே

என ஆங்கு
ஒள் அழல் புரிந்த தாமரை
வெள்ளி நாரால் பூப் பெற்றிரினே!
– பேய்மகள் இளவெயினி.

குறிப்பு எழுத இடம்

பரிசில் கடாநிலையை விளக்குக ?

திணை – பாடாண் ஒருவருடைய, புகழ் வலிமை, கொடை, அருள் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

துறை – பரிசில் கடாநிலை – உன்னைப் பாடிப் பரிசில் பெற்றார் பலர் நான் அதைப் பெற்றிவேன். எனக்கு அருள்க என்று புரவலனிடம் இரவலன் கேட்டல்.

மென்மை மிக்க பூமயிர் நிறைந்த திரண்ட முன் கையுடைய அழகிய அணிமணிகள் புனைந்த இளமங்கையர், சேற்றாலமைத்த சிறு வீடுகளில் பாவைகள் வைத்து விளையாடி மகிழ்வர் அப்பாவைகளுக்கு வளைந்த கோட்டுப் பூக்களைப் பறித்துச் சூட்டுவர். குளிர்ந்த நீருடைய ஆன் பொருந்தம் என்னும் ஆற்றில் நீந்தித் திளைப்பர். விண் முட்டும் புகழும், வெற்றிப் பெருமைகளும் உடைய கருவூரின் கண் மக்கள் இவ்வாறு மகிழ்வில் திளைத்திருக்க, அவ்வூராளும் வெற்றிப் புகழ் மிக்க வேந்தனோ, பகையரசர் தம் கொடிய காவல் அரண்களை அழித்தொழித்து, வலி கொண்டு அவனை எதிர்த்தவர்களைப் புறமுதுகிட்டோடச் செய்வான். இவ்வாறு பகைவரைப் புறங்கொண்ட அவன் பொன்னால் ஆக்கிய அணிமணிகளைப் பரிசாகப் பெற்றாள். அணிமணிகள் பெற்ற பாடினியோடு இணைந்து பாடும். பாட்டிலே வல்ல பாணன், சிவந்த நெருப்பிலே உருக்கி வார்த்த, பொன்னாலாக்கிய செந்தாமரை மலர்களை வெள்ளி நாரிலே கோத்தமைத்துச் செய்த மாலையைப் பரிசாகப் பெற்றான். யான் மட்டும் ஒதும் பெறாமல் போவேனோ? போக மாட்டேன்! நானும் பரிசில் பெறுவேன் என்பது கருத்து.

**தன் மதிப்பீட்டு வினா**

1. கருவூரின் மக்கள் எவ்வாறுதளைத்து நிற்பர் ?

குறிப்பு எழுத இடம்

## 8.2. புலவர் பாடும் புகழ் இரக்கப் போர் எதற்கு?

பாண்டியன் பல்யாக சாலை
முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியது

திணை – பாடாண்

துறை – இயல்மொழி

பாணர் தாமரை மலையவும், புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்,
மறறு இது – அறனோ விறல்மாண் குடுமி!
இன்னா ஆகப் பிறர் மண் கொண்டு,
இனிய செய்தி நின் ஆர்வலர் முகத்தே!
– நெட்டிமையார்

திணை – பாடாண், ஒருவருடைய, புகழ் வலிமை, கொடை, அருள் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

துறை – இயன்மொழி

ஒருவர் இயல்பைக் கூறுதலும், அவர் முன்னோர் செய்தியை அவர் மேல் ஏற்றிக் கூறுதலுமாகிய இயல்பைக் கூறுவது.

பொன்னிலே செய்து வெள்ளி நாரிலே கோத்த பொற்பூ மாலைகளை, நின் புகழ் பாடும் பாணர்களுக்குச் சூட்டி மகிழ்கின்றாய்! பொற்பட்டம் அணிந்த யானைகளையும் அலங்கரிக்கப்பட்ட தேர்களையும், புலவர்களுக்குத் தந்து மகிழ்கின்றாய். ஆனால், வெற்றிப் புகழ் விளங்கும் முதுகுடுமிப் பெருவழுதியே! வேற்றரசர் நாடுகளை வென்று உன தாக்கிக் கொண்டு, அவர்களை ஏதும் இல்லாதவர்கள் ஆக்கிவிட்டு, நின்னைப் பாடிப் புகழும் பாணர்க்கும், புலவர்க்கும் மட்டும் வாரி வழங்குகிறாயே இது என்ன நியாயம் ?

மலைதல்–சூடுதல் பூ – பொற்பட்டம் நுதல் – பதக்கம் ஆர்வலர்–அன்புடையவர்.

பாடாண் திணை–இயன்மொழித் துறை பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

**தன் மதிப்பீட்டு வினா**

2. இயன்மொழி வாழ்து விளக்கம் தருக ?

பாணர்க்கும் புலவர்க்கும் வாரி வழங்கினால் மட்டும் போதாது பிற மன்னர் மனம் வாடி வருந்த அரசு செலுத்தக் கூடாது என்பது புலவர் கூறும் அறிவுரை.

## 8.3. யானையைப் போகவீடு! சோழனை வாழவிடு!

சேரன் அந்துவஞ் சேரல்
இரும்பொறையைப் பாடியது

திணை – பாடாண்

துறை – வாழ்த்தியல்

சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி கருவூரிடஞ் செல்வானைக் கண்டு, சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையோடு வேண் மாடத்து மேல் இருந்து பாடியது.

இவன் யார் ? என்குவை ஆயின், இவனே
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய,
எய்கணை கிழித்த பகட்டெழில் மார்பின்,
மறலியன்ன களிற்று மிசை யோனே;

களிறே முந்நீர் வழங்கும் நாவாய் போலவும்
பன்மீன் நாப்பண் திங்கள் போலவும்,
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப,
மரீஇயோர் அறியாது மைந்துபட் டன்றே;
நோயிலன் ஆகிப் பெயர்க்கதில் அம்ம!

பழன மஞ்சை உகுத்த பிலி
கழனி உழவர் சூட்டொடு தொகுக்கும்
கொழுமீன், விளைந்த கள்ளின்,
விழுநீர் வேலி நாடுகிழ வோனே!

– உறையூர் ஏணிச்சேரி முட மோசியார்

திணை – பாடாண், ஒருவருடைய, புகழ் வலிமை, கொடை, அருள், ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

துறை – வாழ்த்தியல், தலைவனை வாழ்த்திக் கூறுதல்.

இவன் யாரென்று கேட்டீராயின், இவன் அம்புகள் தைத்துச் கிழிந்த–புலித் தோல் கவசம் அணிந்த–அகன்ற–அழகிய மார்புடையவன். கொல்லும் கூற்றினைப் போன்ற யானை மீதறி வருபவன். இவனுடைய இந்த யானை கடலை கிழித்துக் கொண்டு செல்லும் மரக்கலத்தைப் போன்றது. பல நூறு விண்மீன்களுக்கிடையே பவனி வரும் முழு நிலவை ஒத்தது. சுறாமீன்களைப் போலச் சுழன்று பாயும் வாள் வீரர்கள் சுற்றிச் சூழ்ந்திருக்க, இவனுடைய இந்த யானை இப்போது தன்னுடைய பாகர்களுக்கும் அடங்காது மதங்கொண்டு செல்கிறது. அதன் மேல் அமர்ந்திருப்பவனோ, வயல்களிலே மயில்கள் உதிர்த்துவிட்ட பீலி இறகுகளை, அவ்வயல்களிலே உள்ள உழவர்கள் நெற்கதிரோடு அள்ளிக் குவிக்கின்ற, வளமிக்க நாட்டிற்குத் தலைவன், கொழுத்த மீன்களும் முதிர்ந்த கள்ளுமுடைய, நீரே வேலியாகச் சூழ்ந்த வள நாட்டிற்கு அரசன் – சோழன் கோப் பெருநற் கிள்ளி. எனவே அவன் எவ்விதத் துன்பமும் இன்றிச் செல்ல வழி செய்வாயாக.

பூம்பொறி–அழகிய தோலின் இணைப்பு, பகடு–அகலம், மறலி–எமன், நாவாய்–மரக்கலம், நாப்பண்–இடை. மரீ இயோர்–சூழ்ந்திருக்கும் பாகர் மைந்து–மதம், பழமை, கழனி–வயல், சூட்டு–கதிர்.

சோழன் கிள்ளியைச் சேரமான் இரும்பொறைக்கு அறிமுகப் படுத்துவதாக அமைந்த பாடல், பாடாண் திணை, வாழ்த்தியல் துறை.

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினா**

3. சோழன் பெருநற்கிள்ளியின் வீரச் சிறப்பைக் கூறுக ?

கோப்பெருநற்கிள்ளி கருவூரை முற்றுகை இட்டபோது அவனது யானை மதங்கொண்டு ஓடத்தலைப்பட்டது. சோழன் கோப்பெரு நற்கிள்ளி யாரென்றறியாத சேர மன்னனிடம் வளமிக்க நாட்டின் தலைவன்–வீரமிக்க சோழன் கோபி பெருநற்கிள்ளி இவன்; இவன் உன் படை வீரர்களால் துன்புறுத்தப்படாது போகச் செய்ய வேண்டும் என்று சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறைக்குப் புலவர் கூறுவதாக அமைந்துள்ளது இந்தப் பாடல்.

குறிப்பு எழுத இடம்

## 8.4. போரிடும் கைவலிமை புலவர்க்கு வருமா?

சேரமான் செல்வக் கடுங்கோ
வாழியாதனைப் பாடியது

திணை – பாடாண்

துறை – இயன்மொழி

கடுங்கண்ண கொல் களிற்றால்
காப்புடைய எழு முருக்கிப்,
பொன் இயல் புனை தோட்டியால்
முன்பு துரந்து சமந்தாங்கவும்;
பார் உடைத்த குண்டகழி

நீஅழுவ நிவப்புக் குறித்து,
நிமிர்பரிய மாதாங்கவும்;
ஆவம் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாவ நோன் ஞாண் வடுக்கொள வழங்கவும்
பரிசிலர்க் அருங்கலம் நல்கவும் குரிசில்

வலிய ஆகும், நின் தாள் தோய் தடக்கை.
புலவு நாற்றத்தை பைந்தடி
பூநாற் றத்த புகை கொளீஇ, ஊன்றுபவை
கறி சோறுண்டு வருந்து தொழில் அல்லது,
பிறிது தொழில் அறியா ஆகலின், நன்றும்

மெல்லிய பெரும! தாமே, நல்லவர்க்கு
ஆரணங் காகிய மார்பின், பொருநர்க்கு
இருநிலத்து அன்ன நோன்மைச்,
செறிமிகு கோய் றின் பாடுநர் கையே

– கபிலர்

**தன் மதிப்பீட்டு வினா**

4. இயன்மொழி வாழ்த்து விளக்கம் தருக?

திணை – பாடாண், ஒருவருடைய, புகழ், வலிமை, கொடை, அருள் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது.

(முதல் வரி) துறை – இயன்மொழி.

(2வது வரி) ஒருவர் இயல்பைக் கூறுவதலும் அவர் முன்னோர்செய்தியை அவர் மேல் ஏற்றிக் கூறுதலுமாகிய இயல்பைக் கூறுவது.

கோபம் கொப்புளிக்கும் கண்ணுடைய, காவலாக அமைந்த தூண்களை முறித்துக் கொண்டு வரும்போர் யானைகளை இரும்பாலமைந்த அழகிய அங்குசத்தால் அடக்கி, திருப்பினை இட்ட ஏவலைச் செய்விக்கும் ஆற்றல் உடையவனே நிலந் தோண்ட உண்டான பள்ளக் குழிகளில் நீர் நிறைந்திருக்கும். எனவே, அத்தகைய குழிகளைத் தாண்டிச் செல்லப் பாய்ந்து செல்லும் குதிரைகளின் கடிவாளக் கயிற்றை, வேண்டுமளவு இழுத்துத் தளர்த்திப் பிடித்துச் செல்லும் வல்லமை உடையவனே அம்பளாத்தானை தழுவிக் கிடக்கும் முதுகுடையவனே தேர் மேலே நின்று வில்லின் நாண் அழுந்த உண்டான தழும்பிலே பொருந்தும்படி வில்லை வளைத்து அம்பை வேகமாகச் செலுத்த வல்லவனே! நின்புகழ் பாடி வருவோர்க்கு அன்றாடம் பரிசுப் பொருள்கள் வாரி வழங்கப் பயன்படும் உன் தோளோடு பொருந்தி பெரிய கைகள், வலிவுடையனவாம் இருக்கின்றன. ஆனால், புலால் மணக்கும் நிலைத் தசையை, பூவாசம் வீசும் புசை நெருப்பில் வாட்டிச் செய்த ஊனுணவும் கறியும் துவையலும் உண்டு வாழ்வதைத் தவிர, வேறு தொழில் செய்தறியாதவர்கள் நாங்கள். எனவே, மகளிர்க்குத் தீராத வேட்கையூட்டும் விரிந்தகன்ற மார்பும், பகை வரைக் கண்டஞ்சாத வலிவும் உடைய போர் வென்று முடிப்பதிலே இளவேள் முருகனை ஒத்த எம் அரசே! உன்னைப் பாடும் எம் போன்றவர் கைகள் மென்மையுடையனவாய் இருக்கின்றன.

கடுங்கண்–வீரத்தன்மை, எழு–யானை கட்டிய தூண், தோட்டி– அங்குசம், நீர் அழுவம்–நீர்ப்பரப்பு ஆலம்–அம்பறாத்துணி. சாபம்–வில், பைந்தடி–தசை, நல்லவர்–பெண்கள், நோன்மை–வலிமை.

சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன், கபிலர் கைகளைப் பற்றி "நும் கைகள் இவ்வளவு மென்மை உடையவாய் இருக்கின்றனவே!" என்று கூறக் கபிலர் தம் கை மென்மையாக்கும், வேந்தர் கையில் மென்மை இன்மைக்கும், காரணம் கூறுவதாக அமைந்த இப்பாடல் கபிலர் பாடியது. பாடாண் திணை, இயல் மொழித் துறை சார்ந்தது.

## 8.5. போரா? வேள்வியா? எது நீ அதிகம் செய்தது

பாண்டியன் பல்யாக சாலை
முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியது.

திணை – பாடாண்

துறை – இயன்மொழி

கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்,
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ் செய் தனை அவர் நனந்தலை நல்லியில்;
புள்ளினம் கமிழும் புகழ்சால் விளைவயல்,
வெள்ளுளைக் கலிமான் கவி குளம்பு உகளத்

தேர்வழங் கினை, நின் தெவ்வர் தேஎத்துத்;
துளங்கியலான் பணை எருத்தின்



குறிப்பு எழுத இடம்

குறிப்பு எழுத இடம்

பா அடியான், செறல் நோக்கின்,
ஒளிறு மருப்பின் களிறு அவர
காப்புடைய கயம்படியினை;

அன்ன சீற்றத்து அனையை ஆகலின்,
விளங்கு பொன் எறிந்த நலங்கிளர் பலகை யொடு
நிழல்படு நெடுவேல் ஏந்தி, ஒன்னார்
ஒண்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்,
நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய,

வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் ? புரையில்
நற்பனுவல் நால் வேதத்து,
அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்பிலி ஆவதி பொங்க பல்மாண்
வியாச் சிறப்பின் வேள்வி முற்றி,

பூபம் நட்ட வியன்களம் பல கொல் ?
யாபல கொல்லோ ? பெரும! வார் உற்று
விசிபிணிக் கொண்ட மண்கனை முழவின்
பாடினி பாடும் வஞ்சிக்கு
நாடல் சான்ற மைந்தினேய் நினக்கே

– நெட்டிமையார்

**தன் மதிப்பீட்டு வினா**

5. பல்யாக சாலை முதுகுடுமி வழுதியின் போர் சிறப்பை விவரி.

திணை – பாடாண் ஒருவருடைய புகழ், வலிமை, கொடை, அருள் ஆகியவற்றைச் சிறப்பித்து பாடுவது.

துறை – இயன்மொழி, ஒருவர் இயல்பைக் கூறுதலும், அவர் முன்னோர் செய்தியை அவர் மேல் ஏற்றிக் கூறுதலுமாகிய இயல்பைக் கூறுவது.

வழுதியே! நீ படையெடுத்துச் சென்ற நாடுகளில் தேரோட்டித் திரிந்த வீதிகளில்–அகன்ற மனையரண்களில்–வெள்ளை வாயுடைய கழுதையைப் பூட்டி உழச் செய்து பாழ்படுத்தினை. புள்ளினங்கள், இருந்து, பாடும், பகையரசர் தம், புகழ் மிக்க விளைநிலங்களில், விரைந்து செல்லும் அசைந்தாடும்–பிடல் மயிர் உடைய குதிரைகளின் கலிந்த குளம்புகள் படியும்படி தேரைச் செலுத்துகின் அப்பகையரசர் தம் காவல் குளங்களை அசையும் பெரிய கழுத்தினையும் அச்சமுட்டும் பார்வையினையும் அகன்ற அடிகளையும், கூரிய தந்தக் கொம்புகளையும் உடைய யானைகளை விட்டு அழித்தனை பகை வெல்லுவதில் நீ இத்தகைய சினம் உடையவன் ஆதலின், உன் காலாட் படையை வெற்றி கொள்ளம் ஆசையில், கேடயமும், சிறந்த படைக் கலங்களும் தாங்கி வந்த பகையரசர்கள், தங்கள் ஆசை அழியப் புறமுதுகிட்டு ஓடினார்கள். இப்படி நின்னிடம், தோற்றோடிப் பழி சுமந்து வாழ்ந்த படை மன்னர் தொகை அதிகமா ? அல்லது அறநூல் கூறிய வேத விதிப்படி, நெய்யும் சமித்தும் பொரியும் இட்டு நீ செய்த புகழ் மிக்க–போற்றற்களும் பெரும் யாகங்கள்–அத்தகைய யாக சாலைகளில் வேள்விக் கூடங்களில் நீ நிறுத்தி வைத்த தூண்கள் இவற்றின் தொகை அதிகமா ? பெருமானே! வார் இறுகக் கட்டிய முடிவுகள் செலிக்கும்,

பாடும் விறலிகழ் புகழும் சிறப்புடையவனே! எது அதிகம்? நீ நடத்திய நல்லற வேள்விகளா? ஈட்டிய போர்க்கள் வெற்றிகளா? இதில் எது எண்ணிக்கையில் அதிகமானது?

ஞெள்ளல்–தெரு, நனந்தலை–அகன்ற இடம், இமிழும்–ஒலிக்கும், உகள்–பாய, தெவ்வர்–பகைவர், செறல்–சினம், கயம்–குளம், புரையில்–குற்றமற்ற, வீயா–கெடாத, யூபம்–சாண், விசி–பிணி இறுகள் கட்டிய.

பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் நடத்திய வேள்விகள் அதிகமாக, இல்லை, தொடுத்த போர்கள் அதிகமா இவற்றில் எது அளவில் அதிகமானது என்று நெட்டிமையார் பாடிய இப்பாடல் பாடாண்திணை இயன் மொழித் துறையைச் சார்ந்தது.

குறிப்பு எழுத இடம்

**8.6. எதிரிக்கு எமன்! எமக்குத் தலைவன் நீ!**

எதிரிக்கு எமன் எமக்குத் தலைவன் நீ!

சோழன் இராசசூயம் வேட்ட
பெருநற்கிள்ளியைப் பாடியது.

திணை – வஞ்சி

துறை – மழுபுலவஞ்சி

வினைமாட்சிய விரை புரவியொடு,
மழை உருவின் தோல் பரப்பி,
முனை முருங்கத் தலைச் சென்று, அவர்
விளைவயல் கவர்பூ ஊட்டி,
மனைமரம் விறகு ஆகக்

கடி துறைநீர்க் களிறு படிஇ,
எல்லுப்பட இட்ட சுடுதீ விளக்கம்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரின் தோன்றப்
புலம் கெட இறுக்கும் வரம்பில் தானைத்,
துணை வேண்டாச் செரு வென்றிப்

புலவு வாள், புலர் சாந்தின்
முருகன் சிற்றத்து, உருகெழு குருசில்
மயங்கு வள்ளை, மலர் ஆம்பல்,
பனிப் பகன்றைக் கனிப் பாகல்,
கரும்பு அல்லது காடு அறியாப்

பெருந் தண்பணை பாழ் ஆக,
ரம நன்னாடு ஒள்ளரி ஊட்டினை,
நாம நல்லமர் செய்ய
ஓராங்கு மலைந்தன, பெரும நின் களிறே!

– பாண்டரங்கண்ணனார்

**தன் மதிப்பீட்டு வினா**

6. மழுபுல வஞ்சி–குறிப்பு தருக!

குறிப்பு எழுத இடம்

திணை – வஞ்சி. பகையரசர் இடத்தைக் கொள்ளையிட்டுப் பாழ்படச் செய்தல், எரியூட்டல்.

துணை – மழபுலவஞ்சி, பகைவர் ஊரில் கொள்ளையிட்டுப் பாழ்படச் செய்தல், எரியூட்டல்.

விரைந்து ஓடும்–போர் வல்ல குதிரைகளுடன், கருமுகில் போலும் கருத்த நிறமுடைய கேடயங்களைப் பரப்பி, போர்க்களங்கள் பலவற்றை உண்டாக்கி பகையரசர் தம் நெல்வயல்களைக் கொள்ளையடித்து, அவர் தம் காவல் குளங்களில் யானைகளை விட்டழித்து அந்நாட்டவர் வீடுகளை அழித்து அப்படி அழித்த வீடுகளின் மரமே விறகாக வைத்து எரியவிட்ட நெருப்பு சிவந்த சூரியனின் சுடர்போல எரிய, எங்கும் பரவி நிற்கும் எல்லையற்ற படை வலியும், துணைப் படையின்றித் தானே வெல்ல வல்ல திறமும் நிணச் சதை தோய்ந்த வாளும் உடைய, வாசச் சாந்து பூசிய, செவ்வேள் முருகனைப் போன்ற அஞ்சா நெஞ்சமும் அச்சமூட்டும் தோற்றமும் கொண்ட தலைவனே! ஆம்பலும் கிலுகிலுப்பையும் கலந்து மலரும் குளங்களும் பழமுடைய பாகல் படரும் வேலிகளும், கரும்புக் காட்டைத் தவிர வேறு காடு என்பயையே அறியாத வயல்களும் நிறைந்த பெரிய மருத நிலம் பாழாக, பகையரசர் நாடுகள் தீக்கிரையாக, கொடூரமான போர்களைச் செய்தன. உன்னைப் போலவே, உன்னுடைய போர் யானைகளும்.

முருங்க–கலங்க, எல்லுப்பட–விளக்க முண்டாக. புலம்–இடம், செரு–போர், உரு–அச்சம், பனி–குளிர்ச்சி பகன்றை–கிலுகிலுப்பைக் கொடி, தண்பனை–மருதநிலம் மலைத்தல்–போரிடல்.

## 8.7. இல்லை என்று வருவோர்க்கு இல்லை என்னாது தருபவன் நீ

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல்
இரும்பொறையைப் பாடியது

திணை – வாகை

துறை – அரசு வாகை; இயன்மொழியும் ஆம்

தென்குமரி வட பெருங்கல்,
குணகுட கடலா எல்லை,
குன்று மலை காடு நாடு,
ஒன்று பட்டு வழி மொழியக்,
கொடிது கடிந்து, கோல் திருத்திப்

பாடுவது உண்டு, பகல் ஆற்றி,
இனிது உருண்ட சுடர் நேமி
முழுது ஆண்டோர் வழி காவல,
குலை இறைஞ்சிய கோள் தாழை
அகல் வயல், மலை வேலி,

நிலவு மணல் வியன் கானல்,
தெண் கழிமிசைச் சுடர்ப் பூவின்
தண் தொடியோர் சூடு பொறாஅ,
மாப் பயன்பின் பொறை போற்றாது,
நீடு குழி அகப்பட்ட

பீடு உடைய எறுழ் முன்பின்,
கோடு முற்றிய கொல் களிறு
நிலை கலங்கக் குழி கொன்று,
கிளை புகலத் தலைக்கூடி யாங்கு
நீ பட்ட அரு முன்பின்

பெருந்தளர்ச்சி, பலர் உவப்பப்,
பிறிது சென்று, மலர் தாயத்துப்
பலர் நாப்பண் மீக் கூறலின்,
உண்டாகிய உயர் மண்ணும்
சென்று பட்ட விழுக்கலனும்,

பெறல் கூடும், இவன் நெஞ்சு உறப்பெறின் எனவும்,
ஏந்து கொடி இறைப் புரிசை,
வீங்கு சிறை, வியல் அருப்பம்,
இழந்து வைகுதும், இனி நாம் இவன்
உடன்று நோக்கினன், பெரிது எனவும்,

வேற்று அரசு பணி தொடங்கு நின்
ஆற்றலொடு புகழ் ஏத்திக்
காண்கு வந்திசின், பெரும! ஈண்டிய
மழையென மருளும் பல் தோல் மலையெனத்
தேன் இறை கொள்ளும் இரும்பல்யானை,

உடலுநர் உட்க வீங்கிக், கடலென
வான்நீர்க்கு ஊக்கும் தானை, ஆனாது
கடு ஒடுங்கு யெிற்ற அரவுத்தலை பனிப்ப,
இடியென முழங்கு முரசின்,
வரையா ஈகைக் குடவர் கோவே!

– குறுங்கோழியூர் கிழார்

குறிப்பு எழுத இடம்

திணை – வாகை, வாகைப் பூவைச் சூழப் பகைவரை வெல்லுதல் வாகை – வெற்றி.

துறை – அரசவாகை. இயன்மொழியும் ஆம்.

அரசனது வெற்றியைக் கூறுதல். ஒருவரது இயல்பைச் சொல்லுதல் அவர் முன்னோர் செய்தியையும், அவர் மேல் ஏற்றிச் செல்லுதல்.

தெற்கே கன்னியாகுமரியும், வடக்கே இமயப் பெருமலையும் கிழக்கிலும் மேற்கிலும் நிலக்கடல்களும், எல்லையாக இடையே உள்ள காடும் குன்றும்

குறிப்பு எழுத இடம்

மலையுமுள்ள நாட்டு மக்கள் எல்லாம், ஒன்று கூடி நின்னைப் போற்றிப் புகழ், தீமைகளை ஒழித்து, செங்கோல் நெறிமுறை வழுவாது, ஆறில் ஒரு பங்கை வரியாகக் கொண்டு, நடுநிலைமை தவறாது தர்ம சக்கரம் தடையின்றி சுழன்றோட, இவ்வுலகை ஆண்டவர்களின் குடிப்பெருமையைக் காத்தவனே! குலைகள் தாழ்ந்த—மக்கள் விரும்பிக் கொள்ளத் தக்க—தென்னைகளையும், அகன்ற நெற்கழனிகளையும், மலையாகிய வேலியையும், நிலா வெளியைப் போன்ற வெள்ளை மணற் பரப்புடைய அகன்ற கடற்கரையையும், தெளிந்த நீர்ச்சுனைகளிடையே தீச்சுடர் போலப் பூக்கும் செவ்வாம்பல் பூக்களையும் உடைய, குளிர்ந்த நீர்த் தொண்டித் துறையை வென்றாளும் வேந்தனே! தன்னை அகப்படுத்த வெட்டி வைத்திருக்கும்—மேலே மூடி மறைக்கப்பட்டிருக்கும். குழியை அறியாது சென்று அகப்பட்டுக் கொள்ளும், மிக்க வலியுடைய பெரிய தந்தக் கொம்புடைய யானை, அதன் செருக்கடங்கி அப்புதைகுழியை விட்டு நீங்கித் தன் இனத்தோடு சேர்ந்து வாழ்தல் போல, மிகுவலியால் பகை மதியாது இருந்த நீயும், நீ பெற்ற தளர்ச்சி நீங்கிச் சிறை மீண்டு வந்து பலரும் பாராட்ட நின் சுற்றத்தார்கள் சூழ மகிழ்ந்திருக்கின்றாய்! தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் நீ சிறைப் பிடிக்கப்படுவதற்கு முன்னால் நின்னால் தோற்கடிக்கப்பட்ட சிற்றரசர்கள், இவன் அன்பு நமக்குக் கிடைக்கப் பெறுமானால் நாம் இழந்த நாடும் பொருளும் மீண்டும் பெற்று மகிழலாம். அப்படியின்றி இவன் வெறுப்புக்கு நாம் ஆறாக நேர்ந்து விடுவோமானால், அகன்ற காடும், அகழியும் மற்றக் காவல் அரண்களும் இழந்து வருந்த நேரும் என நினைத்து, உன் தாள் பணிந்து, பணிவிடை செய்வதற்குக் காரணமான நின் பேராற்றலையும் புகழையும் கண்டு புராட்டவே வந்தேன். அரசர் பெருமானே! மழை கோப மேகம் எனத் திரண்ட கேடயப் படைகளும் பெரிய மலைகளும் என்று கருதி வண்டினங்கள் வந்து தங்கும் மிகப் பெரிய யானைப் படைகளும், பகைவர் அஞ்சப்பாய்ந்து போரிடுவதைக் கண்டு, இது கடலோ எனக் கருதிக் கார்மேகம் நீர் கொள்ளக் கருதும் காளாட் படைகளும் ஆகிய இவை போதா வென்று, நஞ்சூறும் பல்லுடைய பாம்பு நடுங்க, இடி போல் முழங்கும் முரசினையும் உடையவனே! இல்லையென்பார்க்கு இல்லை என்னாது கொடுக்கும் குடவர் கோமான் நீயே.

குணதிசை—கிழக்கு, குடதிசை—மேற்கு, பகல்—நடுவுநிலைமை நேமி—அக்கரம், கோள்—கொள்ளத்தக்க—வியன்கானல்—அகன்ற கடற்கரை, தெண்—தெளிந்த, பயம்பு—பள்ளம். முன்பு—வலிமை—நாப்பண்—நடுவில் இறை—உயர்வு. புரிசை—மதில், வியல்—காடு, அருப்பம்—அரண், இரும்—பெரிய, உட்க—அஞ்ச, பனிப்ப—நடுங்க சேரமான் யானைகட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்னும் மன்னனின் மன வலிமையைப் புகழ்ந்து, குறுங்கோழியூர்க் கிழார் என்னும் புலவர் பாடிய இப்பாடல், வாகைத் திணையைச் சார்ந்தது. துறை—இயன் மொழி. அரசவாகையுமாகும். சேய் என்னும் இயற் பொருடைய இச் சேர மன்னன் இரும் பொறையை குடியில் பிறந்தவன். யானையின் நோக்கும் போன்ற வலிய பார்வையுடையவன் இவன் என்பது குறிக்க, யானைக் கட்சேய் எனப் போற்றப்பட்டுள்ளான்.

## 8.8. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே

பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடியது

திணை – பொதுவியல்

துறை – முதுமொழிக்காஞ்சி

முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியன் ஞாலம்
தாளின் தந்து, தம்புகழ் நிறீஇ,
ஒருதாம் ஆகிய உரவோர் உம்பல்
ஒன்றுபத்து அடுக்கிய கோடிகடை இரீஇய

பெருமைத்து ஆகநின் ஆயுள் தானே!
நீர்த் தாழ்ந்த குறுங் காஞ்சிப்
பூக் கதூஉம் இன வாளை,
நுண் ஆரல், பரு வரால்,
குருஉக் கெடிற்ற குண்டு அகழி;

வான் உட்கும் வடிநீள் மதில்;
மல்லன் மூதூர் வய வேந்தே,
செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்,
ஞாலம் காவலர் தோற்வலி முருக்கி,
ஒருநீ அகல் வேண்டினும், சிறந்த
நல் இசை நிறுத்தல் வேண்டினும், மற்றதன்
தகுதி கேள், இனி, மிகுதியான!
நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே;
உண்டி முதற்றே உணவின் பிண்டம்;

உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே;
வித்திவான் நோக்கும் புன்புலம்தம கண்ணகன்
வைப்பிற்று ஆயினும் நண்ணி ஆளும்
இறைவன் தாட்கு உதவாதே; அதனால்,
அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே
நிலன் நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண்தட் டோரே;
தள்ளா தோர் இவண் தள்ளா தோரே.

– குடபுலவியனார்

திணை – பொதுவியல் எல்லாத்திணைகளுக்கும் பொதுவான செய்திகளைத் தொகுத்துக் கூறுவது.

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினா**

7. முதுமொழிக் காஞ்சி – குறிப்புத் தருக ?

குறிப்பு எழுத இடம்

துறை – முதுமொழிக் காஞ்சி. அறம், பொருள், இன்பம் என்று முப்பொருள்களின் சிறப்பினை எடுத்துக் கூறுதல்.

ஒலி முழங்கும் சரடல் சூழ்ந்த இவ்வுலகத்தைத் தம் முயற்சியால் வென்று புகழ் கொள்ள அரசாண்ட வீரர் மரபில் வந்தவனே! ஒன்று பத்து எனத் தொடரும் எண்ணிக்கையில் இறுதி எண்ணாகிய கோடி இலட்சங்கோடி எனும் பேரெண்ணிக்கை உடையதாக நீ வாழ்க! நின் வாழ்நாள் வளர்க! நீரின் மேல் படர்ந்த சிறு காஞ்சிப் பூக்கண்டு மயங்கும், வாளையும் சிறு ஆரலும், பெரிய வராலும், சூரிய கெளிறும் ஆகிய மீன்கள் நிறைந்த ஆழமான அகழியும், வானம் வரை உயர்ந்த நெடியமதிற் சுவரும் உடைய வள மிக்க பழம் பதிக்கு அரசே! பாண்டியனே வானுலகில், மறுமையில் அடைய விரும்பும், செல்வத்தை நீ வேண்டினாலும், இவ்வுலகத்தைக் காத்து நின்று அரசாளும் மன்னர் பலரை வென்று வேந்தர் வேந்தனாக நீ ஒருவனே இவ்வுலகம் முழுவதையும் அரசாள நினைத்தாலும் மிக்க புகமுடனே இவ்வுலகில் வாழ விரும்பினாலும் உன் ஆசை நிறைவேறுவதற்கான வழிகளைச் சொல்லுகிறேன். கேட்பாயாக பெருமைக்குரியவனே! நீரின்றி வாழ முடியாத இவ்வுயிர் உடலின் பசி நீங்க உணவு கொடுப்பவர்கள். அவ்வுடலக்கு உயிர் கொடுத்தவர்கள் ஆவார்கள்! எனவே உடலுக்கு உயிர் போன்றதாகும் உணவு உணவெனப்படுவது நிலத்தோடு சேர்ந்த நீர் ஆகும். எனவேதான், நீரும், நிலமும் திருத்தி விளைவுக்கு உதவியார்கள், உயிரும் உடலும் படைத்தளித்துக் காப்போர் என்னும் புகழுக்குரியவர் ஆகின்றனர். என்னதான் பரப்பளவில் உயர்ந்த தென்றாலும், வான் மழையை எதிர்பார்த்துக் கிடக்கும் வறண்ட பூமியால், அதனை யாளும் மன்னவனுக்கு ஒரு பயனும் உண்டாகாது. ஆகவே போரில் வல்ல பாண்டியன் நெடுஞ்செழியனே! நான் கூறிய இவற்றை மறவாது கைக் கொள்க. பள்ளத்தாக்குகளிலே நீரினைத் தேக்கி நீர்நிலைகளை உண்டாக்கியவர்களே, தாம்செல்லும் வானுலக இன்பங்களையும் புகழையும் இவ்வுலகில் பெற்று மகிழ்வோர் ஆவார்கள் அப்படி நீரினைத் தேக்கி விளைவுக்கு உதவாதவர்கள் இவ்வுலகில் தம் புகழை நிலை நிறுத்த முடியாதவர்கள் ஆவார்கள்.

பூக்கதூஉம்–பூவைக்கவரும், கெடியற்ற–கெளிறு என்னும் மீன்–மல்லல்–வளப்பம், படைத்திக்னோர்–படைத்தோர். தாட்இ–முயற்சிக்கு–தட்டு–நீர்நிலை.

## 8.9. போரிடும் வீரம் எனக்கு புகலிடமாகும்

பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடியது.

திணை – வாகை

துறை – அரசவாகை

இமிழ்கடல் வளைஇய ஈண்டுஅகல் கிடக்கைத்,
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து,
மன்னுயிர்ப் பன்மையும் கூற்றத்து ஒருமையும்,
நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய!
இரும்புலி வேட்டுவ என் பொறி அறிந்து மாட்டிய

பெருங்கல் அடாரும் போன்ம், என விரும்பி,
முயங்கினேன் அல்லனோ, யானே மயங்கிக்
குன்றத்து இறுத்த குரீஇ இனம் போல
அம்பு சென்று இறுத்த அரும்புண் யானைத்
தூம்பு உடைத் தடக்கை வாயொடு துமிந்து,

நாஞ்சில் ஒப்ப, நிலமிசைப் புரள,
எறிந்து களம் படுத்த ஏந்துவாள் வலந்தர்
எந்தையோடு கிடந்தோர், எம் புன் தலைப்புதல்வர்;
இன்ன விறலும் உளகொல் நமக்கு; என
மூதில் பெண்டிர் கசிற்தழ, நானிக்;

கூற்றுக் கண் ஒடிய வெருவரு பறந்தலை
எழுவர் நல்வலம் கடந்தோய்! நின்
கழூஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே

– குடபுலவியனார்.

குறிப்பு எழுத இடம்

திணை – வாகை, வாகைப் பூவைச் சூடிப் பகைவரை வெல்லுதல்

வாகை – வெற்றி

துறை – அரச வாகை, அரசனது வெற்றியைக் கூறுதல்.

ஒலிக்கும் அலைகடல் சூழ்ந்த–மண் திணிந்த–அகன்ற இவ்வுலகத் தமிழ் மன்னர் படைகள் ஒன்றோடொன்று போரிட்ட தலையாலங்கானம் என்னும் இடத்திலே போரிட்ட வீரர் பலர் ஆவர். அவ்வீரர் பலரின் உயிரைப் போரிலே குடித்த யானோ ஒருவனே ஆவான். போரிலே அப்படிப் பலரின் உயிரையும் கொன்று குவித்தயமன் நீதானோ என்று பலரும் ஐயமுறக் காரணமான வெற்றிவேல் ஏந்திய பாண்டியன் நெடுஞ்செழியனே! பெரிய புலியை அகப்படுத்த வேட்டுவன் மறைத்து வைக்கும் அடார்க் கல்லினைப் போலும் நின் மார்பைப் நானன்று தழுவினேன். அல்லவா? தினைப் புனங்களை விட்டுப் பயந்து ஒடிப்போய் மலையிடம் தங்கிக் குருவிக் கூட்டம் போல வீரர்கள் எய்த அம்பு யானையின் உடலெங்கும் தைத்து, அதன் துதிக்கையையும் துணித்துத் தலையில் வீழ்த்தியது. துளையுடைய அத்துதிக்கைகள் கலப்பையைப் போல நிலத்திலே கிடந்து புரள, அவற்றை வெட்டி வீழ்த்த ஏந்திய வாளுடன், வீர மைந்தர் தம் தந்தையுடன் இறந்து கிடப்பதைக் கண்ட மறக்குடி மகளிர், எம் தலைவனும் மைந்தரும் வீரப்போரிட்டு மடியும் பெரும் புகழ் எம்குடிக்கும் உரியதாயிற்றோ என்று ஆனந்தக் கண்ணீர் வடிக்க அவர்தம் வீர உணர்வைக் கண்டு அவ்வீரர் உயிர் குடித்து கூற்றுவன் கூட வெட்கிப் போய் நிற்பான். இத்தகைய கொடூரங்கள் நிறைந்த தலையாலங் கானத்துப் போர்காத்தில், முடி மன்னர்கள் இருவரையும் வேளிர் ஐவரையும் ஆக ஏழுவகையும் வென்ற புகழுடையவனே இத்தகைய வீரம் விளைவதற்குக் காரணமான மார்பல்லவா! நானன்று தழுவிய தூய முத்தாரணம் அணிந்த நின் மார்பு.

இமிழ் கடல்–ஒலிக்கும் கடல், வணாகிய–சூழ்ந்த, அடார்–கருங்கல் பாறைகளால் செய்த கற்பலகை, விலங்குகளைப் பிடிக்க வேடுவர்கள் வாயில்

குறிப்பு எழுத இடம்

புறத்தில் மறைவாகக் கட்டி வைக்கும், கற்பலகை, இறுத்த–தங்கிய, குரீஇ, இனம்–குருவிக் கூட்டம், தூம்பு–துளை, துமிந்து–அறுந்து, நாஞ்சில்–கலப்பை, வெருவரு–அஞ்சத்தக்க, பிறந்தலை–போர்க்களம், கமுஉ–கழுவிய, கவைஇய–அகத்திட்ட தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைக் குட புலவியனஞ் (குட நாட்டைச் சேர்ந்த வராதயின் புலியிடமை என்னும் இப்புலவர் குடப்புலவியனார் என்றழைக்கப்படுகிறார்). பாடிய இப்பாடல் வாருகத்தினை, அரச வாகைத் துறை சார்ந்தது புலியினைப் பிடிக்க மணவாக வேடுவர் வைத்திருக்கும் பாறைக் கல்லின் பின்புறம் தாங்களும் மறைந்திருப்பர். இப்படி வேடர்க்குப் பாதுகாப்பாகவும், புலிக்குப் பகையாகவும் உள்ள அபார்க் கல்லினைப் போற்றுபாண்டியன் நெடுஞ்செழியன் மார்பு பகைவர்க்கு எமனாகவும் புல்லியனர் போன்ற புலவர்க்கு அரணாகவும் உள்ளது என்னும் சிறப்புணர்த்துகிறது பாடல்.

### 8.10. மன்னன் வாழ்வு மக்களின் வாழ்வு

சேரமான் யானைக்கட்சேய்
மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பாடியது

திணை – வாகை

துறை – அரசவாகை

இரு முந்நீர்க் குட்டமும்,
வியல் ஞாலத்து அகலமும்,
வளி வழங்கு திசையும்,
வறிது நிலைஇய காயமும், என்றாங்கு
அவை அளந்து அறியினும், அளத்தற்கு அரியை

அறிவும் ஈரமும் பெருங்கணோட்டமும்;
சோறு படுக்கும் தீயோடு
செஞ் ஞாயிற்றுத் தெறல் அல்லது
பிறிது தெறல் அறியார் நின் நிழல் வாழ் வோரே;
திருவில் அல்லது கொலைவில் அறியார்;

நாஞ்சில் அல்லது படையும் அறியார்;
திறன்அறி வயவரொடு தெவ்வர் தேய, அப்
பிறர்மண் உண்ணும் செம்மல், நின் நாட்டு
வயவுறு மகளிர் வேட்டு உணின் அல்லது
பகைவர் உண்ணா அருமண்ணினையே;

அம்பு துஞ்சும் கடி அரணால்
அறம் துஞ்சும் செங்கோலையே
புதுப்புள் வரினும், பழம்புள் போகினும்
விதுப்புற அறியா ஏமக் காப்பினை;
அனையை ஆகல் மாறே,
மன்னுயிர் எல்லாம் நின் அஞ்சு ம்மே.

– குறுங்கோழியூர்கிழார்.

**தன் மதிப்பீட்டு வினா**

8. அரச வாகை – குறிப்பு தருக.

திணை – வாகை, வாகைப் பூவைச் சூடிப் பகைவரை வெல்லுதல்

வாகை – வெற்றி

துறை – அரச வாகை அரசனது வெற்றியைக் கூறுதல்.

குறிப்பு எழுத இடம்

பெரிய கடலினது ஆழத்தையும், விரிந்தகன்ற இவ்வுலகின் அகலத்தையும், காற்று செல்லும் திசையினையும், வான் பரப்பையுங் கூட அளந்தறிந்து விடல் கூடும். ஆனால் நின் அன்பும் அறிவும், ஆற்றல் பெருங்குணமும் அளவிட முடியாதனவாகும் சோறாக்க மூட்டும் நெருப்பின் வெம்மையும், சிவந்து தோன்றும் சூரியனது வெம்மையுந் தவிர, வறுமைத் துன்பம் போன்ற வேறு எத்தகைய வெம்மையும் அறியார்கள், நின் அருளாட்சியின் கீழ் வாழ்கின்ற மக்கள் வானில் தோன்றும் இந்திரவில்லை அவர்கள் அறிய மாட்டார்கள். அவர்கள் உழு படைகளைத் தவிர்த்து வேறு படைகளங்களும் அறிய மாட்டார்கள். போர் வல்ல வீர மறவர்களோடு சென்று பகையரசர் மண்ணைக் கவர்ந்தாளும் வேந்தே! நின்னுடைய நாட்டிலே கருவுற்ற மகளிர் வேட்கை மிகுதியால் உண்ண விரும்புவதல்லாமல் பகைவர் உண்ண நினைக்காத பெருநிலப் பரப்புடையவனே அம்புகள் தங்கிய மதிற் காவலும் அறந்தாங்கிய செங்கோலும் உடையவனே புதிய பறவை வரினும் பழைய பறவை இடம் விட்டுப் போனாலும், அதைக் கண்டு கொஞ்சமும் கலக்க மடையாமல் அமைதியாக அரண் வாழும் காவல் உடையது உன்னுடைய நாடு எனவேதான் உலகத்து உயிர்கள் எல்லாம் உன் மேல் வைத்து பேரன்பினால், உனக்குத் துன்பம் வருமென்றால் பயப்படும் இவ்வாறு மக்கள் எல்லாம் மன்னன் நலமே விரும்பி வாழும், பெருமை உடையவன் சேரன் இரும்பொறை என்பது புலவர் போற்றும் பொருள் புதுப் பறவை வருதலும், பழம் பறவை போதலும் நீ நிமித்தங்கள் என்றாலும், அது பற்றி மனங் கலங்காது மன்னன் மேல் வைத்த பேரன்பினால் மக்கள் மனங்கலங்காதவராயினார் என்கிறார் புலவர்).

இரும்–பெரிய முந்நீர்–கடல், குட்டம்–ஆழம், வளி–காற்று, காயம்–ஆகாயம், தெறல்–வெம்பை, வயவர்–பகைவர், வயவு–கருப்பம், புள்–பறவை, விதுப்புறல்–நடுங்குதல், மன்னன் நலமே மக்கள் விரும்ப, அறநெறி விழவாது அரசாளும் சேரமான் யானைகட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் புகழினைப் போற்றுக் குறுங்கோழியூர்க் கிழார் பாடிய இப்பாடல் வாகைத் திணை, அரச வாகைத் துறை சேர்ந்தது கருவுற்ற பெண்கள் மசக்கையால் மண் தின்ன விரும்புவர் "வயவுறு மகளிர் வேட்டு உணின் அல்லது பகைவர் உன்னை அருமண்–என்ற பாடல் வர்கள் கலிநயம் சொட்டும்தேன் கனிகள்.

## 8.11. தொகுப்புரை

மன்னனின் வாழ்வு எவ்வாறு மக்களின் வாழ்வாக மாறுகின்றது என்பதனையும், அரசர்களின் வலிமை, இல்லை என்று வருபவர்களுக்கு இல்லை என்று கூறாத அரசர்களின் நிலைப்பாடு மற்றும் பரிசில் வாழ்க்கை போன்றவற்றை அறிந்து கொள்ள முடிகின்றது.

குறிப்பு எழுத இடம்

## 8.12. தன் மதிப்பீட்டு வினாக்குரிய விடைகள்

1) 8.1   2) 8.2   3) 8.3   4) 8.4   5) 8.5

6) 8.6   7) 8.8   8) 8.10

## 8.13. பயிற்சி வினா

1. புறநானூற்றில் எதிரியின் நிலைப்பாடு யாது ?
2. சோழவேந்தரின் தோற்றப் பொழிவை விவரி.
3. புறநானூற்றில் வேள்வியின் சிறப்பைப் பற்றி விவரி.

அலகு - 9

# பதிற்றுப்பத்து

குறிப்பு எழுத இடம்

## முன்னுரை

பதிற்றுப்பத்து புறநானூற்றினைப் போன்று புறப்பொருள் பற்றிய நூலாகும் சேர, சோழ, பாண்டிய மன்னராம் மூவேந்தர்களைப் பற்றியப் புறநானூறு குறிப்பிடினும் நூல் முழுவதும் சேர மன்னர்களின் வரலாற்றுச் செய்தியைக் காலவொழுங்கின்படி விரித்துப் பேசும் நூல் பதிற்றுப்பத்து ஆகும். சங்க காலச் சேர மன்னர்கள் செங்கோண்மை, கொடைத்திறம், படைப்பெருமை வீரம் மிகுதி முதலியவற்றை மட்டுமன்றிச் சங்ககாலச் சேரமக்களின் வாழ்க்கை முறைகளையும் ஆடல் மற்றும் இசைக்கலைஞர்களாகிய கூத்தர், பாணர், பெருநர், விறலி முதுலியவர் பற்றிய செய்திகளையும் கூறுவதால் சங்கத்தமிழ் மக்கள் பற்றிய சிறந்த நூலாக இந்நூல் விளங்குவதால் பதிற்றுப்பத்து நம் பாடப் பொருளாக அமைந்துள்ளது.

## நோக்கம்

சேரவேந்தர்களைப் பாட்டுடைத்தலைவனாக வைத்துப் பாடப்படுகின்ற பதிற்றுப்பத்துயில் சேர மன்னர்களைப் பற்றிய அரசியல் செய்திகளும் குறிப்பாகத் தம் குடிமக்கள் மீது கண்ணோட்டமும், தம் பகைவர் மாட்டுக் கண்ணோட்டமில்லாது பொருதசினமும், வெற்றிக்களிப்பும், ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் அப்பத்தினைப் பாடினோர் அதன் பாட்டுடைத்தலைவர் அவர் செய்த அரும்பெருஞ்செயல்கள் போன்றவற்றை அறிவதையே நோக்கமாக கொண்டுள்ளது.

## பாட அமைப்பு

9. பதிற்றுப்பத்து விளக்கம்
9.1. ஆசிரியர் குறிப்பு
9.2. குறுந்தாண் ஞாயில்
9.2.1. அறாஅ யாணர்... உடற்றியோரே
9.2.2. போர் சுடு... தலைமடங்கு
9.2.3. பதிபாழாக... வாழுமோரே
9.3. மன்ன சூழ்ச்சியும்... வென்றிச் சிறப்பும்
9.3.1. இகல் பெருமையின்... கறுத்தோர் நாடு
9.3.2. நின்... மடம் பெருமையின்
9.3.3. துஞ்சல் உறூஉம்.... உடற்றிசினோர்க்கே
9.4. தொகுப்புரை
9.5. தன் மதிப்பீட்டு வினா
9.6. பயிற்சி வினா

## 9. பதிற்றுப்பத்து விளக்கம்

குறிப்பு எழுத இடம்

சங்கத் தொகை நூல்கள் எட்டுத் தொகையும் பத்துப் பாட்டுமென வகையால் இரண்டாகியும், வரியால் பதினெட்டாகியும் நிலவுவனவாகும். இவற்றுள் பதிற்றுப்பத்தென்பது எட்டுத் தொகையுள் ஒன்றாகும். இது பப்பத்தாக அமைந்த பத்துக்கள் பத்துக் கொண்டதென்றும் நூறு பாட்டுக்கள் கொண்டதென்றும் பதிற்றுப்பத்து எனப்படும். பெயராலே அறியலாம். இதன் ஒவ்வொரு பத்தும் ஒவ்வொரு சேர வேந்தனைப் பற்றி வேறு வேறு ஆசிரியர்களால் பாடப்பட்டுள்ளது. இந்த ஆசிரியன்மார்களும் சேர வேந்தர்களும் ஒரு காலத்தவராகவும் வேறு வேறு காலத்தவராகவும் காணப்படுகின்றனர். பதிற்றுப்பத்தென்னும் பெயர் இப்பாட்டுக்களைப் பப்பத்தாக எடுத்துத் தொகுத்தோரோல் இடம் பெற்ற பெயராதல் வேண்டும்.

சேர வேந்தர்களின் ஆற்றல் மிக்க ஒழுக்கலாறுகளைப் புலவர்கள் தம் பாடற்குரிய பொருளாகக் கொண்டு பாராட்டும் முறையில் இப்பதிற்றுப்பத்துப் பாடல்கள் யாவும் அமைந்துள்ளன. ஆகவே இத்தொகையின்கண் அமைந்த நூறு பாடல்களும் பாடாண் திணை என்ற ஒரு திணையையே பொருளாகக் கொண்டு பாடப்பெற்றன எனக் கொள்ளலாம் "பதிற்றுப்பத்து" நூலும் இவ்வாறே வருதலிற் பாடாண் திணை என்ற ஒரு திணையையே பொருளாகக் கொண்டு பாடப்பெற்றன எனக் கொள்ளலாம். இப்பாடல்களைத் தொகுத்தோர் ஒவ்வொரு பாடலுக்கும் திணையமைதி கூறாது, துறை வண்ணம், தூக்கு, பெயர் என்பவற்றை மட்டுமே குறித்துச் செல்லுதற்கு இதுவே காரணமாதல் வேண்டும். பதிற்றுப்பத்துப் பாடல்கள் யாவும், சேர வேந்தர்கள் அவ்வப்பொழுது நிகழ்த்திய கடற்போர் முதலிய வரலாற்றுச் செய்திகளையும் அவற்றைச் சிறப்பித்துப் பாடக் கருதிய புலவர்கள் தம் உள்ளத்திற் கருதிய எண்ணங்களையும் அவ்வெண்ணங்களைத் தேனினு மினிய செந்தமிழ்ப் பாடல்களால் அரசனுக்குணர்த்துந் திறங்களையும் தம் அகத்துக் கொண்டு விளங்கின்றன.

இத்தகு சிறப்பு வாய்ந்த பதிற்றுப் பத்தில் 8ம் பத்து என்பது நமக்குப் பாடமாக அமைந்துள்ளது.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

1. பதிற்றுப்பத்து விளக்கம் தருக.
2. அரிசில்கிழார் பற்றி குறிப்பு வரைக.

## 9.1. ஆசிரியர் குறிப்பு

**அரிசில் கிழார் :** இச்சான்றோரது இயற்பெயர் தெரிந்திலது அரிசில் என்பது சோழ நாட்டு ஊர்களுள் ஒன்று இவ்வூரருகே காவிரியின்றும், பிரிந்து சென்ற ஒரு கிளை அரிசிலாறு என வழங்குவதாயிற்று. இச்சான்றோர் இவ்வூர்க்கு உரியராய்க் கிழார் என்ற சிறப்புப் பெற்று வாழ்ந்த தொடு. நல்லிசைப்புலமை சிறந்து விளங்கினார். இந்நூல் எட்டாம் பத்தைப் பாடித் தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும் பொறைமைச் சிறப்பித்துள்ளார். இவ்விரும் பொறையையும் இவன் காலத்தே இவனைப் பகைத்துக் கெட்ட வேந்தர்களையும் சீர்தூக்கிப் பார்த்த அரிசில்கிழார் இறைம் பொறைபால் அறிவும் ஆண்மையும் கை வண்மையும் மிக்குற்றிருப்பது காணுகின்றார். பகைவர்பால் சூழ்ச்சித் தெளிவும், வினைத்திட்பமும் பொருள் படைகளாற் பெருமையும் இல்லாமையைத் தெரிந்தளிகின்றார். அதனால் அவர்கள் படைகோள் அஞ்சாமல் கழாது தணிந்து போருடற்றி உயிர்க்கேடும் பொருட்கேடும் உண்டாகுதலையறிந்து பாடுகின்றார்.

## எட்டாம் பத்து முதற்பாடல்

### 9.2. 1. குறுந்தாண் ஞாயில்

அறாஅ யாண ரகன்கட் செறுவின்
அருவியாம்ப னெய்தலொ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பருஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்

அம்பண வளவை யிறை குவித் தாங்குத்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும்
செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகாஅரின்
அலந்தனா பெருமநின் னுடற்றி யோரே
ஊரெர் கவர் வுருத் தெழுந் துரை இப்

போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதிலுவாய்த் தோன்ற லியாது தம்பழி யூக்குநர்
குண்டுக கைழிய குறுந்தாண் ஞாயில்
ஆரெயிற் றோட்டி வெளவினை யேறொடு
கன்றுண யாயந் தரீஇப் புகல் சிறந்து

புலவு வில் விளைய ரங்கை விடுப்ப
மத்துக்கயி நாடா வைகள் பொழுது நினையூஉ
ஆன்பயம் வாழ்நர் கழுவு டலை மடங்கப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து
விருந்தின் வாழ்க்கையொடு பொருந்திரு வற்றென

அருஞ்சூத் தருநிலை தாங்கிய புகர்துதல்
பெருங்களிற் றியானை யொ டருங்கலந் தராஅர்
மெய்பணி கரா வணங்கெனப் பராவலிற்
பள கொண்டு பெயரும் பாசம் போலத்
திறை கொண்டு பெயர்திந் வாழ்க நின்னுழி

உரவரு மடவரு மறவதெரிற் தெண்ணி
அறிந்தனை யருளா யாயின்
யாரிவ ணெடுந்தகை வாழு மோரே

துறை : செந்துறைப் பாட்டு

வண்ணம் : ஒழுகு வண்ணம் சொற்சீர் வண்ணமும்

தூக்கு : செந்தூக்கு

பெயர் : குறுந்தாண் ஞாயில்

### 9.2.1. 1-8 அறா அயாணர்.... உடற்றியோரே

**கருத்துரை :** நீங்காத புது வருவாயுடைய அகன்ற இடத்தையுடைய வயலில் நீரிலே மலர்ந்த ஆம்பலோடும் நெய்தற் பூவோடும் வயல்களில் வேலை

குறிப்பு எழுத இடம்

**தன் மதிப்பீட்டு வினா**

3. குறுந்தாண் ஞாயில் பற்றி விளக்குக.

குறிப்பு எழுத இடம்

செய்யும் மகளிர் அறுப்பர். அவ்விடத்தே இடமில்லாமையால் மிக நெருங்கிய கடாவிடும் களமாகிய போரடிக்கும் நெற்களத்தில் அவற்றைச் சேர்ப்பர். பின்னர் பருத்த எருமைகளால் மிதிக்கச் செய்து செந்நெல்லை உதிர்ப்பர். உதிர்க்கப்பட்ட செந்நெல்லினை மரக்காலால் அளத்தற்பொருட்டு குவித்தாற்போல, அக்குவியல் போன்ற கடுமையாகக் கொட்டுதலையுடைய குளவியானது மிகுந்த கூட்டம் தம்மிற் கூடினவாய்த் தூங்கும் செழுமையான கூடு. அந்தக் கூட்டைக் கலைத்த இளஞ்சிறுவர்களைப் போல, பெருமானே நின்னோடு மாறுபட்ட பகைவர் பின் மிக்க துன்பப்பட்டனர்.

(அ-ள்) அறா-நீங்காத, யாணர்-புதுவருவாய், செறு-வயல், நெல் முதலாயின இடையறாது விளைதலின் 'அறா அயாணர்ச் செறு' என்றார். அருவி-நீர் வினை-வேலை மலிந்த-அடுத்துள்ள என்னும் பொருளில் வந்துள்ளது. வெக்கை-போரடிக்கும் நெற்களம் பகடு-எருமை, செந்நெல்-ஒருவகை நெல், அம்பணம்-மரக்கால், உறை-சிற்றளவைக்குவிப்பு தேறு-தெறுதல், உறுகிளை-மிக்க குளவியினம். மொசிந்தன-மொய்த்து, முற்றெச்சம். துஞ்சும்-தூங்கும், கிளைத்த-கலைத்த, அலந்தனர்-வருந்தினர், நின் உடற்றியோர்-நின்னோடு மாறுபட்ட பகைவர்.

### 9.2.2. 9-17 போர் சுடு... தலைமடங்கு

சினங்கொண்டு புறப்பட்டுச் சென்று உலாவிப் பகைவர் ஊர்களை நெருப்பு விரும்பி உண்ணச் செய்தாய். அவ்வாறு போரின் கண்ணே பகைவர் ஊர்களைச் சுடுகின்ற, கமழ்கின்ற புகை திசைகளை மறைக்கவும் மதிலினிடத்தே மறைந்து வெளியே தோன்றாமல் தமது தீங்கைச் செய்ய முயல்பவரது ஆழ்ந்த இடத்தினையுடைய ஞாயில் என்னும் முடக்கறைகளைப் பெற்றதுமான, அருமையான மதிலினது காவலைக் கைப்பற்றிக் கொண்டாய். பின் அங்குள்ள காளைகளோடு கன்றுகளையும் உடைய பசுவின் மந்தையை நீ கைப்பற்றி நின் வீரர்களுக்குத் தருதலால் விருப்பம் மிக்கு, எய்த அம்பினையே மீண்டும் எய்தலால் புலால் நாறும் வில்லையுடைய வீரர் தம் அழகிய கையினின்றும் அவ்வாயுதத்தை விடுப்பர். இவ்வாறு தன் பசுக்களெல்லாம் நின்னால் கைப்பற்றப்பட்டமையால் மத்தினிடத்தே தயிரைக் கடைவதற்குக் கயிறு ஆடாமல் கழிந்துபோகின்ற நாட்களை நினைத்து வருந்தி ஆனினது பயன்களைக் கொண்டு (பால், தயிர், நெய், முதலிய பயன்களைக் கொண்டு) வாழ்கின்ற இடையர் தலைவனை வணங்கி நிற்க.

(அ-ள்). உரைஇ-உலாவி, மாதிரம்-திசை, ஊக்குநர்-முயல்வர், குண்டுகண்-ஆழமான இடம், குண்டுகண்ணகழி, வான்றோய் வன்ன புரிசை (புற.212-3) குறுந்தாள்-குறுகிய படிகளையுடைய தோட்டி-காவல், ஏறு-எருது, ஆயம்-பசுமந்தை, தரீஇ-தர, எச்சத்திரிபு. புகல் சிறந்து – விருப்பம் மிக்கு, புலவு – புலால் நாற்றம், இளையவர்-வீரர்.

### 9.2.3. 18-27 பதிபாழாக... வாழுமோரே

**கருத்துரை :** கழுவுள் வணங்கவும் அவன் மீது கொண்ட சினம் நீங்கி வேற்று ஊர்கள் பாழாகும்படி வேறுநாடுகளிலே போர் மேற்சென்றாய்.

வெல்லுதற்கரிய போரில் அரிய நிலையை எதிர்நின்று தடுத்த, புள்ளிகள் பொருந்திய நெற்றியையுடைய பெரிய ஆண்யானைகளோடு அருமையான ஆபரணங்களைத் திறையாகத் தருதலில்லாத பகைவர் புதிதாகத் தாம்தேடும் செல்வத்தோடு, தம் முன்னோர் தேடி வைத்த பெரிய செல்வம் அழிந்ததெனக் கருதி அவர்கள் உடம்பு நடுங்குதல் மிக்கு, வருத்தும் தெய்வமென்று நின்னைப் பரவித்திறையிடுகின்றனர். எனவே தன்னாற் பற்றப்பட்டாரது உயிரைக் கொள்ளாமல் தனக்கு இட்ட பலியை மட்டும் ஏற்றுக் கொண்டு நீங்கும் பேய்போலத் திறையைக் கொண்டு நீ மீண்டு செல்கிறாய். பால்வரை தெய்வத்தால் நினக்கு அறுதியிடப்பட்ட நின் நாட்கள் வாழ்க.

குறிப்பு எழுத இடம்

அறிவுடையோரையும் அறிவில்லாதோரையும் தெரிந்து அவர்களுடைய அறிவின் அளவை ஆராய்ந்து அவரவர் தகுதிக்கேற்ப அருள் செய்யாயாயின் நெடுந்தகையே! இவ்வுலகத்தில் வாழ்வோர் யார்?

(அ–ள்) பதி–ஊர், புலம்–நாடு படர்ந்து–சென்று, விருந்து–புதுமை, வாழ்க்கை–செல்வம், சமத்து–போரில், பனி–நடுக்கம், அணங்கு–வருந்தும் தெய்வம், பெயரும்–சொல்லும்.

## 9.3. மன்னவனது சூழ்ச்சியுடைமையும் வென்றிச் சிறப்பும்

துறை : செந்துறைப் பாடாண் பாட்டு

வண்ணம் : ஒழுகு வண்ணம்

பெயர் : உருந்து எழு வெள்ளம்.

இகல் பெருமையின் படைகோள் அஞ்சார்,
சூழாது துணிதல் அல்லது, வறிது உடன்
காவல் எதிரார், கறுந்தோர் நாடு; நின்
முன் திணை முதல்வர்க்கு ஓம்பினர் உறைந்து,
மன்பதை காப்ப அறிவு வலியுறுத்தும்

நன்று அறி உள்ளத்துச் சான்றோர் அன்ன, நின்
பண்பு நன்கு அறியார், மடம் பெருமையின்;
துஞ்சல் உறூஉம் பகல் புகு மாலை
நிலம் பொறை ஒராஅ நீர் ஞெமரவந்து ஈண்டி,
உரவுத் திரை கடுகிய உருந்து எழு வெள்ளம்

வரையா மாதிரத்து இருள் சேர்பு பரந்து,
ஞாயிறு பட்ட அகன்று உரு கூட்டத்து
அம் சாறு புரையும் நின் தொழில் ஒழித்து,
பொங்கு பிசிர் நுடக்கிய செஞ்சுடர் நிகழ்வின்
மடங்கல் தீயின் அனையை,
சினம் கெழு குருசில்! நின் உடற்சினோர்க்கே.

குறிப்பு எழுத இடம்

### 9.3.1. 1-3 இகல் பெருமையின்... கறுத்தோர் நாடு

**கருத்துரை :** நின்னொரு பகை கொண்டோர் நின்மீது கொண்டுள்ள பகை பெரிதாகையினால் நினக்கு அஞ்சாராகிப் படைகொள்ளுதலை ஆராயாமல் நின்மீது படையெடுக்கத் துணிகின்றனர். நீ பெருங்காலத்து அப்பகைவர் தம்முள் ஒன்று கூடினும் தம்தம் நாட்டைச் சிறிதும் காத்துக் கொள்ளலை மாட்டாராயினர்.

**விளக்கம் :** இகல்–பகைமை, பெருமையின்–பெரிதாகையால், படைகோள்–படை எடுக்க, அஞ்சார்–அஞ்சாது, முற்றெச்சம்; பகைவர் சேரனோடு கொண்ட பகை பெரிதாகையில் அவன் பேராற்றலுக்கு அஞ்சாமல் படையெடுக்கத் துணிதலின் 'இகல் பெருமையின்...... படைகோளஞ்சார்' என்றார். சூழாது–ஆராயாது. ஆராய்தல.......... வது வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும் துணைவலியும் ஆராய்ந்து முடிவு செய்தலாம். வறிது–சிறிது; உரிச்சொல், உடன்–பலர் ஒன்றாகக் கூடியும், காவல் எதிரார்–காக்க மாட்டார். உடன் காவல் எதிராரென்றது நின்னொடு கறுத்தோர்–பகைவர், கறுத்தோர் இகல் பெருமையின் அஞ்சார், சூழாது படைகோள் துணிதல் அல்லது அவர் பலர் உடன்கூடினும் நாடு வறிது காவல் எதிரார்.

### 9.3.2. 3-7 நின்... மடம் பெருமையின்

**கருத்துரை :** நின் குடியில் நினக்கு முன்பு இருந்த அரசர்களுக்குப் பாதுகாவலைச் செய்தனராகி வாழ்ந்து மக்களினத்தைக் காப்பதற்குரிய அறிவுகளை வற்புறுத்திக் கூறியவரும், தருமத்தை அறிந்து உள்ளத்தையுடையவருமாகிய அமைச்சர் ஒத்த சிறந்த சூழ்ச்சித் திறமுடைய நின் பண்பைத் தம்முடைய அறியாமை பெரிதாகையால் நின் பகைவர் நன்றாக அறியமாட்டாராயினர்.

**விளக்கம் :** நின் முன் திணை முதல்வர் – நினது குலத்து முன்னோர், திணை–குலம்; சேரனது குடியை, ஓம்பினர்–பாதுகாத்து, முற்றெச்சம் இச்சேரன் குடியில் இவனுக்கு முன்பிருந்த அரசர்க்கு வந்த துன்பங்களைச் சான்றோர் நீக்குமாறு அறிந்து நீக்கியும் பின் அப்பெற்றியன வாராவண்ணம் பாதுகாத்து அவரோடு உறைதலின் முதல்வருக்கு ஓம்பினர் உறைத்து' என்றார்.

மன்பதை – மக்கள் கூட்டம் அறிவு – அறிவுரை 'அறிவு வலியுறுத்தும்' என்றது காமம், வெகுளி முதலியனவற்றால் அறிவு மயங்கிய வழியும் அஞ்சாது அறிவுரையை வற்புறுத்திக்கூறல் என்றவாறு நன்று – தருமம்; அறம். சான்றோர்– இங்குச் சான்றோர் என்றது அமைச்சரை உணர்த்திற்று, அறிவு வலியுறுத்தும் சான்றோர், 'நன்று அறி உள்ளத்துச் சான்றோர்' என இயையும், மடம் பெருமையின் பண்பு நன்கு அறியார் என இயைக்க.

### 9.3.3. 8-16 துஞ்சல் உறூஉம்... உடற்றிசினோர்க்கே

**உரை :** எல்லாயுயிர்களும் இறக்கின்ற ஊழிக் காலத்தின் இறுதி புகுகின்ற போது நிலவுலகின் பாரம் நீங்க நீரானது எங்கும் பரக்கும்படி வந்து நெருங்கும். அந்நீரில் உலாவுதலையுடைய அலைகள் விரைந்து வீசும். இவ்வாறு உயிர்களைக் கொல்லுதற்குச் சினந்து எழுகின்ற வெள்ளம், எல்லை

இன்னதென்று வரையறுத்து அறிதற்கு இயலாத திசைகளில் இருளொடு சேர்ந்து பரக்கும். அப்போது அவ்வெள்ளத்தைப் போக்கச் சூரியர் பன்னிருவரும் சேர்ந்து தோன்றி வரும் கூட்டத்தையுடைய அழகிய விழாவைப் போல, எல்லார்க்கும் இன்பத்தைச் செய்கின்றாய். சினம்பொருந்திய தலைவனே! நீ நினது அத்தகைய இன்பத்தைச் செய்யும் செயலை ஒழித்து, நின்னோடு மாறுபட்ட பகைவருக்குப் பொங்குகின்ற பிசிரையுடைய, வெள்ளத்தை வற்றச் செய்யும் பொருட்டு சிவந்த ஒளி திகழ்தலையுடைய வடவை என்னும் ஊழித்தீயைப் போன்றனை;

குறிப்பு எழுத இடம்

**விளக்கம் :** துஞ்சல் உறூஉம்–இறந்துபடுதலைப் பொருந்தும், பகல்–ஊழிக்காலம், மாலையென்றது அவ்வூழியின் முடிவினை; பொறை–பாரம், ஒராஅ–நீங்க, எச்சத்திரிபு; ஈண்டி–ஈண்ட, ஞெமர–பரக்கும்படி, எச்சத்திரிபு; உரவு–உலாவும், கடுகிய–விரைந்து வீசுகின்ற; உருத்து எழு–சினங்கொண்டெழுகின்ற; ஊழி பற்றிய குறிப்பு 'பனியொடு தண்பெயறலைஇய வூழியும்" (பரி.உச் 8–9) எனவும் "நிலமறைவது போல்–ஊழிக்கண் நிலமறையும், வெள்ளம்போலே" (பரி.6:3 பரிமேல) எனவும் பிறவிடத்து வருதல் காண்க. அலைவிரைந்து சென்று உயிர்களைக்கொல்லச் சினந்து எழுவது 'உருத்துவரு மலிர்நிறை" (பதிற் 28:12) என முன்னரும் சுட்டப்படுதல் காண்க. வரையா–எல்லயறியப்படாத, மாதிரம்–திசை, இருள் சேர்பு–இருளொடு சேர்ந்து, அவ்வெள்ளமிகுதியால் தோன்றும் இருள், இருளொடு என ஒடு வருவிக்க, பரந்து–பரக்க, எச்சத்திரிபு; ஞாயிறு–சூரியன், பட்ட–தோன்றிய, அகன்றுவரு–பரந்து வருகின்ற, கூட்டத்து–பன்னிரு சூரியர்களும் தோன்றித் தம் கதிர்களை விரித்துப் பரந்து வருகின்ற கூட்டத்தோடு சேர்ந்த, ஞாயிறு பட்ட கூட்டத்து எனவும் அகன்றுவரு கூட்டத்து எனவும் இயைக்க. கூட்டத்து மடங்கல் தீயின் அனையை எனவும் நின் உடற்றிசினோர்க்கு நின் தொழில் ஒழித்துக் கூட்டத்து மடங்கல் தீயின் அனையை எனவும் கூட்டுக. அம்சாறு–அழகிய விழா, புரையும்–ஒக்கும், யாவர்க்கும் இன்பம் செய்வது போன்று இரும்பொறையும் தன் செயலால் யாவர்க்கும் இன்பம் செய்பவன். பொங்கு பிசிர்–மிக்கநீர்த்துளி களையுடைய வெள்ளம், நுடக்கிய–அழிக்க, செய்யிய என்னும் வினையெச்சம். செஞ்சுடர் நிகழ்வின்–சிவந்த தீக்கொழுந்துகள் தோன்றுதலையுடைய, மடங்கல் தீ–வடவைத் தீ. சூரியரோடு கூடிய வடவைத்தீ (பதிற்.62:6–8) சூரியர் படைத்தலைவருக்கும் வடவைத்தீ சேரனுக்கும் உவமை என்பது உ.வே.சாமிநாதய்யர் அவர்கள் உரை. ஊழியின் இறுதியில் உலகமெல்லாம் இருள் பரவுமெனவும் கடல் பொங்கி எழுந்து நீரால் உலகத்தையே மூடுமெனவும் பின்னர் பன்னிரு சூரியர்களும் வடவைத்தீயும் கிளர்ந்தெழுந்து இருளைப் போக்கி நீரையெல்லாம் வற்றச் செய்யுமெனவும் நூல்கள் கூறும்.

வடவைத்தீயினையொத்த இரும்பொறை, சூரியர்களையொத்த தன் படைத்தலைவர்களோடு சென்ற, பகைவர் படைவெள்ளத்தை அழிப்பன் என்பது கருத்து, 'நின் உடற்றிசினோர்க்கு தொழில் ஒழித்து மடங்கல் அனையை' எனக் கூட்டுக, மாலையில் பொறைஒருவ, நீர் வந்து இண்ட, திசை கடுகிய வெள்ளம் மாதிரத்து இருளொடு சேர்பு பரக்க, ஞாயிறுபட்ட கூட்டத்து மடங்கல் தீயனையை என இயைக்க.

குறிப்பு எழுத இடம்

## 9.4. தொகுப்புரை

குறுந்தாள்ஞாயில், வென்றிச் சிறப்புக்கூறி மன்னனுக்குப் பகைகள்மேல் அருள் பிறப்பித்தல் மற்றும் சேரலந்தர்கள் வீரர்கள், மற்றும் பரிசில் வாழ்க்கை போன்றவற்றை விளக்குவதாக அமைந்துள்ளது.

## 9.5. தன் மதிப்பீட்டு வினா

1) 9    2) 9.1    3) 9.2

## 9.6. பயிற்சி வினா

1. பதிற்றுப்பத்தைப் பற்றி விளக்குக.
2. சேரவேந்தனின் சிறப்புகளை விவரி ?
3. குறுந்தாண் ஞாயில் பற்றி விளக்குக.

அலகு - 10

# நெடுநல்வாடை

குறிப்பு எழுத இடம்

### முன்னுரை

பாத்துபாட்டு நூல்களில் ஒன்றாக காணப்படுவது நெடுநல்வாடையாகும். வாடைக்காற்று நிலையை ஆசிரியர் தலைவன் தலைவியின் புரிவுநிலையோடு ஒப்பிட்டு காட்டும் மிக சிறு இலக்கியம் நெடுநல்வாடை. இந்நெடுநல்வாடை முழுவதும் பாடப்பகுதிகளாக அமைந்துள்ளது.

### நோக்கம்

நெடுநல்வாடையில் இயல்பு, பாசறையின் நிலை, கூதிர்க்கால இயல்புகள், கொற்றவை வழிபாடு, தலைவியைப் பொருந்தவரை எவ்வாறு நெடிய வாடையாக உள்ளது. பகை முடித்து போர் மேற் சென்ற தலைவனின் நிலைப்பாடு போன்றவைகளை விளக்குவதே நெடுநல்வாடையின் இயல்பாகும்.

### பாட அமைப்பு

10. நெடுநல்வாடை விளக்கம்
10.1. நெடுநல்வாடை கோவலர்வாடையால் துன்புறுதல்
10.2. கூதிர்காலம்
10.3. ஊரினது செழிப்பு
10.4. முழுவலிமாக்கள் தெருவில் சுற்றித்திரிதல்
10.5. மாலைக் காலத்தில் பெண்கள் தெய்வத்தை வணங்குதல்
10.6. கூதிர்காலம் நிலைபெற்றமையால் நேர்ந்த விளைவுகள்
10.7. அரசியின் அரண்மனை மனைவகுத்த முறை
10.8. கோபுறவாயில்
10.9. தோற்றமும் முன்வாயிலும்
10.10. அரண்மனையில் எழும் ஓசைகள்
10.11. அந்தப்புரத்தின் அமைப்பு
10.12. அரசிபடுத்திருக்கும் வட்டக்கட்டில்
10.13. கட்டிலின் மேல் அமைந்த படுக்கை
10.14. படுக்கையின் மேல் அரசி மலரணையில் வற்றிருத்தல்
10.15. சோடியரம் செவிலியரும் தலைவியைத் தேற்றுதல்
10.16. தலைவியின் வருத்த மிகுதி
10.17. பாசறையில் அரசன் நிலை
10.18. தொகுப்புரை
10.19. தன்மதிப்பிட்டு வினாக்குரிய விடைகள்
10.20. பயிற்சி வினா

## 10.0. நெடுநல்வாடை விளக்கம்

குறிப்பு எழுத இடம்

பத்துப்பாட்டு நூல்களில் ஏழாவதாக விளங்கும் 'நெடுநல் வாடை' என்னும் நூல், 188 அடிகள் கொண்ட ஆசிரியப்பாவால் அமைந்ததாகும். இதன் ஆசிரியர், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்பவர்.

பகை முடிப்பதற்காகப் போர் மேற் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் பிரிவுத் துயரை நீக்குவதற்காகச் செவிலித்தாய், அம்மன்னன் பகையை வென்று விரைவில் வருக எனக் கொற்றவையை வேண்டுவதாக இந்நூல் அமைந்துள்ளது.

தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு, ஒரு பொழுது ஓர் ஊழிக்காலம் போல நீண்டு தோன்றுவதால், வாடை, தலைவியைப் பொறுத்தவரை நெடிய வாடையாய் உள்ளது. இன்பத்தில் மனம் ஈடுபடுதலின்றி, வேற்று நாட்டிற்குச் சென்று, பாசறைக்கண் தங்கி, வினைபுரியும் தலைவனுக்கு, அவ்வாடைக்காலம் நல்ல வாடையாய் உள்ளது. இவ்விரு நிலைகளையும் உணர்த்துவதால் இப்பாடல் நெடுநல்வாடை எனப்பட்டது. அரசமாதேவியின் பிரிவுத் துயரமும், அரசனின் கடமை உணர்வும் இப்பாடல் அறியப்படுவன. (நெடிதாகிய, நல்லவாடை–நெடுநல்வாடை) வாடைக் காற்றுத் தோன்றும் கூதிர்க்கால இயல்புகளும் தலைவியின் நிலையும், அரசனின் பாசறை இருப்பும், செவிலித்தாயின் கொற்றவை வழிபாடும் இப்பாடலால் விளக்கப்படுகின்றன.

கூதிர்க் காலத்தில், மக்கள், விலங்கு, பறவை முதலியன குளிரால் வருந்தும் நிலை, அரண்மனை அமைப்பு, அரசமாதேவி துயில் கொள்ளும் அந்தப்புரம், வட்டக்கட்டில் சேர்க்கை ஆகியவற்றின் இயல்புகள் அரசியின் தோற்றம் ஆற்றாமை ஆற்றுவித்தல் ஆகியவை, பாசறைக்கண் அரசனின் நிலை, செயல் ஆகியவை இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன.

அகப்பொருட் செய்திகளை விளக்குவதால் இந்நூலை அகப்பாடல் என்று கருத இடமிருப்பினும் "வேம்பு தலையாத்த நோன்காழ் எஃகம்" எனப் பாண்டியனின் அடையாளப்பூ, சுட்டி உணர்த்தப்பட்டமையால் அகம் எனக் கருதப்படாது, புறத்திணையாகவே கொள்ளப்படும்.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

1. நெடுநல்வாடையை பாட்டுடைத் தலைவன் யார் ?
2. நெடுநல்வாடை அகமா ? புறமா ?

நச்சினார்க்கினியர், இப்பாடலை வாகைத் திணையின் கூறுபாடாகிய வாடைப் பாசறை என்னும் துறையுள் அடக்குவர். பாலையின் புறமாகக் கூறப்படும் வாகைத்திணை வெற்றியைக் குறிப்பதாகும்.

இன்பத்தை நுகர விரும்புவோர்க்குச் சிறந்த காலமாகிய கூதிர்க் காலத்தில்கூட, இன்பத்தில் வேட்கையின்றி, பகைவர் நாட்டிற்குச் சென்று பாசறையில் தங்கி, கடமையுணர்வில் சிறந்து விளங்கிய பாண்டியின் வெற்றியைக் கூறுவதால் இப்பாடல் புறத்திணைக் கூறாகிய வாகைத்திணை எனவே கொள்ளப்படும்.

மண்நசை காரணமாகப் போர் செய்தல், வஞ்சித்திணை எனப்படும் கொற்றவையை வெற்றி வேண்டி வழிபடும் வஞ்சித் திணைப்பகுதியும் வாகையெனவே கொள்ளப்படும். பாலைத்திணை, நடுவுநிலைத் திணை ஆதலால், வஞ்சிப்போரில் பெறப்படும் வெற்றியும் வாகையேயாகும்.

பத்துப்பாட்டு நூல்களில், திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை என்ற இரு நூல்களையும் இயற்றியவர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்பவர். நற்றிணையில் ஏழு செய்யுட்களும் குறுந்தொகையில் எட்டும், அகநானூற்றில் பதினேழும், இவரால் பாடப்பெற்றுள்ளது. இவர் இயற்றிய திருமுருகாற்றுப்படை பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது. இவர் இயற்றிய நாலடி நாற்பது என்ற நூல், அவிநயர் யாப்பிற்கு அங்கமாகிய யாப்பு நூல் என யாப்பருங்கல விருத்தியுரை கூறுகின்றது. இவர் பெயர் நக்கீரர், மதுரை நக்கீரர் எனப்பலவாறு வழங்கப்படுகின்றது. இறையனார் களவியல் உரைகண்ட நக்கீரர் எனபலரும் இருவரும் ஒருவரே என்பர்.

குறிப்பு எழுத இடம்

## 10.1. நெடுநல்வாடை கோவலர் வாடையால் துன்புறுதல் (1-8)

வையகம் பனிப்ப, வலன் ஏர்பு வளைஇ,
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென,
ஆர்கலி முனைஇய கொடுங்கோல் கோவலர்,
ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பி,
புலம்பெயர் புலம்பொடு கலங்கி கோடல்

நீடு இதழ்க் கண்ணி நீர் அலைக் கலாவ,
மெய்க்கொள் பெரும்பனி நலிய, பலருடன்
கைக்கொள் கொள்ளியர் கவுள் புடையூட் நடுங்க

(அ-ள்) வையகம்-உலகம், பனித்தல்-நடுங்குதல் புதுப்பெயர்-கார் காலத்து முதல் மழை ஆர்கலி-கடல் (மிக்க மழை வெள்ளத்தை உணர்த்திற்று; இனநிரை ஆடும்-இனங்களையும், பசுக்களையும், எருமையும் இனம் எனப்பட்டன. கோடல்-காந்தள், கவுள்-கன்னம்; கொள்ளியர்-நெருப்பினையுடையர்.

### கருத்துரை

பருவம் பொய்க்காமல் உரிய காலத்தில் மழையைத் தரும் மேகங்கள், தாங்கள் கிடந்த மலைப்பகுதியை வலமாகச் சூழ்ந்து மேலெழுந்தன. உலகமெல்லாம் குளிரும்படி அவை, கார்காலத்தில் புதுமழையைத் தந்தன.

இடையர்கள் தங்கள் பசு, ஆடு, எருமை முதலிய விலங்குகளை வருத்தும் கோலினை எப்பொழுதும் கையில் வைத்திருப்பர். தங்கள் மேய்ச்சல் தொழிலுக்கு இடையூறாக இருப்பதால் மழை நீரால் தோன்றும் பெரு வெள்ளத்தை அவர்கள் வெறுத்தனர். அவ்வெள்ளத்திலிருந்து தங்கள் விலங்குகளைக் காக்க விரும்பிய அவர்கள், மேட்டு நிலப்பகுதியாகிய முல்லை நிலத்தில் அவற்றை மேயவிட்டனர். தங்கள் பழகிய நிலப்பகுதியை விட்டு வேற்று நிலங்களுக்கு வந்த தனிமைத்துயரம் அவர்களை வருத்தியது.

**தன் மதிப்பீட்டு வினா**

3. கோவலர் வாடையில் எவ்வாறு துன்புறுகின்றனர் ?

அவர்கள், காந்தளின் நீண்ட இதழ்களால் கட்டிய மாலைகளைத் தங்கள் தலையில் சூடிக் கொண்டனர். அம்மலர் மாலைகளில் மழைநீர்பட்டு உடம்பில் தெறிப்பதால், உடம்பில் குளிர்ச்சி ஏற்பட்டது. அக்குளிர்ச்சியிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள, கைகளை நெருப்பருகில் காட்டிச் சூடேற்றி, அதன் வெம்மையைத் தங்கள் கன்னங்களில் வைத்துக் கொண்டனர். அவர்களின்

பற்கள், பறையடிப்பது போல் அடித்துக் கொண்டன. அவர்கள் குளிரால் நடுங்கினர்.

### 10.2. கூதிர்காலம்

குறிப்பு எழுத இடம்

மா மேயல் மறப்ப; மந்தி கூர
பறவை படிவன வீழ, கறவை
கன்று கோள் ஒழியக் கடிய வீசி,
குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப்பானாள்

(அ–ள்)

மா–விலங்குகள் கூர–குளர்ச்சி மிக

**கருத்துரை**

விலங்குகள் மேய்ச்சல் தொழிலை மறந்தன. குரங்குகள் குளிர்ச்சியால் உடல்குறுகிக்கிடந்தன. மரங்களில் தங்கியிருக்கும் பறவைகள், வாடைக்காற்று மிகுதியாக வீசுவதால், நிலத்தில் விழுந்தன. தாய்ப் பசுக்கள், பால் உண்ணும் தங்கள் கன்றுகளை உண்ணவிடாமல் உதைத்துத் தள்ளின. மலைகளைக் குளிர்ச்சியடையச் செய்வதுபோல் கூதிர்க்காலம் காணப்பட்டது.

### 10.3. ஊரினது செழிப்பு (13-28)

புன்கொடி முசுண்டைப் பொதிப்புற வான் பூ,
பொன் போல் பீரமொடு, புதல் புதல் மலர,
பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி,

இருங்களி பரந்த ஈரவெண்மணல்
செவ்வரி நாரையொடு, எவ்வாயும் கவர
கயல் அறல் எதிர, கடும் புனல் சாஅய்
பெயல் உலந்து எழுந்த பொங்கல் வெண்மழை
அகல் இரு விசும்பில் துவலை கற்ப

அங்கண் அகல்வயல் ஆர்பெயல் கலித்த
வண்தோட்டு நெல்லின் வருகதிர் வணங்க
முழு முதல் கமுகின் மணிஉறழ் எருத்தின்
கொழுமடல் அவிழ்ந்த குழூஉக்கொள் பெருங்குலை
நுண்நீர் தெவிள வீங்கி, புடைதிரண்டு

தெண்நீர்ப் பசுங்காய், சேறுகொள முற்ற;
நளிகொள் சிமைய விரவுமலர், வியன்காக்
குளிர்கொள்சினைய குரூஉத்துளி தூங்க

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

4. கூதிர் காலம் விலங்குகளின் நிலைப்பாடு யாது ?
5. வாடையிருவில் ஊரினது செழிப்பு யாது ?

(அ–ள்) பீரம்–பீர்க்கு சாஅய்–பற்றுதல் அறல்–அற்றநீர், களி–கரியவண்டல், கற்ப–கற்கும்படி; தோடு (இலை) தோகை வணங்க–வளைய; மணி–நீலமணி எருத்து–கழுத்து–நளி–செறிவு.

**கருத்துரை**

மென்மையான கொடிகளைக் கொண்ட முசுண்டையின் பூத்த திரண்ட வெண்ணிறப் பூக்களும், பொன் போன்ற நிறமுடைய பீர்க்கம் பூக்களும், பூத்துக் காணப்பட்டன.

குறிப்பு எழுத இடம்

பசுமை நிறமுடைய கால்களையும், வெண்மையான சிறகுகளையும் உடைய கொக்கின் கூட்டங்களும், சிவந்த கால்களையுடைய நாரைகளும், கரிய வண்டல்மண்ணோடு கூடிய சேறுபடிந்த ஈர நிலத்தின் மேற்பரப்பில் வெண்மணலில் எங்கும் நின்று கொண்டிருந்தன. மழையால் வருத்தமுற்ற அவை, மழை சிறிது விட்ட அளவில், இரைதேட எழுந்தன. வெள்ள நீர், வேகமாக ஓடும்போது, அதனுடன் அடித்துச் சொல்லப்பட்டு, அந்நீர் அற்று ஒழுகும் போது அதில் எதிர்த்து வரும் கயல்மீன்களைக் கொக்குகளும், நாரைகளும் உணவாகக் கவர்ந்து தின்றன.

மழை குறைந்தபின் நிர் குறைந்த வெண்மேகங்கள் பொங்கிக் கிளர்ந்து விண்ணில் எழுந்தன. கூதிர்க் காலத்தில் சிறுசிறு துவலைகளாகத் தூவக் கற்றுக் கொள்வதற்காக, அவை மேல் நோக்கி எழுந்தன.

வயல்கள் அகன்ற இடமுடையவை. அழகான தோற்றம் உடையவை. அவற்றில் நீர் நிரம்பியிருந்தமையால் நெல்லின் தோகைகள் வளமாகக் காணப்பட்டன. நெற் பயிர்களிலிருந்து கதிர்கள் வெளிப்பட்டு மேல் எழுந்தன. அவற்றில் நெல் மணிகள் முற்றியமையால் நெற்கதிர்கள் தலை சாய்ந்தன.

பாக்கு மரங்கள், பருத்த அடிப்பகுதியைக் கொண்டவை அவற்றின் கழுத்துப்பகுதி, நீலமணி போன்ற நிறத்துடன் காணப்படும் அப்பகுதியின் வளமான மடல்களிலிருந்து, பாளைகள் வெளிப்படும். அப்பாளைகளில், திரண்ட தாறுகளில், பாக்குக் காய்கள் தோன்றும். அவை, தெளிந்த நீரைத் தம்மிடம்கொண்டவை. அவற்றின் உள்ளே இருக்கும் நுண்ணிய நீர், வற்றுவதால் காய்கள் பழுத்துத் திரண்டு காணப்படும். பாக்குக் காய்கள், இனிமையுடைய பழங்களாய் முதிர்ந்து விளங்கும்.

அகன்ற சோலைகளில் உள்ள மரங்களில் உச்சியில், கூதிர் தோன்றுவதற்கு முன்பெல்லாம், பல்வேறு மலர்கள் பூத்துக் குலுங்கும், பலநிறமுடைய மழைத்துளிகளே, தங்கியிருந்தன. அவைகளும் வாடைக்காற்றினால் கீழே சிந்தி விழுந்த வண்ணம் இருந்தன.

## 10.4. முழுவலிமாக்கள் தெருவில் சுற்றித்திரிதல்

மாடம் ஓங்கிய மல்லல் மூதூர்
ஆறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்,

படலைக் கண்ணி, பரு ஏர் எறுழ் திணிதோள்,
முடலை யாக்கை முழுவலி மாக்கள்
வண்டு மூசுதேறல் மாந்தி, மகிழ் சிறந்து,
துவலைத் தண் துளி பேணார், பகல் இறந்து
இரு கோட்டு அறுவையர், வேண்டுவயின் திரிதர

(அ–ள்) மல்லல்–வளமை; படலை–தழை; ஏறுழ்–வலிமை, முடலை–முறுக்குண்ட; யாக்கை–உடம்பு மூசு–மொய்த்தல், தேறல்–தெளிவு–கள்; அறுவை–ஆடை.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

உயர்ந்த மாடங்களைக் கொண்ட வளம் நிறைந்த பழைய ஊர் ஒன்று இருந்தது. அதன் தெருக்கள், ஆறு கிடந்ததைப் போன்ற அழகுடன் அகன்றும், நீண்டும் காணப்படும்.

மிலேச்சர்கள், தழை விரவிக் கட்டிய மாலையைத் தலையில் அணிந்திருந்தனர். அவர்கள், பருத்த, அழகான வலிமைவாய்ந்த இறுகிய தோள்களை உடையவர் முறுக்கு ஏறிய உடம்பினையுடையர் உடல் வலிமை அனைத்தும் நிரம்பப் பெற்றவர். அவர்கள் வண்டுகள் மொய்த்துக்கிடக்கும், கள்ளினை அதிகமாக உண்டமையால் மிகவும் மகிழ்ச்சியடைந்தனர். சிறு தவலைகளாக வீசும் குளிர்ந்த மழைத் துளிகளை அவர்கள் பொருட்படுத்தவில்லை. தங்கள் தோளில், ஆடையை முன்னும் பின்னும் தொங்கவிட்டவாறு அணிந்திருந்தனர். அவ்வூரின் நெருக்களில், அம்மிலேச்சர்கள், தாம் விரும்பிய வண்ணம் விரும்பிய இடங்களில், பகற்பொழுது மட்டுமின்றிப் பிற காலங்களிலும் சுற்றித் திரிந்தனர்.

### 10.5. மாலைக் காலத்தில் பெண்கள் தெய்வத்தை வணங்குதல்

வெள்ளி வள்ளி வீங்கு இறைப் பணைத்தோள்,
மெத்தென் சாயல், முத்து உறழ் முறுவல்,
பூங்குழைக்கு அமர்ந்த ஏந்து எழில் மழைக்கண்,
மடவரல் மகளிர் பிடகைப் பெய்த
செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து (40)

அவ்இதழ் அவிழ் பதம் கமழ், பொழுது அறிந்து,
இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ,
நெல்லும் மலரும் தூஉய், கை தொழுது,
மல்லல் ஆவணம் மாலை அயர

(அ–ள்) வெள்ளி வள்ளி–வெளுக்கப்பட்ட சங்கு, வள்ளி–வளை இறை–முன்கை சாயல்–கட்டிலனாய்த் தோன்றும் மென்மை பிடகை–தட்டு பூக்கள் வைப்பதற்குரிய பூந்தட்டு) பித்திகை–பிச்சி, விளக்கு–தகளி, மல்லல்–வளமை, ஆவணம்–அங்காடித்தெரு.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

6. முதுவலிமாக்கள் யார்?
7. கூதிர் காலத்தில் பெண்கள் வழிபடும் முறையை விவரி.

**கருத்துரை**

மகளிர் வெண்ணிறச் சங்கினால் செய்யப்பட்ட வளையல்கள் செறிந்த முன்கையுடையவர், மெத்தென்ற, மூங்கில் போன்ற தோள்களையுடையவர். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளாலும் உணரப்படும் மென்மைத் தன்மையாகிய சாயலையுடையவர்; முத்துப் போன்ற பல்லினையுடையவர்; பொலிவுடைய மகரக்குழை அணிந்த காதின் அழகிய கண்களையுடையவர். பெண்களுக்கு இயல்பாகிய மடமைக் குணத்தைக்

கொண்டவர். இம்மகளிர், பசுமையான காம்புகளைக் கொண்ட செம்முல்லையின் அரும்புகளை, அழகிய பூந்தட்டுக்களில் இட்டு வைத்திருப்பர். அவை மலர்ந்து மணம் வீசுவதைக் கொண்டு, மாலைக் காலம் வந்தமையை அறிவர். இவ்வந்திப் பொழுதில், இரும்பினால் செய்யப்பட்ட விளக்கில் நெய் தோய்ந்த திரியைக் கொளுத்துவர். நெல்லையும் மலரையும் தூவிகை கூப்பி இல்லுறை தெய்வத்தை வழிபடுவர். வளம் நிறைந்த ஆவண வீதிகளில் மலைக்காலம் இவ்வாறு கொண்டாடப்பட்டது.

குறிப்பு எழுத இடம்

### 10.6. கூதிர்காலம் நிலைபெற்றமையால் நேர்ந்த விளைவுகள்

மனைஉறை புறவின் செங்காற் சேவல்
இன்புறு பெடையொடு மன்று நேர்த்து உண்ணாது
இரவும் பகலும் மயங்கி கையற்று
மதலைப் பள்ளி மாறுவன இருப்ப,
கடியுடைவியல் நகர்ச் சிறுகுறுந் தொழுவர்
கொள் உற நறுங்கல், பலகூட்டு மறுக

வடவர் தந்த வான் கேழ் வட்டம்
தென்புல மருங்கில் சாந்தொடு துறப்ப,
கூந்தல், மகளிர் கோதை புனையார்,
பல் இருங் கூந்தல் சில்மலர் பெய்ம்மார்
தண் நறுந் தகர முளரி நெருப்பு அமைத்தது

இருங்காழ் அகிலொடு வெள் அயிர் புகைப்ப,
கைவல் கம்மியன் கவின் பெறப் புனைந்த
செங்கேழ் வட்டம் சுருக்கி; கொடுந்தறி
சிலம்பி வால்நூல் வலந்தன தூங்க;
வான் உற நிவந்த மேல் நிலை மருங்கின்

வேனில் பள்ளித் தென்வளி தரூஉம்
நேர் வாய்க் கட்டளை திரியாது, திண் நிலைப்
போர் வாய்க் கதவம் தாழொடு துறப்ப;
கல்லென் துவலை தூவலின், யாவரும்
தொகுவாய்க் கன்னல் தண்ணீர் உண்ணார்

பகுவாய்த் தடவில் செந்நெருப்பு ஆர;
ஆடல் மகளிர் பாடல்கொளப் புணர்மார்,
தண்மையின் திரிந்த இன்குரல்தீம் தொடை,
கொம்மை வருமுலை வெம்மையில் தடைஇ,
கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை சிறுப்ப;

காதலர்ப் பிரிந்தோர் புலம்ப, பெயல் கனைந்து
கூதிர் நின்றல்றால்

**தன் மதிப்பீட்டு வினா**

8. கூதிர்காளாக விளைவுகள் யாவை ?

(அ–ள்) பெடை–பெண்புறா; சேவல்–ஆண்புறா; கையற்று–செயலற்று; தொழுவர்–வினைஞர்; தொழுவர்–வினைஞர்; கொள்–கருங்கொள்; தறி–

குறிப்பு எழுத இடம்

முளைக்கோல்; வான்–தேவர்உலகம்; தென்வளி–தென்றல்; கொள்உற நறுங்கல்–கருங்கொள்ளின் நிறமுடைய சாந்து அம்மி வட்டம் – சிலாவட்டம், வட்டமான கற்பலகை, நேர்வாய்க்கட்டளை–மாடத்தின் சாலேகம், போர் வாய்க்கதவம்–பொருத்தும் வாயுடைய கதவம், கன்னல்–கரகம், தடவு–இந்தளம், தூபமூட்டி, தொடை–நரம்பு கனைந்து–செறிந்து.

**கருத்துரை**

வீடுகளில் தங்கியுள்ள, சிவந்த கால்களையுடைய ஆண்புறாக்கள், தாம் இன்புறுவதற்குக் காரணமாகிய தங்கள் பெடையுடன், இரை தேடி உண்பதற்காக, ஊர் மன்றங்களுக்குச் செல்லாமல், இரவு என்றும் பகல் என்றும் அறியாமல் மயங்குகையால், தூண்களுக்கு மேல் அமைந்துள்ள, கொடுங்கைகளைத் தாங்கும் பலகைகளில், தங்கள் கால்களின் வலியைக் குறைத்துக் கொள்வதற்காகக் காலை மாற்றி மாற்றி ஊன்றி அமர்ந்திருந்தன.

கவலையுடைய அகன்ற வீடுகளில் சிறிய குற்றேவல் இளைஞர் பணி புரிவர் அவர்கள், கருங்கொள்ளின் நிறத்தைக் கொண்ட சாந்து அரைக்கும் அம்மியில், கத்தூரி முதலிய மணப் பொருள்களைச் சேர்த்துச் சார்ந்து அரைப்பர்.

வடநாட்டில் உள்ளவர், கொண்டு வந்து தந்த வெண்ணிறமுடைய சந்தனக்கல்லும், தென்நாட்டில் விளையும் சந்தனக்கட்டைகளும் பயன்படுத்தப்படாமல் கிடந்தன.

குளிர்ச்சியின் மிகுதியால், மகளிர் தங்கள் கூந்தலில் மலர் மாலையிட்டு முடிக்கவில்லை. பலவாக ஒப்பனை செய்யப்படும் தங்கள் கூந்தலில், சில மலர்களை இட்டு முடிக்க விரும்பினர். கூந்தலுக்குப் நறும்புகை கூட்டுவதற்காகக் குளிர்ச்சியைத் தரும் மயிர்ச் சந்தனம் என்னும் விறகில் தீ மூட்டினர். அதில், கரிய வயிரம் பாய்ந்த அகில் கட்டைகளையும் வெண்ணிறமுடைய கண்ட சருக்கரையினையும் சேர்த்து இட்டுப்புகை உண்டாக்கினர்.

பொருள்களில் உருவங்களைப் பதிக்கும் கலை சட்பம் வாய்ந்தவன். தன் கைகளால் அழகாக உருவாக்கிய சிவந்த நிறத்தைக் கொண்ட ஆலவட்டம், பயன்படுத்தப்படாமல் உறையில் கிடப்பட்டுக் கிடந்தது. அது வளைந்த முளைக்கோலில் தொங்குகிற்று. அதன் மீது சிலந்தியின் வெண்மையான நூல் பின்னிக்கிடந்தது.

விண்ணூலகத்தைத் தீண்டும்படி உருவாக்கப்பட்டுள்ள எழுநிலை பாடங்களில், மேல் மாடத்தில் இளவேனிற்பருவத்து உறங்குவதற்காகப் படுக்கைகள் இருக்கும். மாடங்களில் உள்ளோர், தென்றல் காற்றை வழங்கும் சாளரங்கள் ஓரமாகக் குளிரின் மிகுதியால் உலவச் செல்வதில்லை. மாடத்தின் இப்பகுதியில் அமைந்துள்ள கதவுகள், நெருக்கமாகக் காற்றுப்புக வழியின்றி உருவாக்கப்பட்டவை. அவை கூதிர்க் காலத்தில் மூடப்பட்டுத் தாழிடப்படும்.

வாடைக்காற்று, இப்பருவத்தில், 'கல்' என்ற ஓசையுடன் எங்கும் மழைத் துளிகளைத் தூவிற்று இளையரும், முதியவரும், குவிந்த வாயினையுடைய

நீருண் காலத்தில் இருக்கும் தண்ணீரை, நீர் வேட்கையின்மையால், படுக விரும்புவதில்லை. அவர்கள், உடல் குளிர்ச்சியைப் போக்கப் பிளந்த வாயினையுடைய நெருப்புக் குண்டத்திலிருந்து (கணப்புச்சட்டி) வெளிப்படும் தீயின் வெம்மையை.

குறிப்பு எழுத இடம்

ஆடல் தொழில் திறமை வாய்ந்த மகளிர், தாங்கள் பாடும் பாடலுக்குப் பொருத்தமாக, யாழின் நரம்புகளை மீட்ட முற்பட்டனர். குளிர்ச்சியால் தம் தன்மை வேறுபட்ட யாழின் நரம்புகளைச் சூடேற்ற விரும்பித் தங்கள் பருத்த முலையின் மீது யாழினைத் தடவி வெப்பமூட்டினர். கருமையான தண்டினைக் கொண்ட சீறியாழின் இசை தாங்கள் பாடும் பண்ணிசைக்கு ஏற்றவாறு அமையும் வண்ணம் நிலை நிறுத்தினர்.

கணவரைப் பிரிந்த மனைவியர், கார்காலம் முடிந்து கூதிர்க் காலத்தும் தம் காதலர் வாராமையால் தனிமைத் துயரடன் வருந்தினர்.

பொய்யாமல் உரிய காலத்தில் பெய்யும் கால மழையின் மிகுதியால் கூதிர்க் காலம் நீங்காமல் நிலை பெற்று விளங்கிற்று.

### 10.7. அரசியின் அரண்மனை மனைவகுத்த முறை (72-78)

போதே, மாதிரம்
விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்
இருகோல் குறிநிலை வழுக்காது குடக்கு ஏர்பு,
ஒரு திறம் சாரா அரைநாள் அமையத்து, (75)
நூல் அறி புலவர் நுண்ணிதின் கயிறு இட்டு,
தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி,
பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து

செவ்வாக்கு–சாதிலிங்கம், நாள்–உத்தரம்; ஐயவி–வெண்சிறு கடுகு, ஓங்குநிலை–கோபுரம்.

எல்லாத் திசைகளிலும், தன்னுடைய விரிந்த கதிர்களைப் பரப்பும், அகன்ற இடத்தையுடைய கதிரவன், மேற்குத்திசை நோக்கிச் செல்வதற்காக விண்ணில் எழுந்தது.

வடக்கிலும், தெற்கிலுமாகிய இரண்டு இடங்களில் இரு கோல்கள் நடப்பட்டு, அவற்றின் இடையே இடப்பட்ட குச்சிகளின், கிழக்கு மேற்காகத் தாரையாக ஓடும், ஞாயிற்றின் கதிர்பட்டு உண்டாகும் நிழல், ஒரு பக்கத்தைச் சாராமல், நேர் ஒழுங்காக வீழும் அமையம் குறித்துக் கொள்ளப்படும். அந்நாளில், அவ்வமையத்தில் அரசனுடைய அரண்மனை அமைப்பதற்காகத் 'திருமுளைச் சார்த்து' என்னும் சடங்கு செய்யப்பெறும்.

**தன் மதிப்பீட்டு வினா**

9. அரண்மனையின் அழகை விவரி ?

சிற்ப நூலை அறிந்த தச்சர்கள், நுட்பமாக, நூல் பிடித்துப் பார்த்துக் கட்டடங்கள் அமைக்கப் பெறும். அவர்கள் அரண்மனையின் ஒவ்வொரு பகுதியும், அமைய வேண்டிய திசைகளைக் கருத்தில் கொண்டு அத்திசைகளில் காவலாக நிற்கும் தெய்வங்களால் எக்குறையும் நேராவண்ணம், அவற்றிற்கு வழிபாடுகளை நிகழ்த்துவர். பெரும்புகழுடைய மன்னவர்களின் தகுதிக்கும்

தேவைக்கும் ஏற்ப மனைகளும் மண்டபங்களும் வாயில்களும் பாகுபடுத்தப்பட்டு அமைக்கப் பெறும்.

குறிப்பு எழுத இடம்

### 10.8. கோபுரவாயில் (79-88)

ஒருங்கு உடன் வளைஇ லுங்குநிலை வரைப்பின்
பரு இரும்பு பணித்து, செல்வாக்கு உரீஇ
துணைமாண் கதவம் பொருத்தி, இணை மாண்டு
நாளொரு பெரிய கோள் அமை விழு மரத்து
போது அவிழ் குவளைப் புதுப்பிடி கால் அமைத்து,
தாழொடு குயின்ற, போர்அமை புணர்ப்பின்,
கைவல் கம்மியன் முருக்கலின், புரைதீர்ந்து,

ஐயவி அப்பிய நெய்அணி நெடுநிலை,
வென்று எழு கொடியொடு வேழம் சென்று புக,
குன்று குயின்றன்ன லுங்குநிலை வாயில்

**கருத்துரை**

கட்டடங்கள் எல்லாவற்றையும் தம்முள் கொண்டதாக ஒரு சேர வளைத்து, உயர்ந்த நிலைகளைக் கொண்ட

மதிலின் வாயிலில் அமைக்கப்பட்டுள்ள கதவுகள், அணிகளும் பட்டங்களுமாகிய பருத்த இரும்புகளால் பிணிக்கப் பெற்றவை. அவை, சாதிலிங்கக் குழம்பினால் செவ்வண்ணம் பூசப் பெற்றவை. தாழ்ப்பாளுடன் சேர்த்து அமைக்கப்பட்ட இவ்விரு கதவுகளும், தம்முள் சிக்கென இணைந்து பொருந்துபவை. இருபத்தேழு விண்மீன்களில், உத்தரம் என்ற விண்மீனின் பெயரைக் கொண்ட கற்பலகை, வாயிலின் இருகதவுகள் அமைந்துள்ள நிலைக்கு மேல் செருகப்பட்டிருக்கும் இப்பலகையில், குவளையின் புதிய மலர்களை உயர்த்தித் தங்கள் துதிக்கைகளால் ஏந்திய பிடிகளின் உருவங்களும், அவற்றின் நடுவில் திருமகள் உருவமும் பொறிக்கப்பட்டிருக்கும்.

கைத்தொழில் வல்ல தச்சனால், இடைவெளி தோன்றாமல் பல மரங்களைச் சேர்த்து முடுக்கி, மதிலின் வாயில் உருவாக்கப்படும். அவ்வாயில் நிலை, நெய் பூசப்பட்டு, வெண் சிறு கடுகினால் தூவப்பெற்ற யானைகள் அரண்மனைக்குள் நுழைவதற்கு ஏற்றவாறு கோபுர வாயில் அகலமாகவும், உயரமாகவும் அமைந்திருக்கும். இவ்வாயில், மலையின் நடுவில் வெளியிடம் உண்டாகுமாறு திறந்தது போன்ற தோற்றத்தையுடையதாகும்.

**தன் மதிப்பீட்டு வினா**

10. கோபுற வாயில் கதவுகளின் வருணனை யாவை ?

### 10.9. தோற்றமும் முன்வாயிலும்

திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பின்
தரு மணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து
நெடுமயிர் எகினத் தூற்நிற ஏற்றை
குறுங்கால் அன்னமோடு உகளும் முன்கடை

(அ–ள்) எகினம்–கவரிமா உகளும்முன்கடை–கடைமுன்உகளும், உகளும்–தாவிப்பற்றல்.

**கருத்துரை**

திருமகள் நிலையாதத் தங்கும், குற்றமில்லாத சிறப்புடையதாக அரண்மனை முற்றம் விளங்கும். ஆற்று நீரனால் கொண்டு தரப்பட்ட புதுமணலால் பரப்பப் பெற்றதாக அம்முற்றம் காட்சியளிக்கும். நெடிய மயிரினையுடைய, தூய நிறம் கொண்ட கவரிமான்களும், குறுகிய கால்களைக் கொண்ட அன்னப் பறவைகளும் அரண்மனை வாயில் முற்றத்தில் தாவி விளையாடும்.

குறிப்பு எழுத இடம்

## 10.10. அரண்மனையில் எழும் ஓசைகள் (93-100)

பணைநிலை முனைஇய பல்உளைப் புரவி
புல் உணாத் தெவிட்டும் புலம்புவிடு குரலொடு
நிலவுப் பயன் கொள்ளும் நெடுவெண் முற்றத்து (95)

கிம்புரிப் பகுவாய் அம்பணம் நிறைய,
கலிந்து வீழ் அருவிப் பாடுவிறந்து, அயல
ஒலி நெடும் பீலிஒல்க, மெல்இயல்
கலி மயில் அகவும் வயிர் மருள் இன்இசை,
நளி மலைச் சிலம்பின் சிலம்பும் கோயில்

(அ–ள்) பணை–பந்தி, உளை–கேசாரி, பிடரி; புல்உணா–புல்லாகிய உணவு, கிம்புரி–மகரமீன், அம்பணம்–குழாய், பந்தம் கவிழ்ந்து–கலங்கி, பாடு–ஒலி, விறந்து–செறிந்து.

**கருத்துரை**

கத்திரிகையால் மட்டம் செய்யப்பெற்ற பிடரி மயிரினைக் கொண்ட குதிரைகள், தாம் கட்டப்பட்டுள்ள கட்டுத்தறிகளில் நிற்பதை வெறுகின்றன. அவை புல்லாகிய உணவைத் தின்று, குதட்டும் போது ஏற்படும் ஒலி, கேட்போர்க்குத் தனிமைத் துயரம் மிகுவிப்பதாய் இருக்கும்.

நிலாவின் பயனை நுகர்வதற்காக அமைக்கப்பட்டுள்ள வெண்ணிறமுடைய நிலா முற்றத்தில் பெய்த மழைநீர், மாடங்களிலிருந்து, கீழே இறங்கி விழுவதற்காக மகர மீனின் வாய்போலப் பிளந்த வாயினை உடையனவாய், மழை நீர்க் குழாய்கள் அமைக்கப்பட்டிருக்கும். அவற்றில், நீர் நிறைந்து கீழே விழும் ஒசை, அருவி ஓசையைப் போல விளங்கும்.

அரண்மனையைச் சார்ந்த இடங்களில், தழைத்த நீண்ட பிலி அசைய, மெல்லிய இயல்பும், செருக்கும் உடைய மயில்கள் அகவும் ஓசை தோன்றும், மயில்கள், தம் இனத்தை அழைக்கும் அவ்வொலி, ஊது கொம்பின் ஒலி போல் இனிமையாக இருக்கும். செறிந்த மலைப் பகுதிகளில் தோன்றும் ஓசைகளைப் போல அரண்மனையில் பல்வேறு ஒலிகள் தோன்றும்.

## 10.11. அந்தப்புரத்தின் அமைப்பு (101-114)

யவனர் இயற்றிய வினை மாண் பாவை
கை ஏந்து ஐ அகல் நிறைய நெய் சொரிந்து,

குறிப்பு எழுத இடம்

பருவத்திரி கொளீஇப் குருஉத்தலை நிமிர் எரி,
அறுஅறு காலை தோறும், அமைவரப் பண்ணி,
பல்வேறு பள்ளிதொறும் பாய்இருள் நீங்க,

பீடுகெழு சிறப்பின் பெருந்தகை அல்லது
ஆடவர் குறுகா சுருங்கடி வரைப்பின்
வரை கண்டன்ன தோன்ற, வரை சேர்பு,
வில் கிடந்தன்ன கொடிய, பல்வயின்
வெள்ளி அன்ன விளங்கும் கதை உரீஇ,

(அ–ள்) யவனர்–சோனர்; பாவை–பாவை வடிவில் செய்யப்பட்ட விளக்கு, அசல்–தகளி, பள்ளி–இடம், பாய்இருள்–பரவிய இருள், பெருந்தகை–பாண்டிய மன்னன், ஆடவர்–ஆண்மக்கள், வில்–இந்திரவில் (வானவில்), காழ்–தூண், நல்இல்–கருப்பக்கிரகம்.

**கருத்துரை**

யவன நாட்டினர், தங்கள் தொழில் திறம் விளங்குமாறு உருவாக்கிய பாவைகளின் கைகளில் ஏந்தியுள்ள, வியக்கத்தக்க தோற்றமுடைய அகல் நிறையுமாறு, நெய் ஊற்றப்படும். அவ்விளக்குகளில் நெய்வற்றுங்காலத்தும், விளக்குகளின் ஒளி மழுங்கும் காலத்தும், நெய்யை ஊற்றிச் சுடர்கள் துண்டிவிடப்படும். இச்செயலால், அர்ண்மனையின், வேறுபட்ட பல இடங்களில் பரவியுள்ள இருள் நீங்கும், பெருமையும் தலைமைப் பண்பும் உடைய பாண்டிய மன்னனைத் தவிர, பிற குற்றேவல் செய்யும் ஆண்மக்கள் ஒருவரும் அணுக இயலாத காவலைக் கொண்ட பல பகுதிகளையுடையதாக, அரசமாதேவியின் அந்தப்புரம் அமைந்திருக்கும்.

அந்தப் புரப்பகுதிகள், மலைகளைக் காண்பது போன்ற உயர்ந்த தோற்றம் உடையவை. மலைகளைச் சார்ந்து வானவில் கிடைப்பது போலப் பல நிறக் கொடிகள், அம்மடங்களில் தொங்கி அசையும், அந்தப்புரத்தின் தொங்கி அசையும். அந்தப்புரத்தின் பல இடங்கள், வெள்ளியைப் போன்றசாந்தினால் பூசப்பட்டவை. அவை நீல மணியைக் காண்பது போன்ற கரிய, திரண்ட வலிமை வாய்ந்த தூண்களைக் கொண்டவை. செம்பினால் உருவாக்கப்பட்டது போன்ற, தொழில் திறம் விளங்கும்படி அமைக்கப்பட்ட நீண்ட சுவர்களையுடையவை. அவற்றில் பலநிறப் பூக்களோடு கூடிய வல்லிக்கொடி, அழகு பெறச் சுற்றிலும் ஓவியமாகத் தீட்டப்பட்டிருக்கும். காண்பதற்கு இனிமையாக விளங்கும் நயன்மை வாய்ந்த அவ்வந்தப்புரம், கருத்தரங்கும் இல்லம் எனப் போற்றப் பெறுவதாகும் (கருஅறை–கருப்பகிரகம்).

### 10.12. அரசிபடுத்திருக்கும் வட்டக்கட்டில் (115-123)

தச நான்கு எய்திய பணைமருள் நோன்தாள்
இகல் மீக்கூறும், ஏந்து எழில் வரிநுதல்,
பொருது ஒழி, நாகம் ஒழி எயிறு அருகு எறிந்து
சீரும் செம்மையும் ஏப்ப, வல்லோன்

கூர் உளிர் குயின்ற, ஈர்இலை இடை இடுபு,
தூங்கு இயல் மகளிர் வீல்குமுலை கடுப்ப

புடைதிரண்டிருந்த குடத்த, இடைதிரண்டு
உள்ளி நோன் முதல் பொருத்தி, அடி அமைத்து,
பேர் அளவு எய்திய பெரும் பெயர்ப் பாண்டில்

தசம்–பத்து, தசநான்கு–நாற்பது, பணை–முரசு, நாகம்–யானை, வல்லோன்–தச்சன், உளி–சிற்றுவளி, ஈர்இலை–பெரிய இலைத் தொழில், தூங்கு இயல் மகளிர்–சூல் முற்றி அசைந்த இயல்புடைய மகளிர் பாண்டில்–வட்டக்கட்டில்.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

நாற்பது ஆண்டுகள் நிரம்பப் பெற்றதும், முரசு போன்ற வலிமை வாய்ந்த திரண்ட கால்களைக் கொண்டதும், போரில் தன்னுடைய ஆற்றலை மிகுத்துக்காட்டும் வலிமையுடையதும் சிறந்த அழகும், புள்ளிகளைக் கொண்ட நெற்றியும் உடையதும், போரில் இறந்துபட்டதும் அகிய யானையின் தானே வீழ்ந்த தந்தங்களை எடுத்து அவற்றின் திரட்சியும் செம்மையும் விளங்குமாறு. இருபுறத்தையும், தச்சன் தன்னுடைய கூர்மை வாய்ந்த சிற்றுளியால் நுட்பமாகச் செதுக்கி வட்டக்கட்டில் உருவாக்கப்பட்டது. அக்கட்டில், பெரிய இலை வடிவம் இடையே விளங்குமாறு இயற்றப்பட்டது. சூல் முற்றித் தளர்ந்த இயல்புடைய மகளிரின், பால் முற்றித் திரண்ட முலையைப் போல, பக்கம் உருண்டிருக்கும் குடத்தை உடையதாகக் கட்டிலில் கால் அமைந்திருக்கும்.

குடத்திற்கும் கட்டிலுக்கும் நடுவே உள்ள இடம், உள்ளியின் வேர்ப்பகுதி போல, நீண்டு விளங்கக் கட்டிலின் கால்கள் வலியவாய் இயற்றப்பட்டன. அக்கட்டில் அகன்ற அளவுடன் உருவாக்கப்பட்டதாகும். பெரும்புகழ் உடையதாக அவ்வட்டக் கட்டில் விளங்குவதாகும்.

### 10.13. கட்டிலின் மேல் அமைந்த படுக்கை (124-125)

மடைமாண் நுண்இழை பொலிய, தொடைமாண்டு,
முத்துடைச் சாலேகம் நாற்றி, குத்துறுத்து,

புலிப் பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத்

தகடு கண் புதையக் கொளீஇ, துகள் தீர்ந்து,

ஊட்டுறு பல்மயிர் விரைஇ வயமான்
வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து
முல்லைப் பல்போது உறப் பூ நிரைத்து,
மெல்லிதின் விரிந்த சேக்கை.

**தன் மதிப்பீட்டு வினா**

11. வட்டக்கட்டிலின் வருணனையை விவரி?

(அ–ள்) நாற்றி–தொங்கவிட்டு, புலிப்பொறி–புலியின் வரி பாண்டில்–கோக்கப்பட்ட கச்சுக்கட்டில், வட்டக்கட்டில் சாலேகம்–சாளரம் ஊட்டுறு பன்மயிர்–நிறம் ஊட்டப்பட்ட பல மயிர்க்கற்றை வயமான்–வலிமையுடைய விலங்கு, புலி; வேட்டம்–வேட்டை.

குறிப்பு எழுத இடம்

**கருத்துரை**

முத்துக்களைத் தன்னிடத்தே கொண்ட நூல், அழகு விளங்கும் வண்ணம், அக்கட்டிலின் நாற்புறமும் தொங்கவிடப்பட்டது. பன்னிறம் ஊட்டப்பட்ட மயிர்க்கற்றைகளை, படுக்கையின் நடுவிடத்தே பரப்பி, அவற்றின் மேல் சிங்கம் முதலிய விலங்குகளை வேட்டையாடுவது போன்ற காட்சிகள் பொறிக்கப்பட்ட தகடுகள் பதிக்கப்பட்டன. சாளரங்களாக விளங்கும் அத்தகடுகள், ஆணிகளால் தைக்கப்பட்டன.

இடமகன்ற காட்டுப் பகுதியில் பூத்த முல்லைப் பூக்களும், அவற்றில் வேறுபாடு புலப்படும்படி ஏனைய பல பூக்களும் கட்டிலின் மேல் நிரப்பப்பட்டன. கட்டிலின்மேல், இரண்டாய் அமைந்த படுக்கைகள் இணைத்து இடப்பட்டன. மென்மையான துணியால் அவை போர்த்தப்பட்டன. அப்படுக்கைகளின் மேல், தன்னுடைய துணையைப் புணர்ந்த அன்னச் சேவலின் தூய நிறமுடைய நுண்ணிய அடிகள் பரப்பப்பட்டன. அப்படுக்கைகளின் மீது அணைகள் இடப்பட்டன. கஞ்சியில் தோய்த்த மெல்லிய தூய மடிப்புடைய ஆடை அப்படுக்கைகளின் மீது விரிக்கப்பட்டது.

### 10.14. படுக்கையின் மேல் அரசி மலரணையில் வற்றிருத்தல்

துணை புணர் அன்னத் தூநிறத் தூவி
இணை அணை மேம்படப் பாய், இணை இட்டு,
காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்
தோடு அமை தூமடி அரிந்த சேர்க்கை (135)

ஆரம் தாங்கிய அலர் முலை ஆகத்துப்
பின் அமை நெடுவீழ் தாழ், துணை துறந்து,
நல்நுதல் உலறிய கில்மெல் ஒதி,
நெடுநீர் வார்குழை களைந்தென குறுங்கண்
வாயுறை அழுத்திய, வறிது வீழ் காதின் (140)

பொலந்தொடி தின்ற மயிர் வார் முன்கை,
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து
வாளைப்படுவாய் கடுப்ப வணக்குறுத்து,
செவ்விரல் கொளீஇய செங்கேழ் விளக்கத்து,
பூந்துகில் மரீஇய ஏந்துகோட்டு அல்குல் (145)

அம்மாசு ஊர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு
புனையா ஓவியம் கடுப்ப, புனைவுஇல்

**தன் மதிப்பீட்டு வினா**

12. கட்டிலின் வரைபடங்களை விவரி ?

(அ-ள்) ஆரம்-முத்து, ஆகம்-மார்பு, பின்-பின்னுதல், வீழ்-தாலி, துணை-அரசன்; ஒதி-மயிர், நெடுநீர்வார்குழை-பெரிய ஒளி ஒழுங்கியமகரக் குழை, நீர்மை-ஒளி, வாயுறை-தாளுருவி, வளை-சங்கு.

**கருத்துரை**

முன்பு, அரசமாதேவியின், முத்துக்கள் பதித்துச் செய்யப்பட்ட, கச்சுத் தாங்கிய பருத்த முலையைக் கொண்ட மார்பில், குத்தும் தன்மையைக் கொண்ட நீண்ட தாலி நாண் ஒன்று மட்டும் தொடங்கிக்கிடந்தது.

நலம் விளங்கும் நெற்றிப்பகுதி, ஒப்பனை செய்யப்படவில்லை. கூந்தல், சிலவாகப் பிரிந்தும், மென்மையாகவும் வறண்டும் காணப்பட்டது.

மிக்க ஒளியை வெளிப்படுத்தும் மகரக்குழை, காதுகளில் அணியப் பெறாமையால், அக்காதுகள் சிறிது தாழ்ந்து காணப்பட்டன. அவற்றின் சிறிய துளைகளில் தாலுருவிகள் மட்டும் அழுத்தப்பட்டிருந்தன.

குறிப்பு எழுத இடம்

முன்பு பொன்னால் செய்த வளையல்களை அணிந்தமையால் ஏற்பட்ட தழும்பினையுடைய மயிர் ஒழுங்கினைக் கொண்ட முன்கைகளில் இப்பொழுது, வலம்புரிச் சங்கினை அறுத்துச் செய்யப்பட்ட வளையல் அணிந்து, காப்புநாண் கட்டியிருந்தனள்.

வாளை மீனின் பிளந்த வாயைப் போன்று விளங்கும் வளைவினையுடைய பெரிய மோதிரம் அணிந்து சிவந்த விரலில், செந்நிறமுடைய நெளி என்னும் மெல்லிய மோதிரம் அணிந்திருந்தனள்.

முன்பு, பூ வேலைப்பாடுகளைக் கொண்ட துகிலை, உயர்ந்த யீவலைவினையுடைய அல்குலில் அணிந்திருந்தனள். இப்பொழுது, நூலால் ஆகிய அழகிய ஆடை, மாசுபடிந்து உடலில் கிடந்தது வ்ண்ணங்களைக் கொண்டு ஒப்பனை செய்யாமல், வடிவத்தை மட்டும் கோடிட்டுக் காட்டும் சித்திரத்தைப் போல அரசமாதேவி கட்டிலில் அமர்ந்திருந்தனள்.

### 10.15. சோடியரும் செவிலியரும் தலைவியைத் தேற்றுதல்

தளிர் ஏர் மேனி, தாய சுணங்கின்,
அம் பணைத் தடைஇய மென்தோள், முகிழ்முலை,
வம்பு வசித்து யாத்த, வாங்கு சாய் நுசுப்பின் (150)

மெல் இயல் மகளிர் நல் அடி வருட,
நரை விராவுற்ற நறுமென் கூந்தல்
செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்,
குறியவும் நெடியவும் உரைபல பயிற்றி,
இன்னே வருகுவர் இன் துணையோர் என
உகத்தவை மொழியவும் ஒல்லாள் மிகக் கலுந்தது

(அ–ள்) ஏர்–ஒத்த, தாய–பரந்த, சுணங்கு–தேமல் பணை–மூங்கில் தடைஇய–திரண்ட; வம்பு–கச்சை; நுசும்பு–இடை, இன்னே–இப்பொழுதே.

**கருத்துரை**

அரசமாதேவியின் கால்கள், கழுவப்பட்டாமலும், செம்பஞ்சுக் குழம்பு பூசப் பெறாமலும், பூண்கள் அணியப் பெறாமலும் இருந்தன.

புனையா ஓவியமாய்ச் சேர்க்கையில் கிடந்த அரசமாதேவியின் நன்மை வழங்கும் கால்களைத் தோழியர், உறக்கம் வருவதற்காக வருடினர்.

அத்தோழியர், மாந்தளிர் போன்ற அழகிய நிறம் உடையவர் மார்பில் பரவிய சுணங்கு உடையவர். அழகிய மூங்கில் போன்ற திரண்ட மென்மையான

தோள்களையுடையவர். கச்சினால் இறுகப் பிணித்துக் கட்டப்பட்ட, தாமரை மொட்டுப் போன்ற முலையையுடையவர். வளைந்து நெறியும் இடையினை உடையவர். மென்மையான இயல்புடையவர்.

குறிப்பு எழுத இடம்

நரை கலந்த, மணம் வீசும் மெல்லிய மயிரினையும் சிவந்த முகத்தையும் உடைய செவிலித்தாயர், அரசமாதேவியின் பிரிவாற்றாமை மிகுவது அறிந்து, அதனைத் தணிப்பதற்காக ஒருங்கு கூடினர். அவர்கள், பொருளொடு பொருந்தாத பொய்ம் மொழியும், மெய்ம்மொழியும் பொதிந்த உரைகள் பலவற்றைப் பலகாலும் கூறினர்.

செவிலித்தாயர், அரசமாதேவியைநோக்கி, "நினக்குத் துணையாக அமைந்தவர் இப்பொழுதே உருகுவர்" என அவள் மனத்திற்கு மகிழ்ச்சியைத் தரும் இனிய சொற்களைக் கேட்கும் மனஅமைதி கொள்ளாமல் மிகவும் கலங்கினாள்.

### 10.16. தலைவியின் வருத்த மிகுதி

நுண் சேறு வழித்த நோன்நிலைத் திரள் கால்
ஊறா வறு முலை கொளீஇய, கால் திருத்தி,
புதுவது இயன்ற மெழுகு செய் படமிசை,
திண் நிலை மருப்பின் ஆடு தலையாக, (160)

விண் ஊர்பு இழிதரும் வீங்கு செலல் மண்டிலத்து
முரண் மிகு சிறப்பின் செல்வனொடு நிலைஇய
உரோகிணி நிலைவனள் நோக்கி, நெடிது உயிரா,
மா இதழ் ஏந்திய மலிந்து வீழ் அரிப்பின்
செவ்விரல் கடைக்கண் சேர்த்தி, சில தெறியா (165)

புலம்பொடு வதியும் நலம்கிளர் அரியைக்கு
இன்னா அரும்படர்தீர, வீறல் தந்து
இன்னே முடிக தில் அ்ம்ம.

(அ–ள்) ஊறாவறுமுலை–கட்டிலின் குடத்திற்கு வெளிப்படை, நுண்சேறு–சாதிலங்கக் குழம்படம்–ஆடை, (மேற்கட்டி) ஆடு–மேடராசி (ஆட்டின் வடிவம்) மாஇதழ்–நீலப்பூ, வீழ்–விரும்புதல் புலம்பு–தனிமை.

#### கருத்துரை

குடங்களைக் கடைந்து பெருகப்பட்டனவும் சாதிலிங்கம் பூசிய வலிய நிலைகளையுடையனவும் ஆகிய மேற்கட்டியின் திரண்ட கால்கள், கட்டில் கால்களின் அருகில் நிற்குமாறு அமைத்து, அவற்றுடன் சேர்த்துக் கட்டப்பட்டன.

மெழுகு பூசப்பட்ட மேற்கட்டியின் மேல் புதியதாக ஓவியம் தீட்டப்பட்டது.

கதிரவன், ஆகாயத்தின் கண், வலிமை வாய்ந்த கொம்புகளைக் கொண்ட, ஆட்டின் பெயருடைய, மேட ராசி முதலாக ஏனைய இராசிகளிலும் சென்று இயங்கும் விரைந்து செல்லும் இயக்கத்தைக் கொண்டவன். அவனுடன் மாறுபட்ட இயக்கமுடையதும் தலைமையுடையதும், ஆகிய திங்கட் செல்வனை

உரோகிணி என்னும் நாள் மீன் எஞ்ஞான்றும் விட்டு நீங்காத இயல்பினைக் கொண்டதாகும்.

அரசமாதேவி, உரோகிணியைப் போலத் தானும் தன் கணவனைப் பிரியாமல் வாழும் பேறு பெறவில்லையே என நினைத்து மெழுகு செய் படத்தில் தீட்டப்பெற்ற அக்காட்சியைக் கண்டு பெருமூச்செறிந்தனள்.

குறிப்பு எழுத இடம்

அரசமாதேவி, நீலப்பூவும் விரும்பும் தம் கண்களில் நிரம்பிய கண்ணீர், கண்ணின் கடைப்பகுதியில் வருதல் அறிந்து, தன்னுடைய சிவந்த விரலைச் சேர்த்து, அக்கண்ணீயைக் கீழே செறித்தனன்.

அரசனைப் பிரிந்து, தனிமைத்துயருடன் கிடப்பதோடு, அவனிடம் ஒரு காலைக்கு ஒரு கால் பெருகும் அன்புடையவளாகவும் தலைவி விளங்கினாள்.

தலைவிக்குத் தீதாய் இருக்கும். ஆற்றுவதற்கரிய அவனைப் பற்றிய நினைவு, தீர்வதற்கு வேந்தன் பாசறையில் தங்கிச் செய்யும் போர்த் தொழில் அவனுக்கு வெற்றியைத் தந்து, இப்பொழுதே நிறைவு பெற வேண்டும் எனச் செவிலித்தாய், கொற்றவையை இறைஞ்சி வழிப்பட்டனள். இதுவே தன்னுடைய விருப்பமாகும் எனவும் சொற்றலையிடம் வழிபட்டு வேண்டிக் கொண்டனள்.

### 10.17. பாசறையில் அரசன் நிலை

மின் அவிர்
ஓடையொரு பொலிந்த வினை நவில் யானை
நீள் திரள் தடக்கை நில மிசைப் புரள,

களிறு களம் படுத்த பெருஞ்செய் ஆடவர்,
ஒன்று வாள் விழுப்புண் காணிய, புறம் போந்து,
வடந்தைத் தண் வளி எறிதொறும் நுடங்கி,
தெற்கு ஏர்பு இறைஞ்சிய தலைய, நன் பல
பாண்டில் விளக்கில், பரூஉச் சுடர் அழல.

வேம்பு தலை யாத்த நோன்காழ் எஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்ட, பின்னர்
மணி புறத்து இட்ட மாத்தாட் பிடியொடு
பருமம் களையாப் பாய்பரிக் கலிமா
இருஞ் சேற்றுத் தெருவின் எறிதுளி விதிர்ப்ப

புடைவீழ் அம்துகில் இடவயின் தழீஇ
வாள்தோட் கோத்த வன்கண் காளை
சுவல் மிசை அமைத்த கையன், முகன் அமர்ந்து
நூல் கால் யாத்த மாலை வெண்குடை
தவ்வென்று அசைஇ, தாதுளி மறைப்ப.

நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்,
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே

பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக்
கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது

குறிப்பு எழுத இடம்

(அ—ள்) ஓடை—நெற்றிப்பட்டம், பெருஞ்செய் ஆடவன்—பெரிய செயலையுடைய வீரர், விளக்கு—ஒளிச்சுடர், வடந்தைத் தண் வளி—வடதிசையிலிருந்து வீசும் குளிர்ந்த காற்று வேம்பு தலையாத்த—வேப்பம் பூ மாலையைத் தலையில் கட்டிய—பாண்டியர்களின் அடையாளப்பூ. மாத்தாள்பிடி—குதிரையின் வாய்க்கருவியில் கோத்து முடியும் தலைப்பகுதி பருமம்—சேணம்(பக்கரை) துகில்—ஆடை விசேடம் ஓவியம் சுவல்—தோள்.

### கருத்துரை

யானைகள், ஒளி விளங்கும் முகபடாம் அணிந்து பொலிவுடன் நிகழ்தவன. அவை போர்த் தொழிலில் மேம்பட்டவை. நீண்டும், திரண்டு உள்ள அவற்றின் துதிக்கைகள் அற்று, நிலத்தில் வீழ்ந்து புரளும்படி கொன்ற, செயற்கரிய செயலை வீரர்கள் செய்தனர்.

யானைகளைக் கொன்ற வீரர்கள், ஒளி வீசும் வாளால் வெட்டப்பட்டு விழுப்புண் உற்றனர். அப்புண்களைக் கண்ட அரசன், அவ்வீரர்களின் துயரத்தை நீக்குவதற்காகப் பாசறையில் தான் தங்கியிருந்த இடத்திலிருந்து புறத்தே போந்தனன். வேந்தன் பாசறைக் கண் வெளியே திரியும் போது, வடதிசையிலிருந்து குளிர்ந்த வாடைக்காற்று வீசிற்று.

கால்களை இணைத்து, அதன் மேல் வைக்கப்பட்டிருந்த விளக்கில், எரியும் சுடரின் பருத்த தீக் கொழுந்துகள், வாடைக்காற்று வீசுந்தோறும் அசைந்தன. அவை, தெற்கு நோக்கி வளைந்து, சாய்ந்த தலைப்பகுதியை உடையனவாய் எரிந்தன.

வேப்பம் பூ மாலையைத் தலைப் பகுதியில் கட்டிய, வலிய காம்பினைக் கொண்ட வேலினை ஏந்தியவாறு, படைத் தலைவன், புண்பட்ட வீரர்களை அரசனுக்கு முறையாகக் காட்டிச் சென்றனன். மணிகளைத் தன்னிடத்தேயுடைய பெரிய தாளினைக் கொண்ட குசை (கடிவாளம்) உடையதும், சேணம் நீக்கப் பெறாததும், பாய்ந்து செல்லும் செலவுடைய செருக்குக் கொண்ட குதிரைகள், கரிய சேறு பரவிய பாசறைத் தெருக்களில் தம்மீது வீசும் நீர்த்துளிகளை உதறின.

**தன் மதிப்பீட்டு வினா**

13. அரசரின் நிலை யாது?

அரசன், தன் இடத் தோளிலிருந்து நழுவிக் கீழே விழும் அழகிய ஆடையைத் தன் இடப்பக்கத்தில் அணைத்துக் கொண்டனன். வானிலைத் தன் தோளில் சார்த்தியுள்ள, தவகண்மையுடையவாள் வீரன் தோளில், தன்னுடைய வலக்கையை இட்டவாறு அரசன், புண்பட்ட வீரர்களின் வெண்கொற்றக் கொடை, நூலால் கட்டப்பட்ட முத்து மாலைகளைக் கொண்டதாகும்.

'தவ்' என்னும் ஓசை தோன்றும்படி, யாண்டும் பரவி வீசும் மழைத் துளிகளை, அவ்வெண்குடை, அரசன்மேல் விழாமல் மறைத்தது. 'நள்' என்னும் ஓசையையுடைய நடுயாமத்தும், உறங்கச் செல்லாமல், சில வீரர்களுடன், அரசன் பாசறையில் புண்பட்டோரின் வருத்ததைப் போக்குவதற்காகத் திரிந்த வண்ணம் இருந்தனன்.

சேரல், சோழன், திதியன், எழனி, எருமையூரன், இருப்கோ வேண்மான், பொருநன் என்ற எழுவருடன் மாறுபட்டுப் பாசறைக்கண் தங்கி, அரசன் செய்யும் போர்த்தொழில் அவனுக்கு வெற்றியைத் தந்து இப்பொழுதே முற்றுப் பெறுவதாகுக என்று செவிலித்தாய் கொற்றவையை வழிபட்டு வேண்டினள்.

குறிப்பு எழுத இடம்

## 10.18. தொகுப்புரை

நெடுநல்வாடையில் இயல்புகள், தலைவியின் பிரிவு துயரம், பாசறையில் அரசனின் நிலைப்பாடு, பகையை வென்று விரவில் வந்து தன் மகளின் சுவையைப் போக்குவதற்காக வழிகளையும் அவ்வாறு வாடையில் ஏற்படும் நிகழ்வுகளை நம்கண்முன் படம்பிடித்துக் காட்டுகின்றது.

## 10.19. தன்மதிப்பிட்டு வினாக்குரிய விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1) 10 | 2) 10 | 3) 10.1 | 4) 10.2 |
| 5) 10.3 | 6) 10.4 | 7) 10.5 | 8) 10.6 |
| 9) 10.7 | 10) 10.8 | 11) 10.12 | 12) 10.13 |
| 13) 10.17 | | | |

## 10.20. பயிற்சி வினா

1. நெடுநல்வாடையை விவரி.
2. பாசறையின் நிலைப்பாடுகளை விவரி.
3. நெடுநல்வாடை விளக்கம் தருக.
4. தலைவியின் வருத்த மிகுதியை விவரி.
5. அரண்மனையில் கட்டில், கோபுரவாயில்களைப் பற்றி விவரி.